# தொல்காப்பியம், சங்க இலக்கியம் - தலைவி கூற்று ஒப்பீடு

(எட்டுத் தொகை)

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (Ph.D.,) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**க. சொல்லேருழவன்**

மேற்பார்வையாளர்

முனைவர். **இரா. பாலசுப்பிரமணியன்**






தமிழ்த்துறை

**அழகப்பா பல்கலைக் கழகம்**

காரைக்குடி - 3.


ஜனவரி - 2006.

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன், எம்.ஏ.,எம்.ஃபில்., பிஎச்.டி., டி.ஜி.டி.
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்: 12 . 1 . 06.

# நெறியாளர் சான்றிதழ்

**"தொல்காப்பியம், சங்க இலக்கியம் - தலைவி கூற்று ஒப்பீடு"** என்ற தலைப்பில் **திரு.க.சொல்லேருழவன்** அவர்கள் செய்துள்ள இந்த ஆய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இவ்வாய்வின் மீது வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

(முனைவர்.இரா. பாலசுப்பிரமணியன்)
நெறியாளர்

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

திரு. க. சொல்லேருழவன், எம்.ஏ., எம்.ஃபில்.,
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்: 12.01.06

# ஆய்வாளர் உறுதிமொழி

**"தொல்காப்பியம், சங்க இலக்கியம் - தலைவி கூற்று ஒப்பீடு"** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காகச் செய்யப்பெற்ற இந்த ஆய்வு என் சொந்த முயற்சியில் உருவானதேயாகும். இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேட்டினை நான் அளிக்கவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

**(க. சொல்லேருழவன்)**
**ஆய்வாளர்**

உறுதிக் கையொப்பம்

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன், எம்.ஏ.,எம்.ஃபில்., பிஎச்.டி., டி.ஜி.டி.
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் ஆய்வு நிகழ்த்த அனுமதி வழங்கிய **அழகப்பா பல்கலைக்கழகத்தாருக்கும்**, முன்னாள் தமிழ்த்துறைப் பேராசிரியர் **முனைவர் தே. சொக்கலிங்கம்** அவர்களுக்கும் நன்றி.

ஆய்வுத் தலைப்பைத் தெரிவு செய்து ஆய்வு நெறியாளராக இருந்து வழிகாட்டி ஆய்வில் எழுந்த ஐயங்களை நீக்கி ஆய்வைச் செழுமையுறச் செய்த ஆய்வு நெறியாளர் **முனைவர் இரா.பாலசுப்பிரமணியன்** அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடப்பாடுடையேன்.

ஆய்விற்குத் துணைபுரிந்த அழகப்பா பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் **முனைவர் மு.பாண்டி, முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, முனைவர் சு.இராசாராம், திரு.மு.நடேசன்** ஆகியோருக்கும் என் நன்றிகள்.

ஆய்வுக் காவலர்களாக இருந்து ஆய்வேடு செம்மை பெற இறுதிவரை உழைத்த ஆய்வுச் சிற்பிகளான அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் **திரு.ம.கார்மேகம், முனைவர் ச.முருகேசன்** ஆகியோருக்கு என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன்.

இன்முகம் குறையாமல், ஆய்வை முடிக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்ட பேராசிரியர் **முனைவர் க.காந்தி, பேராசிரியை கே.கண்ணாத்தாள்** ஆகியோருக்கு நன்றி. மற்றும் ஆய்விற்குப் பல்லாற்றானும் உதவிய செல்வன். **சோ.முத்தமிழ்ச்செல்வன், செல்வி.சி.பரமேஸ்வரி, திருமதி. ப.செல்வமீனாள்** ஆகியோருக்கு நன்றி.

எனது கல்வி வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் உதவிய தாய் தந்தையர்க்கும் எனது குடும்பத்தைச் சார்ந்தவர்களுக்கும் நன்றி. ஆய்வினை விரைந்து முடிக்க வேண்டும் என்ற அவாக் கொண்ட **திருமதி. கவிதா பாலசுப்பிரமணியன்** அவர்களுக்கும் நன்றி.

இவ்வாய்வேட்டைச் செம்மையாகவும், நேர்த்தியாகவும் கணினியில் அச்சாக்கம் செய்த **காரைக்குடி நிதிஷ்பிரபா கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தாருக்கும், கட்டமைப்புச் செய்து கொடுத்த **இரவி அச்சகத்தாருக்கும்** என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத் | - | தொல்காப்பியம், பொருளதிகாரம் அகத்திணையியல் |
| அகநா, அகம் | - | அகநானூறு |
| இளம் | - | இளம்பூரணர் |
| இறை, அகப் | - | இறையனார் அகப்பொருளுரை |
| உ.ஆ., உரை. | - | உரையாசிரியர் |
| உ.கு.ஆ. | - | உரைக்குறிப்பு ஆசிரியர் |
| உவம். | - | தொல்காப்பியம், பொருளதிகாரம் உவமையியல் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஐந்.எழு., ஐந்.70. | - | ஐந்திணை எழுபது |
| ஐந்.ஐம்., ஐந்.50 | - | ஐந்திணை ஐம்பது |
| கலி, கலித். | - | கலித்தொகை |
| களவு | - | தொல்காப்பியம், பொருளதிகாரம் களவியல் |
| கழகம் | - | திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| குறள் | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| கைந். | - | கைநிலை |
| செய்யு. | - | தொல்காப்பியம், பொருளதிகாரம் செய்யுளியல் |
| தி.மாலை 150 | - | திணைமாலை 150 |
| தி.மொ.ஐ., தி.மொ.50 | - | திணைமொழி ஐம்பது |
| தொல். பொருள். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நச்சி. | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| நூற். | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |

| | | |
|---|---|---|
| பக். | - | பக்கங்கள் |
| ப. ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பா. | - | பாடல்கள் |
| பா.எ | - | பாடல் எண் |
| பொருளி. | - | தொல்காப்பியம், பொருளதிகாரம் பொருளியல் |
| மு. ஆ. | - | முனைவர்பட்ட ஆய்வேடு |
| மெய். | - | தொல்காப்பியம், பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல் |
| மேலது | - | மேலே உள்ள நூல் |
| மொ.எண். | - | மொத்த எண் |
| வ.எண் | - | வரிசை எண் |
| வி.கு | - | விளக்கக் குறிப்பு |
| வெ.ஆ | - | வெளியீட்டு ஆசிரியர் |
| p. | - | page |

# பொருளடக்கம்

செவ்வியல் இலக்கியங்களைத் தன்னகத்தே கொண்டு பல்லாண்டு காலமாகப் பேசப்பட்டு வருவதால் தொன்மையும் சிறப்பும் மிக்க தமிழ், இன்று செம்மொழியாக அறிவிக்கப் பெற்றுள்ளது. செம்மொழியின் செவ்வியல் இலக்கியங்களான சங்க இலக்கியமும், அவற்றிற்கு அடிப்படையாக அமையும் தொல்காப்பியமும் ஆய்வுலகிற்குக் கிட்டிய பெருங்கொடையாகும். தமிழ்ச் சமுதாயத்தின் வாழ்வியல் ஒழுகலாறுகளை வரையறை செய்ததில் தொல்காப்பியத்திற்கும் சங்க இலக்கியங்களுக்கும் இன்றியமையாத இடமுண்டு. பதினென் மேற்கணக்கு நூல்களாகக் கருதப்படும் சங்க இலக்கியங்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனப் பாகுபாடு செய்யப்பெற்றுள்ளன. மிகப் பரந்த எல்லைகளோடும், கருத்துக் குவியல்களாகவும் அமையும் சங்க இலக்கியம் ஆய்வாளர்களைப் பல்வேறு கோணங்களில் சிந்திக்கத் தூண்டியுள்ளது.

தமிழ்ச் சமுதாயம் நாகரிகம் படைத்த சமுதாயமாக வளர்ச்சி பெற, உயரிய சிந்தனைகளைக் கொண்டிலங்கும் சங்க இலக்கியமே அடிப்படையாக அமைந்தது; மக்கட் சமுதாயத்திற்கு வாழ்க்கை நெறிமைகளை வகுத்துத் தந்தது. சமுதாயத்தின் பிரதிபலிப்பாக விளங்கும் இவ்விலக்கியங்களுக்குக் கோட்பாடுகளை வரையறுத்துத் தருகிறது தொல்காப்பியம். அகவிலக்கியங்களுக்கு உரிய பாடுபொருள்களை அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல் ஆகிய ஐந்து இயல்களிலும் தொல்காப்பியர் மாந்தர்கள் கூற்றாக வெளிப்படுத்துகிறார். தொல்காப்பியரின் இலக்கணக் கோட்பாடுகளைச் சங்க இலக்கியங்களோடு பொருத்தி மதிப்பீடு செய்வது குறிப்பிடத்தக்க ஆய்வுப் போக்காக அமைந்துள்ளது.

## ஆய்வுத்தலைப்பு

தொல்காப்பியர், கூற்றுகளுக்குரியோர் எனக் குறிப்பிடுவோருள் தலைவி தலைமையிடம் பெறுபவர். சங்க இலக்கியங்களில் தலைவி கூற்றுப் பாடல்கள் எண்ணிக்கையில் மிகுதியாக அமைந்துள்ளன. இதனைக் கருத்தில் கொண்டு "தொல்காப்பியம், சங்க இலக்கியம்- தலைவி கூற்று ஒப்பீடு" என்ற தலைப்பில் ஆய்வு மேற்கொள்ளப்பெறுகிறது.

## ஆய்வு முன்னோடிகள்

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் வழி பழந்தமிழ் இலக்கியங்களை ஆராய்ந்தவர்களுள் கு.மோகனராசு "தொல்காப்பியமும் திருக்குறளும் ஓர் ஒப்பாய்வு" எனும் ஆய்வேட்டை 1978-இலும், க.ரத்தினம், "சங்க அகப்பாடல்களில் கூற்று" எனும் ஆய்வேட்டை 1976-இலும் வழங்கி இத்தகு ஆய்வுக்கு முன்னோடியாகத் திகழ்கின்றனர். கா.காளிமுத்து "தொல்காப்பிய இலக்கியக் கொள்கையும் குறுந்தொகையும்" எனும் ஆய்வேட்டை 1981-இலும், எம்.இராசாராம் "தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகளும் அகநானூறும்" எனும் ஆய்வேட்டை 1982-இலும் உருவாக்கி தொல்காப்பியத்தைச் சங்க இலக்கியத்தோடு ஒப்பிட்டு ஆய்வு செய்யும் போக்கிற்கு வலிமை சேர்த்தனர். இச்சூழலைக் கருத்தில் கொண்டு ஆய்வாளர் இவ்வாய்வுத் தலைப்பை அமைத்துக்கொண்டார்.

1986-ஆம் ஆண்டில் வி.கல்யாணி "சங்க இலக்கியத்தில் தலைவி" எனும் முனைவர்பட்ட ஆய்வேட்டினைச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் வழங்கியுள்ளார். அவ்வாய்வில் தொல்காப்பியர் குறிப்பிடும் தலைவி கூற்றுகள் சங்க இலக்கியத் தலைவி கூற்றோடு

ஒப்பீடு செய்யப் பெறவில்லை. ஆதலின் மேற்குறித்த முன்னோடிகளின் வழிநின்று தொல்காப்பியத்தில் இடம்பெறும்

தலைவி கூற்றுகளைச் சங்க இலக்கியத் தலைவி கூற்றோடு ஒப்பீடு செய்து ஆராயும் முயற்சி தேவையானதாகும்.

## கருதுகோள்

கள்வு, கற்பு என இரு பிரிவுகளாக அமையும் அகவொழுக்கத்தின் கண் நிகழும் தலைவி கூற்றுக் குறித்துத் தொல்காப்பியம் கூறும் இலக்கண மெய்ம்மைகளோடு சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள தலைவி கூற்றுப் பாடல்களை ஒப்பிட்டுப் பார்க்கும் நோக்கில் கருதுகோள் அமைகிறது.

## அணுகுமுறைகள்

தலைவி கூற்றுக் குறித்துத் தொல்காப்பியர் சுட்டும் இலக்கண மெய்ம்மைகள் குறித்த ஆய்விற்கு விளக்கமுறைத் திறனாய்வு (Descriptive Criticism) பயன்படுத்தப்பெற்றுள்ளது. இலக்கண மெய்ம்மைகளைச் சங்க இலக்கியங்களில் இடம்பெற்ற தலைவி கூற்றுப் பாடல்களோடு பொருத்திப் பார்ப்பதில் பகுப்பாய்வு அணுகுமுறையும் (Analytical Approach), இலக்கண மெய்ம்மைகளைச் சங்க இலக்கியங்களோடு இணைத்து நோக்குவதில் ஒப்பீட்டு அணுகுமுறையும் (Comparative Approach) மேற்கொள்ளப் பெற்றுள்ளன. தொல்காப்பியம் வரையறுத்துத் தரும் கூற்றுக் குறித்து உரையாசிரியர்கள் மற்றும் இலக்கணிகள் கருத்துக்களையும் சங்க இலக்கியங்களில் இடம்பெற்ற தலைவி கூற்றுப் பாடல்களையும் மதிப்பீடு செய்வதில் மதிப்பீட்டு முறை அணுகுமுறையும் (Evaluative Approach) ஆய்வாளரால் இவ்வாய்வில் செயல்முறைப் படுத்தப்பெற்றுள்ளது.

## சான்றாதாரங்கள்

தொல்காப்பியம், இறையனார் களவியல், நம்பியகப் பொருள், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகியன இவ்வாய்விற்குரிய முதன்மைச் சான்றாதாரங்களாக (Primary Sources) அமைகின்றன. தொல்காப்பியப் பொருளதிகார உரைகளும், இறையனார் களவியல் உரையும், நம்பியகப் பொருளுரையும், சங்க இலக்கிய உரைகளும், சங்க அகப்பொருள் தொடர்பாக எழுந்த நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள் முதலானவையும் இவ்வாய்விற்குரிய துணைமைச் சான்றாதாரங்களாகக் (Secondary Sources) கொள்ளப்பெற்றுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

"தொல்காப்பியம், சங்க இலக்கியம்-தலைவி கூற்று ஒப்பீடு" என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்பெறும் இவ்வாய்வுரை பின்வரும் ஏழு இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது.

1. ஆய்வு அறிமுகம்
2. தொல்காப்பியம்: களவியல் தலைவி கூற்று
3. தொல்காப்பியம்: கற்பியல் தலைவி கூற்று
4. சங்க இலக்கியம்: தலைவி கூற்றுக் களவுப் பாடல்கள்
5. சங்க இலக்கியம்: தலைவி கூற்றுக் கற்புப் பாடல்கள்
6. தொல்காப்பியம், சங்க இலக்கியம்: தலைவி கூற்று - ஒப்பீடு
7. ஆய்வு நிறைவுரை

முதல் இயலான, ஆய்வு அறிமுகத்தில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் கருதுகோள், அணுகுமுறைகள், சான்றாதாரங்கள், ஆய்வுப் பகுப்பு ஆகியன இடம்பெற்றுள்ளன.

இரண்டாமியலான, 'தொல்காப்பியம்: களவியல் தலைவி கூற்று' என்னும் இயல், தமராலும் பிறராலும் பார்க்கப் பெறாதது களவு, கூற்றின் வரைவிலக்கணம், கூற்றுக்கு மாற்றாகத் தொல்காப்பியர் பயன்படுத்தும் பல்வேறு கிளவிகள், தலைவி கூற்றுக் குறித்த நூற்பாக்கள், அல்ல கூற்று, கூற்று, ஒருபாற் கூற்று, மெய்ப்பாடு கூற்று என அமையும் கூற்றின் பாகுபாடு, இப்பாகுபாட்டில் அமையும் களவியல் தலைவி கூற்றுக்கான இலக்கண மெய்ம்மைகள், உரையாசிரியர்கள், திறனாய்வாளர்கள் ஆகியோரின் கருத்துக்களின் ஒப்புமை, வேறுபாடுகள் ஆகியவற்றை விளக்கிச் செல்கிறது.

'தொல்காப்பியம்: கற்பியல் தலைவி கூற்று' என்பது மூன்றாம் இயலாகும். இவ்வியலில் கற்பு குறித்த விளக்கம், மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு ஆகிய கூறுகளை உள்ளடக்கிய கற்பின் பாகுபாடு, கற்பியல் கூறுகளில் அமையும் தலைவி கூற்றிற்கான இலக்கண மெய்ம்மைகள் ஆகியவை குறித்து விளக்கப்பெற்றுள்ளன.

நான்காமியலான, 'சங்க இலக்கியம்: தலைவி கூற்றுக் களவுப் பாடல்கள்' என்னும் இயல் தலைவி கூற்று அகப்பாடல்கள், களவு விளக்கம், களவுத் துறைகளான இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, அறத்தோடு நிற்றல், இயற்பட மொழிதல், பகற்குறி இற்செறிப்பு, இரவுக்குறி, சிறைப்புறமாக தலைவன் இருக்கத் தலைவி கூற்று, ஒருவழித்தணத்தல், காமமிக்க கழிபடர் கிளவி, செலவழுங்குதல், வரைவிடையாற்றாத தலைவி கூறல், வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறல், வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கூறல்,

களவில் தலைவி வன்பொறை எதிரழிதல், வரைவுமலிந்த தோழிக்குக் கூறல், உடன்போக்கு உணர்த்திய தோழிக்குக் கூறல் முதலான துறைகளில் அமைந்துள்ள தலைவி கூற்றுக் களவுப் பாக்கள் ஆகியவற்றை ஆய்வதாக அமைகிறது.

'சங்க இலக்கியம்: தலைவி கூற்றுக் கற்புப் பாடல்கள்' என்பது ஐந்தாமியலாகும். இவ்வியலில் கற்பு-விளக்கம், கற்புத்துறைகள், உடன்போக்குக் கொண்ட தலைவி நிகழ்த்தும் கூற்றுப் பாடல்கள், உடன்போய் மீண்ட தலைவி கூற்றுப் பாடல்கள், இல்வாழ்க்கை/கடிநகர் புகுந்த தோழிக்குத் தலைவி கூறல், செலவுக் குறிப்பறிந்த தலைவி கூற்றுகள், பிரிவிடையாற்றாத தலைவி கூற்றுகள், பிரிவிடையாற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறல், பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கூறுதல், பருவங்கண்டழியும் தலைவி கூற்றுகள், பருவங்கண்டு ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறல், பருவங்கண்டு அழிந்த தலைவியை வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி கூறல், வன்பொறையாக அமையும் தலைவி கூற்றுப் பாடல்கள், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் ஆகியவற்றை விளக்கிச் செல்கிறது.

ஆறாமியலான, 'தொல்காப்பியம், சங்க இலக்கியம்: தலைவி கூற்று - ஒப்பீடு' என்னும் இவ்வியல் மாந்தர் கூற்றுமுறை வகை, தலைவி கூற்றுமுறை, தொல்காப்பியர் கூற்றுகளைக் கூறும் பாங்கு, தோழியிற் கூட்டத்தின்கண் நிகழும் களவுக் கூற்றுகள், பாங்கிமதி உடன்பாடு, குறைநயப்பு, இருவகைக் குறி, நாணுமிக வருதல், ஒருவழித்தணத்தல், வரைவு வேட்கை, அறத்தோடு நிற்றல், வரைவுகடாதல், வரைவு நீட்டிப்பு, அன்பின் பெருந்திணை, மெய்ப்பாடும் கூற்றும், உடன்போக்கு எனப் பகுக்கப்பெற்று, தொல்காப்பிய இலக்கண மெய்ம்மைகளோடு சங்க இலக்கியப் பாக்களை ஒப்பிட்டு விளக்கிச் செல்வதாக அமைகிறது. மேலும், கற்புக் கூற்றுகள் இல்வாழ்க்கை,

பரத்தையர் பிரிவு, பிரிவு (பொருள் முதலியவற்றிற்காகப் பிரியும் பிரிவு) எனப் பகுக்கப்பெற்று, தொல்காப்பியரின் கூற்றுகளோடு சங்க இலக்கியப் பாடல்களை ஒப்பிட்டுப் பார்ப்பதாகவும் அமைகிறது.

ஒவ்வோர் இயலிலும் கண்டறிந்த உண்மைகளும் முடிவுகளும் அந்தந்த இயல்களின் இறுதியில் வழங்கப்பட்டிருப்பினும், ஆய்வின் நிறைவினைக் கருத்தில் கொண்டு ஆய்வின் வழி கண்டறியப்பட்ட முடிவுகள் தொகுக்கப்பட்டு இறுதியில் நிறைவுரையாக வழங்கப்பெற்றுள்ளன.

இலக்கண மெய்ம்மைகள், தலைவி கூற்றுப் பாடல்கள் ஆகியவை குறித்த அட்டவணைகள் பின்னிணைப்பில் தரப்பெற்றுள்ளன. இவ்வாய்விற்குப் பயன்படுத்தப்பட்ட நூல்கள், ஆய்வேடுகள், ஆங்கில நூல்கள் ஆகியவை துணைநூற்பட்டியலில் தொகுக்கப்பெற்றுள்ளன.

அக மாந்தர்களுள் தலைமையிடம் பெறுபவள் தலைவியாவள். பிற மாந்தர்கள் தலைவி வழிப்பட்டவர்கள் ஆவர். தலைவியின் பண்புகளுள் முதலாவது கற்புடைத் திண்மை ஆகும். பிற பண்புகள் கற்பினைச் சார்ந்து பொலிவு பெறும். அப்பொலிவிற்கு அடிப்படையாகத் தலைவியின் கூற்று நிகழ வேண்டும். களவில் எவ்வகையில் அக்கூற்று நிகழ வேண்டும் என்பதைத் தொல்காப்பியர் களவியலில் மிகத் தெள்ளிய சிந்தை கொண்டு கூறியுள்ளார். அவற்றினைப் பகுத்து ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

**களவு - விளக்கம்**

"செயிர்தீர் காட்சி கற்பு"(1) எனக் கற்பு, கண்ணால் காணும் செயலுடன் தொடர்பு செய்யப் பெறுகிறது. ஆயின் கற்புக்கு எதிர் மறையானது களவு. அது தமராலும் பிறராலும் பார்க்கப் பெறாதது எனும் பொருள் கொண்டதாகும். இதனை "மறைந்தவற் காண்டல்"(2) எனும் நூற்பா செப்பும். எவ்வாறெனின் ஒளிந்திருந்து எனும் பொருளில் மறைந்து எனும் சொல் ஆளப்பட்டது. மற்றும் "மறைந்த ஒழுக்கம்"(3) என்று களவு குறிப்பிடப் பெறுகிறது. இதனால் ஒளிந்திருக்கும் இடத்தினின்று வெளியில் வா என்ற இன்றைய அழைப்பு மொழி வழக்கின் மூலக் குரலைத் தொல்காப்பியத்தில் உணர முடிகிறது. மேலும் "களவு வெளிப்படுதலின்,"(4) "வெளிப்பட வரைதல்"(5) எனுந் தொடரை அப்படியே கேட்கிறோம். வரைதல், வெளிப்பட வரைதல், வெளிப்படாது வரைதல் என்ற இரு வகையில், வெளிப்படாது வாழுதலே களவு எனப் பெறும். மற்றும் "மறை,"(6) "அருமறை"(7) என்றும் தொல்காப்பியர் குறிப்பது நோக்கத்தக்கது.

**கூற்று - வரைவிலக்கணம்**

ஒருவர் கூறுவதை மற்றொருவர் கேட்குமிடத்துக் கூற்று நிகழ்கிறது. கூற்றில் இடம், காலம் அறிந்து பேசுவது இன்றியமையாத ஒன்றாகும். "இடமும் காலமும் உணர்ந்து கேட்போர்க்குத் தக்கவாறு மொழிதல் செய்யுளுறுப்பாகும்"(8) என்பர்.

கூறுவோரும், கூற்றைக் கேட்போரும் குறிப்பிட்ட இடத்தில் செய்தியைப் பரிமாறிக் கொள்வர். இதனைக் களன் அல்லது இடம் எனச் சுட்டுவர். அச்செய்தி ஏதேனும் ஒரு குறிப்பிட்ட காலத்தைச் சார்ந்ததாக அமையும். ஆதலின் களனை அடுத்துக் காலம் எனும் உறுப்பு அமைந்திருப்பதைக் காணலாம். எனவே கூற்று, கேட்போர், இடம், காலம், மொழி ஆகிய ஐந்து உறுப்புகளும் சேர்ந்து கூற்றிற்கு உரிய சூழலை உருவாக்குகின்றன.

**கூற்று**

தொல்காப்பியர் பொருளதிகாரச் செய்யுளியலில் கூறும் செய்யுள் உறுப்புகள் முப்பத்து நான்கினுள் "மாத்திரை முதலா யாப்பு ஈறாக"(9) உள்ள இருபத்தாறும் தனிநிலைச் செய்யுளுக்குரியன. இவற்றுள் இளம்பூரணர், பேராசிரியர் ஆகிய இருவர் உரைகளை நோக்குமிடத்து இளம்பூரணர்,

"திணையே கைகோள் பொருள் வகையெனாஅ"(10)

எனவும், பேராசிரியர்,

"திணையே கைகோள் கூற்று வகையெனாஅ"(11)

எனவும் கூறியிருப்பதை நோக்குமிடத்துப் பாடம், பொருள் வகையா, கூற்று வகையா எனும் ஆய்வுச் சிக்கல் எழுகிறது.

## பாட வேறுபாடு

இளம்பூரணர் செய்யுள் உறுப்புக்களைக் கூறுமிடத்துப் பொருள் வகை என்பதற்கு விளக்கம் கூறவில்லை. ஆயின், உரையில் பொருள் வகை என்ற பாடம் காணப்பெறுகிறது. இருப்பின் கூற்றிற்குரியாரைக் கூறும் சூத்திரங்களுக்கு உரை கூறும் பொழுது பொருள் வகை உணர்த்திற்று எனக் கூறாமல் ,

"களவின்கட் கூறுவாரை உணர்த்துதல் நுதலிற்று"(12)

"கற்பின்கட் கூறத்தகுவாரை உணர்த்துதல் நுதலிற்று"(13)

"இருவகைக் கைகோளிற்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று"(14)

"நற்றாய்க்குரிய மரபு உணர்த்துதல் நுதலிற்று"(15)

"காண்போர்க்குரிய மரபு உணர்த்துதல் நுதலிற்று"(16)

"தலைவிக்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று"(17)

"தலைவனும் தலைவியும் அல்லாதோர்க்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று"(18)

"பார்ப்பாரும் அறிவருங் கூறும் கூற்றுக் கேட்போரை உணர்த்துதல் நுதலிற்று"(19)

"ஒருசார் கூற்றுக்குரியார் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று"(20)

"வாயில்கட்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று"(21)

என உரைப்பர். இவற்றிலிருந்து கூறுவாரை, கூறத்தகுவாரை, மரபு, கூற்று ஆகியவற்றைப் பொருள் வகை என்பதற்குப் பயன்படுத்துவது உணரப் பெறுகிறது.

பேராசிரியர் "கூற்றுவகை"(22) எனப் பாடம் கொண்டு "செய்யுள் கேட்போரை இது சொல்லுகின்றார் இன்னாரென்ன உணர்வித்தல்"(23) என விளக்கம் கூறுவர்.

## பொருள் வகை

தொல்காப்பியர் கூற்று எனும் சொல்லினைப் பொருளதிகாரத்தில் ஏழு இடங்களிலும், சொல்லதிகாரத்தில் ஐந்து இடங்களிலும் கூறுவர். அவை முறையே,

"கூற்று மொழி,"(24) "தத்தம் கூற்றை,"(25)"ஈரமில் கூற்றம்,"(26)

"கூற்று மாற்றம்,"(27) "கூற்றிடை,"(28) "கூற்றுவண்,"(29)

ஆகியனவாகும். ஈண்டுக் கூற்று என்பது கூறுதல் என்ற பொருளில் அமைந்துள்ளது. மற்றும் கூற்று என்பது,

1. கூற்றின் பொருளை முழுநிலையில் வெளிப்படுத்துவன.
2. கூற்றின் வெளிப்பாட்டினை விதந்து ஓதுவன.
3. கூற்றின் இயல்பை உணர்த்துவன

என அமையும் சொற்களையும் தொல்காப்பியர் குறிப்பர். இவை குறித்த வரைபடம் பின்வருமாறு.

## கூற்றுக்கு மாற்றாகத் தொல்காப்பியர் பயன்படுத்தும் கிளவிகள்

### கூற்றின் பொருளை அப்படியே முழுநிலையில் வெளிப்படுத்துவன

1. கிளவி
2. செப்பு
3. சொல்
4. உரை
5. மொழி

### கூற்றின் வெளிப்பாட்டினை விதந்து ஓதுவன

1. உசாவுதல்
2. உயிர்த்தல்
3. உரைத்தல்
4. எடுத்தல்
5. என்றல்
6. கழறல்
7. கிழவ
8. கிளத்தல்
9. கூறுதல்
10. மொழிதல்
11. விடுத்தல்

### கூற்றின் இயல்பை உணர்த்துவன

1. அகப்படுத்தல்
2. அச்சுறுத்தல்
3. அரற்றல்
4. அறிதல்
5. அறிவுறுதல்
6. இடித்தல்
7. இரங்கல்
8. இரத்தல்
9. உசாஅதல்
10. உடம்பல்
11. உணர்த்தல்
12. உவத்தல்
13. உறுதிகாட்டல்
14. ஊடல்
15. எள்ளல்
16. எளித்தல்
17. ஏத்தல்
18. ஐயம்
19. கடிதல்
20. கலங்கல்
21. காய்தல்
22. குறித்தல்
23. குறையுறல்
24. தகைத்தல்
25. தெளித்தல்
26. பாராட்டு
27. புகழ்தசை
28. புலம்பல்
29. மகிழ்ச்சி
30. மலிதல்
31. மறுத்தல்
32. முனிதல்
33. வருத்தல்
34. வணங்கல்
35. வழிப்படுதல்
36. வற்புறுத்தல்
37. வன்பொறை
38. வாழ்த்தல்
39. விலக்கல்
40. விளக்குறுத்தல்
41. வினாதல்
42. வெரூஉதல்
43. வேண்டல்

இவற்றிலிருந்து தொல்காப்பியர் கூற்றின் பொருளை உணர்த்தக் கையாளும் சொற்களை நோக்குமிடத்துப் பொருள் வகை என்ற பாடம் மூல பாடமாக அமைந்திருக்க வேண்டும். ஆதலின்தான் இளம்பூரணர் உரையில் பொருள் வகை என்ற பாடம் காணப்பெறுகிறது.

### கூற்று வகை

பேராசிரியர் கூற்று வகை எனப் பாடம் கொண்டதற்குச் சில காரணங்களைப் பின்வருமாறு கூறலாம்.

1. பொருள் வகை அல்லது கூற்று வகை என்ற உறுப்பிற்கு அடுத்த நிலையில் கேட்போர் என்ற செய்யுள் உறுப்பைத் தொல்காப்பியர் மொழிந்திருப்பதாலும்,
2. இளம்பூரணர் நூற்பா விளக்கவுரையில் பொருள் வகை எனக் குறிப்பிடாமல் கூறுவாரை, கூறத்தகுவாரை என்பதனைப் பின்பற்றி உள்ளமையாலும்,
3. தொல்காப்பியர் களவு எனும் கைகோள் கூற்றிற்குரிய "பார்ப்பன், பாங்கன், தோழி, செவிலி, கிழவன், கிழத்தி"[30] ஆகிய அறுவரைக் குறிப்பர். பின்னர், கற்பு எனும் கைகோள் கூற்றிற்குரிய "பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர்"[31] ஆகிய அறுவரும் களவில் கூற்றிற்குரிய அறுவரும் சேர்ந்து பன்னிரண்டு பேரினைக் குறிப்பர். தலைமகள் "ஊரில் வாழ்பவர்கள், அவளது அயல் வீட்டில் உள்ளவர்கள், அவளது தெருவில் உள்ளவர்கள், அவளது நோயின் கூறுபாட்டினைக் குறிப்பினால் அறிவோர், அவளுடைய தந்தை, தமையன் ஆகியோர் கூற்றிற்கு அல்லாதோர்"[32] எனக் குறிப்பர். ஆயின் தொல்காப்பியர் கூற்றிற்கான விளக்கச் சூத்திரம் கூறினார் இல்லை. இந்நிலையில் கூற்றிற்குரியவரையும், கூற்றிற்கு அல்லாதோரையும் தொல்காப்பியர் குறிப்பிடுவதனாலும்,
4. செய்யுள் உறுப்புகளில் முன்னத்திற்கு அடுத்த நிலையில் கூறப்பெற்ற "பொருள்"[33] என்ற உறுப்பிற்கும் கைகோள் என்ற உறுப்பிற்கு அடுத்த நிலையில் கூறப் பெற்ற "பொருள்

வகைக்கும்"[34] மயக்கம் தோன்றாதிருக்கவும் பேராசிரியர் கூற்று வகை எனப் பாடம் கொண்டார் போலும். அத்துடன், கூற்று எனும் சொல் பெறும் நிலையில்

1. சங்க இலக்கியத்துறைக் குறிப்புகளிலும்
2. சங்க இலக்கிய உரையாசிரியர்களின் குறிப்புகளிலும்
3. ஆய்வு உலகத்திலும்

பயன்படுத்தப்படுவதால் கூற்றுவகை எனப் பாடம் கொள்வது நன்மை பயக்கும். ஆதலின் ஆய்வுத் தலைப்பு, தொல்காப்பியம் சங்க இலக்கியம் தலைவி கூற்று ஒப்பீடு எனத் தேர்வு செய்யப் பெற்றது.

## அக மாந்தர்களின் கூற்று எண்ணிக்கை

தொல்காப்பியர் அக மாந்தர்களின் கூற்றுகளை அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல் என ஐந்து இயல்களில் விதந்து ஓதுவர். அவற்றுள்

| | | |
|---|---|---|
| "தலைவன் கூற்றாக | ⟶ | களவு + கற்பு = 84 |
| தலைவி கூற்றாக | ⟶ | களவு + கற்பு = 72 |
| தோழி கூற்றாக | ⟶ | களவு + கற்பு = 58 |
| நற்றாய் கூற்றாக | ⟶ | கற்பு = 10 |
| செவிலி கூற்றாக | ⟶ | களவு + கற்பு = 15 |
| கண்டோர் கூற்றாக | ⟶ | களவு + கற்பு = 7 |
| பரத்தை கூற்றாக | ⟶ | கற்பு = 8 |
| பாகன் கூற்றாக | ⟶ | கற்பு = 1 |
| பார்ப்பான் கூற்றாக | ⟶ | களவு + கற்பு = 6 |
| கூத்தர் கூற்றாக | ⟶ | கற்பு = 10 |
| பாணன் கூற்றாக | ⟶ | கற்பு = 2 |
| அறிவர் கூற்றாக | ⟶ | கற்பு = 2 |
| இளையர் கூற்றாக | ⟶ | கற்பு = 7 |
| வாயில்கள் கூற்றாக | ⟶ | கற்பு = 2"[35] |

எனக் கூறுவர்.

## தலைவி கூற்று

தொல்காப்பியர் தலைவி கூற்றையும் அக்கூற்றுக்கு உறுதுணை புரியும் மாந்தர் பற்றியும் கூறும் நூற்பாக்களின் எண்ணிக்கை "நாற்பத்தொன்றாகும்."[36] அவற்றுள் "ஐந்து நூற்பாக்கள்"[37] மட்டும் கூற்றினை நிரலாகச் சொல்லும் தன்மையுடையன. மற்றவை அதற்குத் துணைநிற்பன. ஆயின் மேற்குறிப்பிட்ட ஆய்வாளரின் எண்ணிக்கையில் தலைவி கூற்றினை நோக்கின் வேறுபாடுகள் பல உள. ஆதலின் தலைவி கூற்று,

1. அல்ல கூற்று
2. கூற்று
3. ஒருபாற் கூற்று
4. மெய்ப்பாடு கூற்று

எனப் பாகுபாடு செய்யப்பெறுகிறது. ஈண்டு அல்ல கூற்று என்பது களவிற்கு மட்டும் உரியது. மற்றவை இரு கைகோளிற்கும் பொதுவாய் அமைந்து வரும்.

## தலைவன் கூற்றா? தலைவி கூற்றா?

"இருவகைக் குறி பிழைப்பாகிய விடத்து"[38] எனத் தொடங்கும் களவியல் நூற்பா தலைவனுக்கு உரியதா? அல்லது தலைவிக்குரியதா? எனும் ஐயத்தை உரையாசிரியர்களான இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரும் எழுப்புவர். எவ்வாறெனில், அந்நூற்பாவின் இறுதி அடியினை இளம்பூரணர்,

"கிழவோன் மேன என்மனார் புலவர்"[39]

என்பர். நச்சினார்க்கினியர்,

"கிழவோண் மேன என்மனார் புலவர்"[40]

எனப் பாடம் கொண்டது மட்டுமல்லாது அந்நூற்பாவின் இடையில்

"விருப்பின்"[41] என்பதற்கு "விருந்தின்"[42]

என்றும்

"தாளான்"[43] என்பதற்கு "வாழான்"[44]

என்றும் சிற்சில வேறுபாடுகளைச் செய்து கொள்கின்றார். அதுமட்டுமன்று; இந்நூற்பாவினை, இளம்பூரணர் பதினொரு

கூற்றுக்களாகவும் நச்சினார்க்கினியர் பத்துக் கூற்றுகளாகவும் கொள்கின்றனர்.

## பாட பேதத்திற்கான காரணங்கள்

1. இந்நூற்பா தலைவன் கூற்று என்று கொள்வதற்கும், தலைவி கூற்று என்று கொள்வதற்கும், இந்நூற்பாவிற்கு அடுத்த நிலையில் தலைவன் தலைவி கூற்றினை மொழியும் நூற்பாக்கள் இடம் பெறவில்லை.
2. தலைவன் கூற்று நூற்பாக்களை அடுத்துப் பாங்கன் நிமித்தம் குறித்த நூற்பாக்கள் சில வருகின்றன. இப்பாங்கன் குறித்த நூற்பாவினை அடுத்து இந்நூற்பா இடம் பெறுகிறது. அவை போல் தலைவி கூற்றுத் தொடர்பான நூற்பாக்களின் முன்பு அவளது வேட்கை புலப்படும் முறை குறித்து, சில நூற்பாக்கள் இடம் பெறுகின்றன.
3. ஆதலின், முறை அமைப்பில் பொருத்தமில்லாமல் இந்நூற்பா அமைந்தமையே உரையாசிரியர்களிடையே பாட பேதம் கொள்ள ஒரு காரணமாயிற்று.
4. மேலும், இந்நூற்பாவில் ஏதேனும் ஓரிடத்தில் தலைவன் கூற்றென்றோ, தலைவி கூற்றென்றோ துணிய ஒரு சொல் கூட இல்லை.
5. இந்நூற்பாவினை உரையாசியர்களைத் தவிர மற்றும் சிலர் தலைவன் கூற்றாகவும், தலைவி கூற்றாகவும் கொண்டோர் உளர்.

## தலைவன் கூற்றெனக் கொண்டோர்

நம்பியகப்பொருளின் உரையாசிரியர் பாங்கியர் கூட்டம் குறித்த நூற்பா ஒன்றனுக்கு உரை கூறுமிடத்து,

“இதனுட் . . . . . . . . தலைமகன் கூற்றாயினவெல்லாம் கூடற்கும், கூட்டற்கும் உரியவெனக் கொள்க. இம்மூன்று சூத்திரத்துள்ளும் எடுத்தோதப்பட்ட கிளவிகள் தலைமகன் கூற்றுள் வேளாண் எதிரும் விருந்தின் கண்ணும் என்பதனாலும் கொள்ளப்பட்டன”(45) எனக் கூறுவதன் வழி இவர் இந்நூற்பாவினைத் தலைவன் கூற்றாகக் கருதியமை உணரப் பெறுகிறது. மற்றும்

"க.வெள்ளைவாரணன்,"[46] "க. இரத்தினம்"[47] ஆகியோர் இளம்பூரணர் வழி நின்று தலைவன் கூற்றாகக் கொள்கின்றனர்.

## தலைவி கூற்றெனக் கொண்டோர்

தலைவி கூற்றெனக் கொண்டோருள் குறிக்கத்தக்கவர் குறுந்தொகைத் துறை ஆசிரியர் ஆவர். அவர் குறுந்தொகையில் தலைவி கூற்றாக அமைந்த பாடல்கள் சிலவற்றிற்கு இந்நூற்பாவில் இடம்பெறும் கூற்றுகளின் வழிநின்று துறை எழுதியிருப்பதைக் காண முடிகின்றது.

"காணும் பொழுதிற் காணாப் பொழுது பெரிதாகலின் ஆற்றாளாய தலைமகள் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது"[48] என்று ஒரு பாடலுக்குத் துறை கூறியுள்ளார். இத்துறை

"காணா வகையிற் பொழுது நனி இகப்பினும்"[49]

எனும் கூற்றின் வழியும்,

"தலைமகன் சிறைப்புறமாக அவன் வரைந்து கொள்வது வேண்டித் தோழி இயற்பழித்த வழித் தலைமகள் இயற்பட மொழிந்தது"[50]

என்ற பாடலுக்கு அமைந்த துறை

"வரைதல் வேண்டி தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய வெதிரும் "[51]

எனும் கூற்றின் வழியும் வகுக்கப்பட்டுள்ளன. இதனின் குறுந்தொகை துறையாசிரியர் இந்நூற்பாவினைத் தலைவி கூற்று உணர்த்துவதாகவே கொண்டுள்ளார் என்பது புலனாகிறது. மற்றும் நச்சினார்க்கினியர் வழி தலைவி கூற்றெனக் கொண்டவருள் குறிக்கத்தக்கவர்கள் "கா.சுப்பிரமணிய பிள்ளை,"[52] "டாக்டர் சி.இலக்குவனார்"[53] ஆகியோர் ஆவர்.

இந்நூற்பா தலைவன் கூற்றா, தலைவி கூற்றா என்பதை ஆராயின் "இருவகைக் குறிப்பிழைப்பாகியவிடத்தும்" என்பதற்கு "இரவுக் குறியும், பகற் குறியும் பிழைத்தவிடத்தும் எனப் பொருள் விளக்கிக் குறி பிழைத்தலாவது புனல்ஒலிப்படுத்தலும்,

புள்ளெழுப்புதலும் முதலியன குறியெனக் குறித்த வழி அவனானன்றி அவை வேறொரு காரணத்தான் நிகழ்ந்துழி அதனைக் குறியென நினைத்துச் சென்று அவன் குறியின்மையின் சென்று மாறுதலாம்"[54] என விளக்குவர் நச்சினார்க்கினியர்.

தலைவி கூற்றில் இடம் பெறும் "குறியின் ஒப்புமை மருடற் கண்ணும்"[55] என்பதற்கு

"இரவுக்குறி வருந் தலைவன் செய்யுங்குறி பிறிதொன்றனான் நிகழ்ந்து தலைவன் குறியை ஒத்த வழி அதனை மெய்யாகி உணர்ந்து தலைவி மயங்கிய வழியும் "[56]

என விளக்கும் போது மேற்குறிப்பிட்டதற்கும், இதற்கும் என்ன வேறுபாடு உள. மற்றும்

"ஆங்கதன் புறத்துப் புரைபட வந்த மறுத்தலோடு"[57] என்பதற்கு நச்சினார்க்கினியர்

"அவன் வரைவு வேண்டின விடத்து அவ்வரைவு புறத்தாய வழித் தலைவி தன் உயர்வு உண்டாகத் தோன்றியது மறுத்தலோடே என்றும் அதன் புறம் என்றற்கு அயலாகிய நொதுமலர் வரைவாயிற்று. தலைவி தன் குடிப் பிறப்புங் கற்பும் முதலிய உயர்ச்சிக்கு ஏற்ப அதனை மறுத்து, தலைவன் வரையுமாறு நீ கூறெனத் தோழிக்குக் கூறுமென்றற்குப் புரைபட வந்த மறுத்தல்"[58] என்றார்.

மற்றும் தலைவி கூற்றில் இடம்பெறும் "வேற்று வரைவுவரின் அது மாற்றுதற் கண்ணும்"[59] என்பதற்கு

"இறந்து பாடு பயக்கும் மாற்றால் தன்றிறத்து நொது மலர் வரையக் கருதிய ஞான்று அதனை மாற்றுதற் கண்ணும்"[60] என விளக்குவர் நச்சினார்க்கினியர்.

ஆதலின் முன்னர்க் கூறியதற்கும் இதற்கும் என்ன வேறுபாடு? இருவகைக் குறி பிழைப்பாகிய விடத்து எனத் தொடங்கும் நூற்பாவை, தலைவி கூற்றென்பது தொல்காப்பியர் கருத்தாயின் கூறியது கூறல் எனும் குற்றத்திற்கு ஆளாக நேரிடும். ஆதலின் நச்சினார்க்கினியரின் கருத்தை விடுத்து இளம்பூரணர் வழி அவை தலைவன் கூற்றாக எண்ணப்பெறுகின்றன.

## அகத்திணைத் தோற்றம்

காதலர் தம் மன ஒற்றுமை அகத்திணையின் உயிர்ப் பண்பாகும். இவ்வொற்றுமையை உள்ளப் புணர்ச்சி அல்லது காமப்புணர்ச்சி என்பர். உள்ளப்புணர்ச்சி ஏற்பட்ட நிலையில் ஒருவரோடு ஒருவர் உரையாடுதல் முறையன்று. கண்களே அக்காமக் குறிப்புரையை நிகழ்த்தும். கண்டவுடன் வேட்கை தோன்றி ஒருவரது உள்ளக் குறிப்பினை மற்றவர் ஏற்றுக்கொண்ட நிலையில்தான் கண்ணினால் வரும் குறிப்பு நிகழும். இதனைத் தொல்காப்பியர்,

'நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்பு உரையாகும்'

(தொல். பொருள். களவு: 5)

என்பர். காமப் பருவம் எய்திய காதலர்கள் உள்ளம் புணர்ந்தபின் மெய்யுறு புணர்ச்சியை நாடுவர். இடம் வாய்க்கப் பெறின் புணர்தலுக்குத் தயங்குவர். "களவுக்காலத்து உடல் உறவு இல்லையென்றும் அது அறவே கூடாதென்றும் கூறுவோர் கொள்கை பிழையாகும். அஃது இயற்கைக்கு முரண் என்றும் கூறுவர் மாணிக்கனார். மற்றும் களவுக்காலத்து மெய்யின்பம் துய்த்தமை பற்றிய அகப்பாடல்கள் பல உள்ளன என்றும் மெய்யுறும் செய்கை இன்றாயின் பகற்குறி இரவுக்குறி முதலான பல துறைகள் பயனிலவாய் ஒழியும்"(62) என்றும் அறுதியிட்டுக் கூறுவர்.

## உள்ளப் புணர்ச்சிக்குரிய நிமித்தங்கள்

பெருமை, உரன் உடைய தலைவனும் அச்சம், நாணம், மடன் உடைய தலைவியும் வேட்கை மீதூர்ந்த நிலையில் தம் பண்புகளை நெகிழ விடுதல் கூடாமையின் தாம் சந்தித்த முதற் காட்சியிலேயே மெய்யுறு புணர்ச்சிக்கு உடன்படாது உள்ளப்புணர்ச்சி அளவிலே ஒழுகி மணம் கொண்ட பின்னர்க் கூடுதல் முறையாகும் என்பது தொல்காப்பியர் கருத்து. மெய்யுறு புணர்ச்சி நிகழ்வதற்கு முன் நடைபெறும் சில நிலைகளை அவர்,

'வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்

நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றிச்
சிறப்புடை மரபின் களவென மொழிப'

(தொல். பொருள். களவு: 9)

எனும் நூற்பாவில் கூறுவர். இவ்வொன்பது நிலைகளோடு "காட்சி,"[63] "ஐயம்,"[64] "துணிவு"[65] என்ற மூன்றினையும் சேர்த்து, பன்னிரண்டும் அன்புற்றார் இருவர் துணையாகக் கூடுவதற்குரிய நிமித்தங்களாகும்.

பிறவிதோறும் இணைந்து வராமல் அவன் வேறு ஒருத்தியுடனும் அவள் வேறு ஒருவனுடனும் ஆக இப்படி வேறுபட்ட இருவர் இப்பிறவியில், ஊழின் ஆணையால் ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டுக் காணுதல் ஒரு வகை. பிறவிதோறும் அன்புற்றுக் கணவன் மனைவியாக இணைந்து வருவோர் இப்பிறவியிலும் அவ்வாறு இணையுமாறு ஊழின் ஆணையால் ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டுக் காணுதல் மற்றொரு வகை. இதனை,

'ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப'

(தொல். பொருள். களவு: 2: 1-3)

எனக் கூறுவர். இவ்விடத்து மேற்கூறிய இருவகையினருள் பின்னவர் எதிர்ப்பட்ட போது ஒருவர் வேட்கையால் ஒருவர் கூற்று மூலம் அறிவிப்பர். முன்னவருள் கிழவன் கூற்று மூலம் அறிவிக்கக் கிழத்தி புது மட்கலத்துப் பெய்த நீர் கலத்தின் புறம்பே கசிந்து புலப்படுதல் போலக் கிழத்தி தன் வேட்கையைக் குறிப்பாகக் கிழவனுக்குப் புலப்படும்படிக் கூறுவள். இதனை,

'தன்னுறு வேட்கை கிழவன் முன் கிளத்தல்
எண்ணுங்காலைக் கிழத்திக்கு இல்லைப்
பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்
பெய்ந்நீர் போலும் உணர்விற்று என்ப'

(தொல். பொருள். களவு: 28)

எனக் கூறுவர் தொல்காப்பியர்.

இத்தகைய இயற்கைப்புணர்ச்சியாகிய கூட்டம் கூட்டி வைப்பர் பிறர் இன்றித் தலைவன் தலைவியராகிய இருவரும் பிறரறியாதவாறு நிகழும் தனிமையுடையதாய்ப் பொலிவுறுவதாதலின் தலைவன் தலைவி இருவரும் தத்தமது உளக்கருத்தைப் புலப்படுத்தும் தூதுவராகத் தனிமையில் முயன்று கூடுதல் உண்டு. இதனை,

'காமக் கூட்டம் தனிமையிற் பொலிதலின்
தாமே தூதுவ ராகலும் உரித்தே'

(தொல். பொருள். களவு: 29)

என்பர். இவ்விடத்துத் தலைவன் தலைவி இருவரும் சேர்ந்து தாமே தூதுவராய் நின்று கூடும் நிலை, மெய்ப்பாட்டியலுள் "புகுமுகம் புரிதல்"(66) முதலிய மெய்ப்பாடு பன்னிரண்டானும் அமையும். ஆதலின் தலைவன் பாங்கனது உதவி பெற்றுக் கூடுதலும் தலைவி தோழியின் உடன்பாடு பெற்றுக் கூடுதலுமாகிய இவை யாவரிடத்தும் தவறாது நிகழவேண்டும் எனும் வரையறை இல்லை என்பது பெறப் பெறுகிறது.

## அல்ல கூற்று

களவினைத் தொல்காப்பியர்,

'காமப் புணர்ச்சியும் இடந்தலைப்படலும்
பாங்கோடு தழாலும் தோழியிற் புணர்வும் என்று
ஆங்க நால் வகையினும் அடைந்த சார்போடு
மறையென மொழிதல் மறையோர் ஆறே'

(தொல். பொருள். செய்யு: 487)

எனப் பகுத்துக் கூறுவர். இவற்றுள் காமப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் ஆகிய மூன்று கூட்டங்களிலும் தலைவிபால் கூற்று நிகழுமாயின் "அருகி அல்லது நிகழாது என்று இளம்பூரணர் கூறுவர். நச்சினார்க்கினியர் நிகழவே நிகழாது"(68) என்பர். இதனை,

"தோழியிற் கூட்டத்துத் தலைவி கூற்று நிகழ்த்துவள் என்பதூஉம் நிகழுங்கால் நாணும் மடனும் பெரும்பான்மை கெட்டு அக்கூற்று நிகழும் என்பதூஉம் கூறியவராயிற்று"(69) என விளக்குவர்.

ஆயின் இக்கூட்டங்களில் தலைவி கூற்று வெளிப்படுமா? என்பதற்குத் தொல்காப்பியர் களவியலில் கூறும் நூற்பாக்கள் துணைபுரிகின்றன. அவற்றுள்,

'காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்
நாணும் மடனும் பெண்மை ஆகலின்
குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை
நெறிப்பட வாரா அவள் வயினான'

(தொல். பொருள். களவு: 18)

எனக் கூறுகையில் தலைமகள்பால் நாணும், மடனும் பெண்மைப் பண்புகளாக எஞ்ஞான்றும் உளவாகலின் காம ஒழுக்கத்தின்கண் அவள் தலைமகன் மாட்டுக் கொண்ட காதல் வேட்கை குறிப்பினும் இடத்தினும் புலப்படும் என்பது பெறப் பெறுகிறது. மற்றும் தலைவன் எதிர் தலைவியது காம வேட்கை கண்களாலும் மெய்ப்பாடுகள் வாயிலாகவும் புலப்படுவதைத் தொல்காப்பியர் 'குறிப்பு' என்கிறார். இதனை

'காமஞ் சொல்லா நாட்டம் இன்மையின்
ஏமுற இரண்டும் உளவென மொழிப'

(தொல். பொருள். களவு: 19)

என்பர். மேலும் மேற்குறித்த நூற்பாவில் இடத்தினான் என்பதற்கு இளம்பூரணர் "சொல்லத் தகுந்த இடம் வேட்கை புலப்படுதல்"[71] என்று விளக்குவர். நச்சினார்க்கினியர், இடம் என்பதற்கு இடந்தலைப்பாடும் பாங்கோடுதழாஅலும், தோழியிற் புணர்வும் என்று சூழற் பொருள் கொள்வர்."[72] ஆதலின் இளம்பூரணர் கூறுவது தொல்காப்பியரின் கருத்து ஆகும். ஏனெனின் இடத்தினான் வேட்கை புலப்படுதல் குறித்துத் தொல்காப்பியர்,

'சொல்லெதிர் மொழிதல் அருமைத் தாகலின்
அல்ல கூற்று மொழி அவள் வயினான'

(தொல். பொருள். களவு: 20)

எனச் செப்புவர். இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் ஒரு கருத்தும் நச்சினார்க்கினியர் ஒரு கருத்தும் கூறுவர். இருப்பின், இளம்பூரணர் கருத்தே முறை என்பதை,

"களவின் கண் தலைவன் வினாவும் சொல்லிற்குத்
தலைவி எதிர்மொழி கூறுதல் என்பது மிகவும்
அரிதாகலின் அந்நிலையில் கூற்றல்லாத குறிப்பு
மொழிகளே அவள்பால் தோன்றும் என்பதாம்
அல்ல கூற்று மொழி என்றது கூற்று மொழி
அல்லாத குறிப்பு மொழி" (73)

என வெள்ளைவாரணர் குறிப்பிடுவது குறிப்பிடத்தக்கது. இருப்பின் "அருமைத்தாகலின் எனக் கூறப் பெற்றுள்ளமையால் தலைவன் சொல்லெதிர் தவிர்க்க முடியாத நிலையில் தலைவி சில சொற்கள் பேசுவதும் உண்டு. இச்சொற்கள் நாண் மிகுதி காரணமாக அரைகுறையாகக் குழறின நிலையில் தோன்றி அமையும். ஆதலின்தான் தொல்காப்பியர் இச்சொற்களைக் கூற்றாம் தகுதியுடையன அல்ல என்று கூறினார் எனலாம். தலைவி கூற்றாக இச்சொற்கள் பாடப் பெறலாகாது என்று அவர் கூறுதலின் தலைவன் கூற்றில் அவை கொண்டு கூறப்படுவனவாக அமையும் என்பதும் அவர் கருத்தென"(74) உய்த்துணரலாம். காட்டாக,

'மழலையங் குறுமகள் மிழலையர் தீங்குரல்' (நற்: 209:5) என நற்றிணையில் தலைவன் கூற்றின் வாயிலாக அறியலாம். இத்தகைய அல்ல கூற்று மொழியாக

1. மறைந்தவற் காண்டல்
2. தற்காட்டுறுதல்
3. நிறைந்த காதலில் சொல்லெதிர் மழுங்குதல்
4. வழிபாடு மறுத்தல்
5. மறுத்தெதிர் கோடல்
6. பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்

ஆகியவை தலைவியின் அல்ல கூற்று மொழியாக அமைத்துக் கொள்ளப் பெறுகின்றன. ஆயின் இளம்பூரணர்,"மறைந்தவற் காண்டல், தற்காட்டுறுதல், நிறைந்த காதலில் சொல்லெதிர் மழுங்குதல் ஆகிய மூன்றிலும் கூற்று நிகழாது. வழிபாடு மறுத்தல் என்பது கூற்றாலும் குறிப்பாலும் நிகழும். மறுத்து எதிர் கோடல், பழிதீர் முறுவல் சிறிதே

தோற்றல் என்பதில் கூற்று நிகழ்ச்சி அருகி வரும் அல்லது வாராது"[75]என்பர்.

## மறைந்தவற் காண்டல்

இக்கூற்றிற்கு இரு உரையாசிரியர்களும் மாறுபட்ட கருத்தினை உடையவராய் உள்ளர். "தன்னை அவன் காண வொண்ணாது மறைந்து நின்று தான் அவனைக் காணுதல்"[76] என இளம்பூரணர் கூறுவர். நச்சினார்க்கினியர் "புணர்ந்து நீங்கும் தலைவனை அவன் மறையுமளவும் காதல் மிகுதியால் காணுமிடத்தும்"[77] என மொழிவர். க.வெள்ளைவாரணர் இளம்பூரணர் கருத்தை வழிமொழிவர்.

தலைவிக்கு இச்சூழலில் கூற்று நிகழாதென இளம்பூரணர் உரைத்ததன் காரணமாக மேற்கோள் செய்யுள் கூறினார் இல்லை.

நச்சினார்க்கினியர் அகநானூறு 330-ஆம் செய்யுளைக் காட்டுவர். அதில் 'மதியுடன்படுத்தத் தலைவனுடைய வேண்டுகோளுக்கு இணங்கிய தோழி தலைவியிடம், முன்பு தலைவன் தலைவியிடம் சோலையில் தங்கிய நிகழ்வைக் கூறி அவன் பிரிந்து செல்ல மனமின்மையுடன் தேர் ஏறி அத்தேர் மறையுமளவு காதல் மிகுதியால் தலைவி கண்டதைக்,' கூறித் தலைவியை உடம்படும்படிச் சொல்லியதாகக் காட்டுவர். மற்றும் இச்செய்யுளினை உரையாசிரியர் தலைவி கூற்றாகக் கொண்டுள்ளார். ஆயின் துறையாசிரியர்கள் தோழி கூற்றாகக் கூறியுள்ளனர்.

## தற்காட்டுறுதல்

தற்காட்டுறுதல் எனும் தலைவி கூற்றிற்கு இளம்பூரணர் "தலைவியின் இயல்பினைத் தலைவன் உணருமாறு அவனெதிரே புலப்பட்டுத் தோன்றுதல்"[78] என்பர். "தலைவியின் நிலையை யாரேனும் தலைவனுக்குச் சென்று கூற வேண்டும் என்று கருதிய நிலையிலும்"[79] என நச்சினார்க்கினியர் கூறுவர். வெள்ளைவாரணர் இளம்பூரணரைப் பின்பற்றுவர்.

தலைவி இச்சூழலில் குறிப்பு மட்டும் நிகழ்த்துவர்; கூற்று நிகழாது என இளம்பூரணர் உரைப்பதன் வழி எடுத்துக் காட்டுச் செய்யுள் இயம்பவில்லை. இருப்பின் நச்சினார்க்கினியர் "தன்னைத் தலைவன் காணா வகையில் நாணால் மறைந்தொழுகினும் தன் பொலிவழிவினைத் தலைவனுக்குக் காட்டல் வேண்டுதற் கண்ணும்"[80] என்பதைக் கூறி குறுந்தொகை 98ஆம் செய்யுளில் இடம் பெறும் அடியான "இன்னாயினள் என்றது தற்காட்டுறுதல் என்றும் செப்பிநர் பெறினே என்பதனால் களவாயிற்று, கற்புக்கு வாயில்கள் செப்புவர் உளராதலின்"[81] என விளக்குவர்.

## நிறைந்த காதலில் சொல் எதிர் மழுங்குதல்

தலைவியின் இக்கூற்றிற்கு இளம்பூரணர் "நிரம்பிய வேட்கையால் தலைவன் கூறிய சொற்கேட்டு எதிர் மொழி கூறாது மடிந்து நிற்றல்"[82] எனக் குறிப்பர். ஆயின் இதற்கு மாறாக, நச்சினார்க்கினியர் "தலைவி காதல் மிகுதியால் தலைவன் பரத்தைமையை எதிர் கூற நினைந்து கூற்றெய்தாது குறைபடுதற் கண்ணும்"[83] என உரைப்பர். 'எதிர் மொழி கூறாது மடிந்து நிற்றல்' என இளம்பூரணர் கூறுவதால் குறிப்பு மட்டும் நிகழும்; கூற்று நிகழாது என்பது அறியப் பெறுகிறது. ஆதலின் எடுத்துக்காட்டுச் செய்யுள் கூறவில்லை.

நச்சினார்க்கினியர் தோழி கூற்றில் அமைந்த நற்றிணைப் (203) பாடலில்

'கரப்பவும் கரப்பவும் கைமிக்கு
உணர்த்த தோழி உண் கண்நீரே'

எனக் கூறுவதன் வழி, தலைவனது பரத்தமையை எதிர் கூற நினைந்து கூற்றெய்தாது குறிப்பாகக் கண்கள் கலங்கிற்று எனக் கூறுவர்.

## வழிபாடு மறுத்தல்

இளம்பூரணர் இக்கூற்றிற்கு, "தலைவன் வேட்கைக் குறிப்புக் கண்டு சாரல் உற்ற வழி அதற்கு உடம்படாது மறுத்தல்"[84] என்பதனை உரைத்து இலக்கியச் சான்றாக 'பல பசுக்களை வெறாது கூடும் ஏறு போலத் தலைவன் பல மகளிரைக் காமுற்றுக் கூடுபவன்' எனத்

தலைவனைக் கடிந்து அவனை வழிபடுதலை மறுத்து உரைப்பள் எனக் கூறுவர்.

இக்கூற்று இளம்பூரணர் கருத்துப்படி, குறிப்பினாலும் கூற்றினாலும் நிகழும் என்பதால் கூற்றினால் நிகழ்வதற்கு மேற்கோள் கலித்தொகை: 108: 46-51 ஆம் பாவினைக் காட்டினர்.

நச்சினார்க்கினியர், வருத்தம் மிகுதியால் தலைவனை வழிபடுதலை மறுத்து என விளக்கம் கூறி,

"'தலைவன் சால்புடையவன் அல்லன்' (நற்: 64)

'துன்பக் காலத்தில் உதவாதவனின் நினைவு ஒழிக' (குறுந்:102)

'உடன்போக்கு நேர்வித்து வந்த தோழியிடம் நாண் காரணமாக' "[85]

(குறுந்:383)

ஆகிய மூன்று சூழ்நிலைகளில் தலைவனைத் தலைவி மறுக்கும் நிலையினை எடுத்துக்காட்டுவர்.

## மறுத்து எதிர் கோடல்

தலைவி தலைவனை மறுத்தவிடத்து மீண்டும் ஏற்றுக் கொள்ளும் நிலையினை,

"மறுத்தாங்கு மறாது பின்னும் ஏற்றுக் கோடல்"[86]

என்பர் இளம்பூரணர்.

மேற்கோள் இலக்கியமாக வழிபாடு மறுத்தமைக்குக் காண்பித்த அக்கலித்தொகைப் பாடலின் பின்னைய அடிகளில் (108: 58-63) இடம் பெறும் செய்தியை எடுத்துக் கூறுவர். அதானின் முன்பு செய்த குறியிடத்திற்கு வந்து ஆம்பற் பண் அமைந்த குழலால் அழைப்பாயாக எனத் தலைவி கூறுவதாகக் காட்டுவர்.

நச்சினார்க்கினியர், தலைவன் நுகர்ந்த "தலைவியின் பெண்மை நலம், பெரிய களிறு உண்ணும் பொருட்டு வளைக்கவும் முறிந்து, கீழே விழாது நாரின் தொடர்பினால் மீண்டும் தழைப்பது போல தலைவனின் தொடர்பு அழிந்தொழியாமல் தலைவன் வரைவான் எனக் குறுந்தொகை 112-ஆம் செய்யுளை எடுத்துக்காட்டி இனி நாணே உள்ளது கற்புப்போம் என்றமையின் வழிபாடு மறுத்த தலைவியே அவனை ஏற்றுக் கோடலை விரும்பிய கண்ணும்"[87] என்பது பட மொழிவர்.

## பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்

இக்கூற்றிற்கு இளம்பூரணர் 'தலைவன் தலைவியிடம் இரங்கிய நிலையில் தலைவி இவ்விடத்து எமர் நின்னைக் காண்பர். ஆதலின் நாளை கன்றோடு மேய்ச்சல் புலம் செல்வோம் வருக' எனக் கூறுவதாக அமைந்த கலித்தொகை 110-ஆம் பாடலைக் காட்டி இது "குற்றம் தீர்ந்த முறுவல் சிறிதே தோற்றுவித்த"[(88)] நிலை என்பர்.

தலைவி "தலைவனால் தோன்றிய நோயும் பசலையும் முருகனால் தீரும் என வெறியாட்டு எடுத்த நிகழ்வு தமரின் அறியாமையென உணர்ந்து, நகைத்ததைக் காட்டும் அகநானூறு 22-ஆம் பாடலைச் சான்றாக நச்சினிார்க்கினியர் காட்டுவர். இவ்விடத்து, 'தலைவியின் கற்பிற்கு வரும் பழிதீர்ந்த தன்மையால் தன்கண் தோன்றிய மகிழ்ச்சியினைச் சிறிதே தோழிக்குத் தோற்றுவித்தற் கண்ணும்' என்பதனாலும் "தலைவனால் தோன்றிய நோயும் பசலையும் முருகனால் தீர்ந்தது என்று தலைவன் கேட்டீர் கற்பிற்குப் பழியாமாதலின் 'பழி'என்றார் தொல்காப்பியர்"[(89)] என உரையாசிரியர் கூறுவது சிறப்பிற்கு உரியது.

### கூற்று

களவில் தலைவி, தலைவன், தோழி ஆகிய இருவரிடம் நிகழ்த்தும் கூற்று, பின்வருமாறு வரையறை செய்யப் பெறுகிறது.

அ. தலைவி மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழி உரைத்தல்

ஆ. தலைவி அருமறையைச் சொல்லுதல்

இ. தலைவி தன் குறிப்பிழைப்பாகி நிற்கப் பெற்றவை

ஈ. தலைவி கலக்கமின்றித் தெளிதல்

உ. தலைவி தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தமையும் தோன்றக் கூறுதல்

ஊ. வழுவமைதி நிலை

ஆகியவை தலைவி கூற்றிற்குரிய வரையறையாகக் கொள்ளப் பெறுகின்றன.

**அ. தலைவி மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழிக் கூற்றுகளாக**

1. கைப்பட்டுக் கலங்கினும்
2. நாணும் மிக வரினும்
3. இட்டுப் பிரிவிரங்கினும்
4. அருமை செய்தயர்ப்பினும்
5. வந்தவழி எள்ளினும்
6. விட்டுயிர்த் தழுங்கினும்
7. நொந்து தெளி வொழிப்பினும்
8. அச்சம் நீடினும்
9. பிரிந்த வழிக் கலங்கினும்
10. பெற்ற வழி மலியினும்
11. வருந் தொழிற்கு அருமை வாயில் கூறினும்
12. கூறிய வாயில் கொள்ளாக் காலையும்

ஆகிய பன்னிரண்டும், "தலைவி தோழியை நோக்கி என்செய்வோம் என உசாவுதலோடும் தனது காதன்மை தோன்ற உரைப்பள்"[91] என்பர். மற்று இப்பன்னிரண்டும் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின் நிகழ்வன. உள்ளப் புணர்ச்சியால் உரிமை பூண்டிருந்தவரும் இவ்வாறு கூறுவர்"[92] என மொழிவர்.

மேற்கூறிய "பன்னிரண்டு வகையும் ஒருத்தி மாட்டு ஒருங்கு நிகழ்வன அல்ல. இவ்விடங்கள் உரைத்தற்கு இது இடமென இலக்கணம் கூறியவாறு"[93] எனக் கூறுவதை நோக்கின் வேறு பல இடமும் உள என்பது அறியப் பெறுகிறது.

## 1. கைப்பட்டுக் கலங்கினும்

தலைவன் தலைவியை அவள் அறியாதபோது தழுவினன்; அது அவளது விருப்பின்றி நிகழ்ந்தது என்பதை,

'அல்லல் களைந்தனன் தோழி' (கலித்: 54:16)

எனத் தலைவி கூறுவதன் வழி, கலக்கம் எய்திய நிலை புலப்படுகிறது. இதனை, "தலைவன் கையகப்பட்ட பின்பு என்செய்தே மாயினேம் எனக் கலக்கமுறினும் என்றவாறு"[94] என்பர் இளம்பூரணர். ஆதலின்

மேற்குறித்த கலித்தொகைப் பாடல் தலைவி தோழிக்கு அறத்தோடு நின்ற முறைமையை விளக்குவதாகும்.

நச்சினார்க்கினியர் "தலைவி குறிப்பினின்றி எதிர்ப்பட்ட தலைவன் ஒரு வழி அவளை அகப்படுத்த வழிக் காட்சி விருப்பினளாயினும் அப்பொழுது அவள் கலங்கினள்"(95) எனக் கூறுவர். இவர் இளம்பூரணர் குறித்த கலித்தொகைப் பாடலை மேற்கோளாகக் காட்டுவர். மற்றும், 'உறுகழி மருங்கி னோதமொடு மயர்ந்த' எனும் தலைவன் கூற்றில் அமைந்த அகநானூற்றுச் செய்யுளுள் "தலைவி குறிப்பின்அன்றி எதிர்ப்பட்ட தலைவன் அவளை நெருங்கிய போது அவள் கண்ணீரை மறைத்துத் தலை சிறிது தாழ்த்தினாள் என்றவிடத்துக் காட்சி விருப்பினை மீதூர்ந்த கலக்கம் புலப்பட்டது"(96) என்பர்.

## 2. நாணுமிக வரினும்

தொல்காப்பியர் குறிப்பிடும் இக்கூற்றுக்கு இளம்பூரணர், "தலைவிக்கு முன்புள்ள நாணத்தினும் மிக நாணம் வந்துழியும்"(97) என்றும் நச்சினார்க்கினியர், "தலைவனை எதிர்ப்பட்ட தலைவி தன் பெரு நாணுடைமை கூறித் தலைவனை ஏற்றுக் கொள்ளாது நிற்பினும்"(98) எனவும் உரைப்பர்.

க.வெள்ளைவாரணர் "தலைவன் தலைவியைச் சிறிது காலம் பிரிந்த நிலை உளதாகிய இரக்கத்தின் கண்ணும்"(99) என்றும், பாலகிருட்டிணன் "தலைவனோடு குறியிடத்தில் அளவளாவும் போது நாண் மிகுதியாக வருமிடத்து"(100) எனவும் இக்கூற்றிற்கு உரை வகுத்துள்ளனர்.

இதற்கு இளம்பூரணர், தலைவி தோழி உரையாடும் கலிப்பாடலை (கலி. 63: 1-5). எடுத்துக் காட்டுகிறார். இதில் "தலைவன் வருகையால் பிறர் பழிதூற்றுவர் என எண்ணித் தலைவனைப் போகச் சொன்னால் தலைவன் போகாமல் இருக்க இனித் தலைவனை வாராதே எனத் தடுக்கும் இடமில்லை என்பதைக் காட்டுவர். இச்செய்யுட் பொருளும்

இளம்பூரணர் உரையும் அத்தகைய பொருத்தமுடையதாக இல்லை." ஏனெனின் இதே கலிப்பாடலில்,

'நின்னோடு சுழுங்கால் நீயும் நிலங்கிளையே
என்னோடு நிற்றல் எளிதன்றோ'

(கலி. 63: 15-16)

எனும் அடிகளை நோக்குமிடத்து, 'தலைவனோடு தலைவி பேசும் பொழுது கால் விரல்களால் நிலத்தைக் கிளறிக் கொண்டே தோழியுடன் நிற்பது எளிய செயல் இல்லை' எனக் கூறுவது பொருத்தமாய் அமையும்.

இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் மேற்கோள் செய்யுள் தோழி கூற்றில் அமைந்துள்ள நற்றிணைப்(172)பாடலாகும். இதில்,

'தாய் வளர்த்த புன்னை மரம் தலைவிக்குத்
தங்கை உறவுடையது ஆதலின் இப்புன்னை
மர நிழலில் கூடுதற்கு நாணுகிறோம்'

என்பதை நோக்குமிடத்து, தலைவியின் நாண் கூறித் தலைவனை ஏற்றுக் கொள்ளாத நிலை பொருத்தமுடையதாய் அமைந்துள்ளது.

## 3. இட்டுப் பிரிவு இரங்கினும்

இக்கூற்றிற்கு இளம்பூரணர் "தலைவன் இட்டு வைத்துப் பிரிவன் என அஞ்சியதற்கு இரக்கமுறினும்"[101] எனக் கூறுவர். ஆயின் "சேணிடையின்றி இட்டிதாகப் பிரிந்துழித் தலைவி இரங்கினும் கற்பினும் சொல்லாது பிரிதலையும் இட்டுப் பிரிவென்ப களவு போல நிகழ்பொருள் உணர்த்திப் பிரிதல் அருமையின்"[102] என நச்சினார்க்கினியர் உரைப்பர்.

க.வெள்ளைவாரணர் "தான் தலைமகனால் காண்டற்கரியளாகிய காலத்து அவன் வருதலைத் தவிர்த்த நிலையிலும்"[103] என்றும் 'இருவகைக்குறியிலும் தலைவன் இடையறாது வரலால் தலைவியின் மீது அம்பலும் அலரும் தோன்றும். இவ்விரண்டும் தோன்றத் தலைவனே காரணம். எனவே தலைவன் இரண்டொரு நாள் குறியிடம் வாராமல் இருத்தலால் அலர் கரந்தொழியும் எனக் கருதித் தலைவியை

விடுத்துப் பிரிந்து செல்வான். சின்னாள் குறியிடம் வாராமல் தனது ஊரிலே தங்கி விடுவான். இவ்விட்டுப் பிரிவில் தோழியிடம் தலைவி கூற்று நிகழ்த்துவள்' எனக் குறிப்பர்.

இச் சூழலுக்கு இளம்பூரணர் காட்டும் ஐங்குறுநூற்றுச் செய்யுளில் (221) 'தோழி! நம் காதலர் பாவையின் அழகு போலும் என் அழகு அழியவும் நல்ல மேனி பசலை அடையவும், நம்மைப் பிரிந்து தம் மலைநாடு நோக்கிச் செல்வேன் என்றார்.' ஈண்டுத் தம் மலைகெழு நாடு எனத் தலைவி கூறுவதன் வழி நீண்ட பிரிவின்றி, சேய்மைப் பிரிவென்பது உணர்த்தப் பெறுகிறது. ஆதலின் இட்டுப் பிரிவிற்கு இச்செய்யுளை உரைகாரர் காட்டினார் போலும்.

நச்சினார்க்கினியர் இக்கூற்றிற்கு இரண்டு செய்யுள்களை மேற்கோளாகக் காட்டுவர். அவை, குறுந்தொகை 97,334. அவற்றில்,

'தோழி யான் இவ்விடத்திலே உள்ளேன். என் பெண்மை நலனோ, கடற்கரைச் சோலையிடத்து உள்ளது. தலைவனோ தன் ஊரிடத்து உள்ளான். எம்மிடையே உள்ள மறை ஒழுக்கமானது அலராயிற்று' எனக் கூறும் தலைவியின் கூற்றை ஆயுங்கால் துறைவன் தம் ஊரனே என்னும் அடிகள் இட்டுப் பிரிவிற்குப் பொருத்தமாய் அமைந்துள. மற்றொன்றில்,

'இருநீர்ச் சேர்ப்ப நீப்பின் ஒருநம்
இன்னுயிர் அல்லது பிறிது ஒன்று'

(குறுந். 334: 4-5)

எனக் கூறுகையில் நீப்பின் என்பது பிரிதல் உணர்த்தி இட்டுப் பிரிவாயிற்று.

## 4. அருமை செய்து அயர்ப்பினும்

தொல்காப்பியர் மொழியும் இக்கூற்றிற்கு "தலைவன் வருதற்குக் காவலாகிய அருமை செய்ததனால் அவனும் வருதலைத் தவறினும்"[105] என்றவாறு என இளம்பூரணர் உரைக்க நச்சினார்க்கினியர் "முற்கூறிய இட்டுப் பிரிவின்றித் தலைவன் தன்னை அரியனாகச் செய்து கொண்டு தன்னை மறப்பினும்"[106] எனக் கூறுவர். மேலும் "அது

தண்டாதிரத்தலை முனைந்த மற்றைய வழித் தலைவன் தானும் அரியனாய் மறைந்தான் போன்று காட்டினும் அவ்விரண்டும் கூறுதலாம்"[107] என்பர்.

இக்கூற்றிற்கு இளம்பூரணர் திணை மொழி ஐம்பதில் (41) விளக்கப் பெறும் செய்யுளைக் காட்டுவர். இதில், நெய்தற் பூக்கள் நிறைந்த படப்பையில், கால்வாய்களை உடைய தாழைக் கானலுடன் சேர்ப்பன் முதல் நாளில் கண்டது போல இன்றும் காணப்பட்டான். அதாவது அரியனானான். அவன் செய்த குறியிடங்கள் பொய்த்தன. ஆதலின் ஆன்றமைந்த அவன் தொடர்பு ஐயந்தானோ எனத் தோழி மொழிவதனை நோக்குமிடத்து முதல் நாள் காட்சியில் காணப்பட்டது போல் தலைவன் அரியனாய் இருந்தது உணர்த்தப் பெறுகிறது.

நச்சினார்க்கினியர் மேற்குறித்த பாடலைக் காட்டி மேலும் 'தீமை செய்தவரிடத்தும் பெரியவர்கள் அத்தீமை செய்தோர் தாமே நன்கு அறிந்து இனிச்செய்யாது உணர்வாராக எனப் பொறுப்பர் என்று கூறுவார்கள். அப்படியே நம்மைப் பிரிந்தார் தாமே உணர்க என நாமிருப்போம்' எனும் நற்றிணைப்(116) பாடலை எடுத்து மொழிவர். ஈண்டுத் தலைவி கூறுவதனை நோக்குமிடத்து "தீங்கு செய்தார் நம்மைத் துறத்தலின் நாம் அறியாதவர்கள் ஆயி தாமும் அரியராயினர்"[108] என்று நச்சினார்க்கினியர் கூறியது சிறந்து அமைந்துளது.

## 5. வந்த வழி எள்ளினும்

இட்டுப் பிரிந்தும், அருமை செய்து அயர்ந்தும் கடந்து வந்த தலைவனிடத்து, தலைவி அவனை இகழ்ந்து கூறுவதனை இளம்பூரணர் "தலைவன் வந்தவிடத்து அலராகும் என்று அஞ்சி இகழ்ந்த வழியும்"[109] என்பர். "பெரியதாகிய இடையீட்டினுள் அரிதாகத் தலைவன் வந்த ஞான்றும் பெறாத ஞான்றைத் துன்ப மிகுதியாற் பெற்றதனையுங் கனவு போன்று கொண்டு இகழ்ந்திருப்பினும்"[110] என நச்சினார்க்கினியர் குறிப்பர்.

இதற்கு இளம்பூரணர், கலித்தொகையில்(46) தோழி கூற்றில் அமைந்துள்ள செய்யுளைக் காட்டுகிறார். அதானின் 'தலைவனைக் கூடுதல் விருப்பால் நடு இரவில் அவன் செய்யும் அடையாளத்தை

நோக்கியிருந்து நொச்சிப்பூ விழும் ஒலியை அவன் செய்யும் அடையாளம் என நினையும் செவியோடு வருந்தி இருந்தாள். அவன் அவ்வமையிருக்கவும் இடி முழங்கும் நடு இரவில் வந்தும் நான் பயன்பெறவில்லை. ஏமாறித் திரும்பினேன். பகற்குறியையும் இழந்துவிட்டேன் என்று நீ வருத்தம் எய்தியது சொல்லுகின்றாய்' என்பள். இச்செய்யுளுள் தலைவன் வருந்தியமைத் தோழி கூற்றுவழி உணர்த்தப் பெற்று, தலைவன் எண்ணிப் பெற்றான் எனும் பொருளைப் பெற வைக்கின்றது. மற்றும் 'கண் போல் திரண்ட முத்துக்களைப் பயக்கும் கடலில் பண்டங்களாகக் கொள்ளும் நாவாய்கள் வழங்கும் துறைவனைக் கானலிடத்துக் கண்டது போலத் தெளிவடைந்தேன், இதற்குமுன் இருந்த உணர்வு இல்லாத யான்' என ஐந்திணை எழுபதில்(41) அமைந்த செய்யுளினைக் கூறுவதன் வழி அலராகும் என்றெண்ணி அஞ்சிப் பின்னும் வருவேன் எனும் குறிப்புக் காணப் பெற்றமையால் தலைவனைத் தலைவி எள்ளியது உணர்த்தப் பெற்றது. நச்சினார்க்கினியர் மேற்குறித்த ஐந்திணை எழுபதின் செய்யுளைக் காட்டி மேலும் இரண்டு குறட்பாக்களை(1152,1179) எடுத்து மொழிவர். அவற்றில் இடம் பெறும் செய்தியானது 'முன்பு அவருடைய பார்வை இன்பம் கொடுத்தது இப்பொழுது அவருடைய சேர்க்கை பிரிவுக்கு அஞ்சிகின்ற துன்பமுடையது.' என்பதையும் 'தலைவன் வாராத போதும் உறங்குவதில்லை, வந்தபோதும் உறங்குவதில்லை'; என் கண்கள் இவற்றிற்கிடையே மிக்க துன்பத்தை அடைந்தன! என்பதையும் எடுத்து மொழிவர். பிறிதும்

'மான் அடி அன்ன கவட்டிலை அடும்பின்
தார் மணி அன்ன ஒண்புக் கொழுதி'

(குறுந். 243: 1-2)

எனும் செய்யுளுள் 'தலைவி நெஞ்சழிந்து தலைவனை நினைக்கும் போது துன்பம் உண்டாகின்றது, அவனை எண்ணல் இயலாத ஒன்று' எனத் தலைவன் வந்த ஞான்றும் பெறாத ஞான்றைத் துன்பமிகுதியாற் பெற்றதனைக் கூறியது என்பதனையும் செப்புவர்.

## 6. விட்டு உயிர்த்து அழுங்கினும்

இதற்கு இளம்பூரணர் "மறையாது சொல்லி இரங்கினும் என்றவாறு"(111) எனக் குறிப்பர். "கரந்த மறையினைத் தலைவி தமக்கு உரைத்தற்குத் தோழிக்கு வாய்விட்டுக் கூறி, முன் கூறியதனையே தமர் கேட்பக் கூறாது தவறினும்"(112) என நச்சினார்க்கினியர் உரைப்பர்.

க.வெள்ளைவாரணர் "தலைவனொடு தனக்குள்ள காதலுறவு வெருவி வாய்சோர்ந்து வெளிப்பட்ட நிலையில் அதனைச் செவிலி முதலியோர்க்குப் புலனாகாதவாறு தன் மனத்தடக்கி இரங்கும் நிலையிலும்"(113) எனக் கூறுவர். ஆயின் "பிரிந்து சென்றோன் வாராது நீட்டிக்கும் போது தனது துன்ப நிலையை வாய்விட்டுப் புலம்பும் போதும்"(114) எனக் கருதுகிற கருத்தும் நோக்குதற்குரியது.

இக்கூற்றிற்கு இரு உரையாசிரியர் கருத்தும், இரு அறிஞர்கள் கருத்தும் மாறுபாடு உடையது என்பது கருதற்குரியதாகும்.

இளம்பூரணர் மறையாது சொல்லி இரங்கினும் எனச் சுருங்கக் கூறுவதனை ஆயும் போது மறை என்பது ஒழுக்கமாகிய களவினைத் தோழியிடம் கூறி இரங்குவள் என்பதை அவர் காட்டும் எடுத்துக் காட்டுச் செய்யுளின் வாயிலாக அறியமுடிகிறது. அதில்,

'தோழி, மணிமலை நாடன் பிணி நிறமாகிய
பசலை, நீங்கித் தோள் பருக்கக் காலத்தைக்
கணிக்கும் பொன்னிற வேங்கை மலரில்
அமர்ந்து வண்டார்க்கும் இந்த அழகிய மாலைப்
பொழுதில் வருவானோ? ' (கைந்: 6)

என்ற வழியும்,

'காட்டுப் பசு துள்ளித் திரியும் சோலையில்
மந்திகள் துள்ளியோடும் படியான மலை நாடனது
மார்பானது என் நெஞ்சைத் தோய்ந்து அங்கேயே
நடமாடிக் கொண்டிருக்கும்' (தி.மொ.ஐ.9)

எனத் தனது களவினை வெளிப்படுத்தும் போதும் அறத்தொடு நிற்கும் நிலை நோக்கற்பாலது. நச்சினார்க்கினியர் உரைக்கும் உரைக்குத் தக

'இன்னுயிர் கழிவதாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காம நோயெனச் செப்பாதீமே'

(அகநா: 52: 13-15)

எனக் கரந்த மறையினைத் தலைவி தமர்க்கு உரைத்துத் தோழிக்கு வாய்விட்டுக் கூறி அதனைத் தமர் கேட்பக் கூறாது தவிர்க்கும் நிலை உணர்த்தப் பெறுகிறது. மற்றும்,

'செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பாலான '

எனத் தலைவி இவை உடையள் எனவும், மறைப் புலப்படுத்தற்கு உரியள் அல்லள் என்றும், மறைப் புலப்படுத்தற்கு உரியள் தோழி என்பதும் பெறப்படுகிறது.

## 7. நொந்து தெளிவு ஒழிப்பினும்

நொந்து தெளிவு ஒழிப்பினும் என வரும் தலைவி கூற்றிற்கு இளம்பூரணர், "தலைவன் தெளிவித்த தெளிவை நொந்து அதனை யொழிப்பினும்"[115] என்பர். நச்சினார்க்கினியர், "வரைவு நீட்டித்துத் தலைவன் சூளுற்ற வழி அதற்கு நொந்து தெளிவிடை விலங்கினும்"[116] எனச் செப்புவர். க.வெள்ளைவாரணர், "தான் தலைவனைக் காணப் பெறாமைக்கு உளம் நொந்து நின்னைப் பிரியேன் என அவன் தன்னை நோக்கிக் கூறிய தெளிவுரையினை உறுதியெனக் கொள்ளாது ஐயுறும் நிலையிலும்"[117] என விளக்குவர். "இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடுகளில் உரைத்த தெளிவு மொழிகளைப் பொய்த்தான் என்று கூறி வருந்தும்போது"[118] என உரைப்பர். மேற்கூறிய உரையாசிரியர்களின் உரையையும், அறிஞர்களின் கருத்தையும் நோக்குமிடத்து, தலைவன் கூறிய மொழியினை ஒழித்தும், நொந்தும், ஐயுற்றும், பொய்த்தும், தலைவி கொள்வாள் என்பது அறியப் பெறுகிறது.

இக்கூற்றுக்கு இளம்பூரணர் காட்டும் பாடலில் தலைவி,

'மன்றத்து உற்ற கல்லில் முசுக்கலை துள்ளித்

திரியும் படியான குன்ற நாடன் இயற்கைப்
புணர்ச்சியின் போது தெளிவித்த தெளிவினை
எனக்கு நல்லதைச் செய்யும் என்று தெளிந்தேன்
அந்த ஒன்றும் எப்போதும் எனக்கு நல்லதையே
செய்யும் அத்தன்மையதாகும்' (ஐந். எழு. 9)

எனக் கூறுவதனை நோக்குமிடத்து, இயற்கைப் புணர்ச்சியின் போது தலைவன் சொன்ன சொல்லை நொந்து பின்பு அதனை மறந்து, நம்பிக்கை கொள்வதும் பெறப் பெறுகிறது.

இச் செய்யுளினையே நச்சினார்க்கினியரும் காட்டுகிறார். மேலும்,

'பார்வைக்கும் பயிலுதற்கும் இனிமை தருதற்கும்
உரியதாகிய புன்கமலர் பரந்த மலர்ப் பரப்பு
இப்பொழுது அஞ்சுதற்குரிய தோற்றத்தைத் தரும்
என்றமையால் வரைந்து மணம் செய்வாய்
என்ற நம்பிக்கையைத் தரும் நின் சூள்
இப்பொழுது வருத்தத்தைத் தருகின்றது' (குறுந். 53)

என்றத் தோழி கூற்றில் வரைவு நீட்டித்துத் தலைவன் சூளுற்ற வழி நொந்த செய்தி புலனாகிறது.

## 8. அச்சம் நீடினும்

இக்கூற்றுக்கு இளம்பூரணர், "தலைவன் வருகின்றது இடையீடாக அச்சம் மிக்குழியும்"(119) என்பர். நச்சினார்க்கினியர், "வரைவு நீட்டித்துத் தலைவன் சூளுற்ற வழி, தெய்வம் அச்சூளிற்கு அவனை வருத்தும் என்றும், தந்தை தனையர் அறிகின்றாரோ வென்றுங் கூட்டமுண்மை உணர்ந்த தோழிக்கும் உண்மை கூறுதற்கும் அஞ்சிய அச்சம் நீடிப்பினும்"(120) என அச்சம் நீடினும் என்பதை மூன்றாகப் பகுத்து உணர்த்துவர்.

க.வெள்ளைவாரணர், இளம்பூரணர் கருத்தை வழிமொழிகின்றார். ஆயின் பாலகிருட்டிணன், "தலைவன் வாராது பொய்த்து விடுவானோ என்ற அச்சம் நீடும் போதும்"(121) என்று மாறுபட்டுக் கூறுவர்.

இளம்பூரணர், இக்கூற்றிற்குக் கூறும் எடுத்துக்காட்டுச் செய்யுள்,

'திணை மேய்ந்த பன்றி மலையடுக்கத்து உறங்கும்படி

யான மலை நாடனாகிய தலைவன் இங்கு
வாராமைக்குக் காரணம் எம் தந்தையை
அஞ்சியது போலும் ஆம் அதுவே தான்
உறுதியான காரணமாம்' (ஐங். 261)

என்றமைவதை நோக்கும் போது நச்சினார்க்கினியர் குறிப்பிட்ட தந்தை தனையர் அறிகின்றாரோ எனும் அச்சம் பெறப்பெறுகிறது. மற்றும்,

'ஊர் மன்றத்துள்ள கடம்ப மரத்துத் தெய்வம் கொடியவரை அழிக்கும் என்பர்; சிறிதும் கொடியர் அல்லர் நம் தலைவர்; என் நுதல் தானே பசந்தது; என் தோள் தானே நெகிழ்ந்தது. இதற்கு அவர் காரணம் அல்லர்' (குறுந். 287) எனக் கூறும் இடத்து தெய்வ அச்சம் பெறப் பெறுகிறது.

நச்சினார்க்கினியர் மேற்குறித்த இரு செய்யுட்களையும் மேற்கோள் காட்டி, மேலும்

'புனை இழை நோக்கியும், புனல் ஆடப் புறம் சூழ்ந்து'(கலித். 76)

என வரும் செய்யுளில், 'தலைவிக்கு ஒரு தலைவனொடு உறவு உண்டு என ஊர் அலர் எழ அதனைக் கேட்ட தோழி, தலைவியிடம் உண்மை வினவ, அதற்குத் தலைவி கூட்டமுண்மையைக் கூறுதற்கு அஞ்சிய அச்சம்' உணர்த்தப் பெறுகிறது .

## 9. பிரிந்த வழிக் கலங்கினும்

களவில் "தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்த வழி மனம் கலக்க முறின்"[(122)] என்ற பொருளில் இளம்பூரணர், க.வெள்ளைவாரணர், பாலகிருட்டிணன் ஆகியோர் குறிப்பர். ஆயின் நச்சினார்க்கினியர் "களவு அலராகாமல் யான் பிரிந்துழித் தலைவி கலங்குவள் என்று அஞ்சித் தலைவன் பிரியாது உறைதலிற் பிரிவைக் கருதப் பெறாத் தலைவி அவ்வாறன்றிப் பிரிந்துழிக் கலங்கினும்"[(123)] என மொழிவர்.

இளம்பூரணர் இப்பிரிவைத் "தாளாணெதிரும் பிரிவு"[(124)] எனக் குறித்து 'ஆறு' செய்யுட்களை எடுத்துக் காட்டாகக் கூறுவர். அவை,

- 'தலைவன் பிரிந்ததால் தலைவியின் நெஞ்சமானது
  தலைவனொடு சென்று விட்டதால் திரும்பி வருமோ

வாராதோ எனக் கலங்குகிறாள்' (ஐங்.295)

- 'தலைவன் பிரிந்ததனால் தலைவியின் கண்கள் உறங்காவாயின' (குறுந். 5)
- 'கடல் அலையானது இரவிலும் தூங்காது இருப்பதற்குக் காரணம் என் தலைவன் போலக் கடற்கரைச் சேர்ப்பனும் தன் நலன் உண்டு நீங்கினானோ' (ஐந். எழு. 60)
- 'தலைவியின் நோய்க்கு மருந்து தலைவன் மீண்டும் வருதலே இதைத் தலைவன் உள்ளம் அறியுமோ' (ஐங். 292).
- 'என் தலைவன் என் கண்ணுக்குள் இருக்கின்றார். ஆதலின் அவர் மறைந்து விடுவார் என்று அறிந்து கண்ணுக்கு மை எழுத மாட்டேன்' (குறள். 1127).
- 'என் காதலர் எனது நெஞ்சினுள் இருக்கின்றார். ஆதலால் அவர்க்குச் சுடுமென்று அறிந்து நான் சூடு உள்ள உணவை உண்பதற்கு அஞ்சுகின்றேன் (குறள்.1120) ஆகியவற்றைக் குறிப்பர். ஈண்டு இளம்பூரணர் குறித்த ஐங்.295 ஆம் செய்யுளை நச்சினார்க்கினியர் காட்டி மேலும் 'நான்கு' செய்யுள்களை மேற்கோளாகக் குறிப்பர். அவை,
- 'தலைவன் பிரிவைத் தலைவியின் பசலை எவ்வனம் அறிந்ததோ அறியேன். அது என் நெற்றி முழுவதும் பரவியது எவ்வனம் ஆற்றுவேன்' (குறுந்:56)
- 'தோழி என் நெஞ்சம் என் தலைவரிடம் சென்று வினை முடிக்கும் வரை இருந்து அவரொடு வரலாம் என்று இருக்கின்றதோ அன்றி அவர் அருள் செய்யாமையால் யான் இருக்குமிடம் வந்து என் பசலையால் அடையாளம் தெரியாமல் இவள் அயலாட்டி என்று நினைத்து என்னைத் தேடிச் சென்றதோ'(நற்.56)

- 'பல்லி முட்டையிடம் புன்னை மரத்துத் தாது உதிர்ந்து வரியாகக் காணப்பெறும் மணல் மேட்டில் ஏறிக் கூடற் சுழியினை இழைத்துக் காண்போம்' (ஐங். 26.43)

எனும் செய்யுட்களின் வழித் தலைவன் பிரிவில், தலைவிக்குப் பசலை ஏற்படுதல், தலைவியின் நெஞ்சம் மீண்டும் வருமோ வாராதோ, கூடற் சுழியினை இழைத்துக் காணுதல் ஆகியன உணர்த்தப் பெறுகின்றன.

## 10. பெற்ற வழி மலியினும்

தொல்காப்பியர் மொழியும் இக்கூற்றிற்குத் "தலைவனோடு கூட்டம் பெற்ற போது மகிழும் போது"[(125)] என இளம்பூரணர், க.வெள்ளைவாரணர், பாலகிருட்டிணன் ஆகியோர் உரைப்பர். நச்சினார்க்கினியர்,

1. தலைவி இடையீடின்றித் தலைவனை எதிர்ப்படப் பெற்ற ஞான்று புதுவது மலியினும்,
2. வரைவு நீட்டித்த காலத்துப் பெற்ற வழி மலிவை வெளிப்படக் கூறுதலும்,
3. வரைவு நீட்டியாத வழிப் பெற்ற வழி மலிவை வெளிப்படுத்தாமையும்"[(126)] உணர்க

என மூன்று நிலையினைக் கூறுவர். இக்கூற்றிற்கு இளம்பூரணர் 'நான்கு' செய்யுள்களைச் சான்றாகக் காட்டுவர். அவையாவன,

- 'மேகம் பரந்து மறைதலின் விண்மீன் தெரியவில்லை, மழைநீர் பெருகி ஓடுதலின் நிலம் தெரியவில்லை. ஞாயிறு மறைதலின் இருள் மிகுந்தது. பலரும் தூங்கும் நள்ளிரவில் எப்படி வந்தாய், எம்சிறு குடியை எப்படி அறிந்தாய் யான் மிக வருந்துகிறேன்' (குறுந்.355) எனத் தோழி கூற்றில் அமைந்த இப்பாடலினை நோக்குமிடத்து, மலிவு மறைந்து வருத்தம் சுட்டப் பெற்றிருப்பின் தலைவன் வரவு தலைவிக்கு மகிழ்ச்சி ஆயினும் வரைவு விரைதல் வேண்டி அங்ஙனம் தோழி மொழிந்தாள் போலும்.

- ‘நம்மொடு ஆடிய தண்ணந் துறைவன் இன்று மறைந்து கடத்தற்கரியதாயின் காவலமைந்த வீட்டின் புறத்தே வந்து நின்றான்’ (ஐங்.115) என்றும்,
- ‘தோழி கேட்பாயாக மெல்லம் புலம்பன் இன்று வந்தமையால் நலம் கெட்டிருந்த என் தோள்கள் நலம் பெற்று நல்லவாயின’ (ஐங்.120) என்றும்,
- “விரும்பியவருக்கு அமுதம் இனிமை பயப்பது போன்ற *அவனது மார்பகத்தில் வண்டு இடைப்புகா முடியாதபடி* முயக்கமும் குறையாத காதலும் முதல் நாள் போல அமைந்தன” (அகநா.332) என்றும் கூறுமிடத்து, தலைவன் வந்த மகிழ்வு, தலைவன் வந்தமையால் தலைவி நலன் பெற்ற மகிழ்வு, தலைவனொடு தலைவி கொண்ட முயக்க மகிழ்வு ஆகியன பேசப் பெறுகின்றன.
- நச்சினார்க்கினியர், இளம்பூரணர் குறித்த ‘இரண்டு’ (ஐங்.115,120) செய்யுள்களோடு மேலும் ‘இரண்டு’ செய்யுளைக் குறிப்பர். அவையாவன,
- ‘தலைவன் மலையிலிருந்து அருவியால் கொண்டுவரப்பட்ட காந்தள் மலரைத் தழுவி ஆற்றியிருந்தாள் (குறுந்.361) என்பதைக் குறிக்குமிடத்து வரைவு நீட்டித்த காலத்துப் பெற்ற வழி மலிவை வெளிப்படக் கூறினமை உணரப் பெறுகிறது’. மற்றும்,
- ‘தலைவன் வருதலை நோக்கித் தலைவி தாழ்ந்து வீட்டின் மரத்தை அது ஒடியுமாறு அணைத்துத் தங்கியிருக்கும் நிலையானது, நின் மார்பை முலைகள் வளைய முயங்கும் முயக்கத்தின் இனிதாகும்’ (அகநா.58) எனக் கூறுவதும் மேற்கூறிய செய்யுளோடு ஒப்புமையாக அமைகிறது.

## 11. வருந்தொழிற்கு அருமை வாயில் கூறினும்

தலைவன் வருவதற்குத் தடைகளாக வழியிடையே நேரும் இடையூறுகள் பலவாதலின் அவன் இங்கு வருதல் அரிது எனத் தோழி கூறிய நிலையில் தலைவிக்குக் கூற்று நிகழும். இக்கூற்றிற்கு உரையாசிரியர் இடையே பொருள் வேறுபாடு யாதொன்றுமில்லை.

இளம்பூரணர் இக்கூற்றிற்கு ஒரு செய்யுளினை மட்டும் காட்டாகக் கூறுவர். தோழி கூற்றில் அமைந்த இச்செய்யுளுள்,

'தலைவி, அருமையாகக் காவல் புரியும் அன்னையின் காவலையும் நீங்கி, இல்லத்தின் பெரிய வாயிலையும் கடந்து ஊர்ப் பொது மன்றத்தில் பகலிலேயே வாய் விட்டு அவன் ஊர் யாது என வினவித் தெரிந்து செல்வோம் வருக' (நற்:365) எனக் கூறுவதன் வழி, காவலின் கடுமை உணர்த்தப் பெற்று, தலைவன் வருகையின்மையை உணர்ந்து தலைவியும் தோழியும் தேடிச் செல்லும் முயற்சி அறியப் பெறுகிறது.

நச்சினார்க்கினியர், இக்கூற்றிற்குக் 'குறுந்தொகையில்(6) ஒரு' செய்யுளினை மேற்கோளாகக் குறிப்பர். அதானின்

'நள் என்ற ஒலியையுடையதாயிற்று நடு இரவு. ஊர் மக்களும் பேச்சடங்கி இனிதாகத் துயின்றனர். வெறுப்பின்றி உலகமும் துஞ்சின. துயிலாதவள் நான் ஒருத்தியே' எனத் தலைவி கூற்றாக அமைந்த இதனுட் பொழுது சென்றதில்லை, மாக்கள் இன்னும் துயின்றிலர் எனும் அருமையை வாயில் கூறிய வழித் தலைவி யாமமும் நள்ளென்றும் மாக்கள் துயின்றும் வந்திலரென வருந்திக் கூறியது அறியப் பெறுகிறது.

## 12. கூறிய வாயில் கொள்ளாக் காலையும்

தலைவன் வருவதற்குத் தடைகளாக வழியிடையே நேரும் இடையூறுகளைத் தோழி கூறுமிடத்துத் தோழி இவ்வாறு கூறியதனை மனம் கொள்ளாத காலத்தினும், தலைவிக்குக் கூற்று நிகழும். இத்தலைவி கூற்றிற்கு இளம்பூரணர் "தலைவன் வருதற்கு இடையீடாகக் காவலர் கடுகுதலான் ஈண்டு வருதல் அரிதெனத் தோழி தலைவிக்குக் கூறியதனை மனம் கொள்ளாத காலத்தினும்"[127] என்பர். நச்சினார்க்கினியர், இளம்பூரணர் கருத்தை ஏற்று மேலும் "தலைவற்குக்

குறை நேர்ந்து வாயிலாகிக் குறை நயப்பக் கூறிய வழியும் பிற வழியும் தோழி கூற்றினைத் தலைவி ஏற்றுக் கொள்ளாத காலத்துக் கண்ணும்"[128] என உரைப்பர். இளம்பூரணர் இக்கூற்றிற்கு,

- 'ஆண் குரங்கு கல் மலையேறி வாழைக் கனியைக் கன்னத்தில் அடக்கிக் கொண்டு விரைவாக ஓடும் மலை நாடன் கேண்மை பற்றிச் சொல்லத் தொடங்கினால் என் கை வளையல்கள் சரியும்' (கைந்:7) என்பதைக் காட்டுவர். நச்சினார்க்கினியர் தலைவி தோழி உரையாடல் வகையில் அமைந்த கலிப்பாடலில்,

  'தெருவின் கண் காரணம் இன்றிக் கலங்குவார்
  கண்டு வாரண வாசிப் பதம் பெயர்த்தல் போல் ஏதிய
  நீ மேற்கொள்வது எவன்' (கலித்:60)

எனும் செய்தியினை நோக்குமிடத்து, தலைவனுக்குக் குறை நேர்ந்த தோழிக்குத் தலைவி குறை நயப்பித்தது பெறப் பெறுகின்றது.

பிற வழியுந் தோழி கூற்றினைத் தலைவி ஏற்றுக் கொள்ளாததற்கு 'நம் தலைவர் என நீ சொல்லும் இச்சொல் கொல்லன் உலை நெருப்பில் தெளிக்கும் நீரானது சிறிது நெருப்பைத் தணிவித்தாற் போல நோய் மிக்க நெஞ்சிற்குச் சிறிது காவலாய் இருந்தது'(நற்:133)எனத் தோழி கூற்றினை நன்கு மதியாது கூறினாள் என்பது உணரப் பெறுகிறது.

## ஆ. தலைவி தன் அருமறையைச் சொல்லுதல்

தலைவி தன் அருமறையைச் சொல்லும் நிலையில் தலைவி கூற்றாக எண்ணப் பெறுவது,

'மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழித்
தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும்'

எனும் கூற்று அமைத்துக் கொள்ளப் பெறுகிறது.

இக்கூற்றிற்கு, "புறத்து விளையாடுதல் ஒழிந்து மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழித் தோழிக்குச் சூழ்தல் அமைந்த அரிய மறைப்பொருளைச் சொல்லும் என்றவாறு"[129] என்பர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் "காப்பு மிகுதிக்கண் மனைப்பட்டுக் கலங்கி உணர்வு அழிந்தவழித் தலைவி ஆராய்ச்சி உடைத்தாகிய அருமையினைத்

தோழிக்குக் கூறுதலும்"[130] என்பர். இருப்பினும் க.வெள்ளைவாரணர் "ஆய்ந்து நிறைவேற்றுதற்கு உரிய அரிய களவொழுக்கத்தினைத் தோழிக்கு வெளிப்படுத்தும் நிலையிலும்"[131] எனக் குறிப்பர். பாலகிருட்டிணன் நச்சினார்க்கினியர் உரையைத் தழுவுவர். இதற்கு இளம்பூரணர்,

"தோழி! பொழுது இருண்டது மழையும் விடாமல் பெய்யும் கண் சிம்புளிக்கப் பெய்யும் அவற்றுக்கு மேலும் நம் தாய் தன் புதல்வனைத் தழுவியபடி என்னை அன்னாய், அன்னாய் என விளிக்கும் இந்நிலையில் தலைவன் மழையில் நனைந்த யானை போல் வந்தனன். பின் அவன் என் செய்தானோ!"[132] (குறுந். 161) என்பதைக் காட்டுவர். ஈண்டுத் தலைவி குறிப்பிட்ட மழை இடையூறு, அன்னை உறங்காமை ஆகிய இடையூறுகளால் அவன் வந்து நின்றமை உணர்ந்தும் யான் செல்ல இயலாது கிடந்தேன். பின்னர் அவன் என் செய்தானோ! என்று மனைப்பட்டுக் கலங்கியதனை,

'. . . . . .  . . . . . .  . . . . . . அன்னோ

என் மலைந்தனன்' (குறுந். 161: 4-5)

என இரக்கக் குறிப்பின் மூலம் உணர்த்துவள். இச்செய்யுளினை நச்சினார்க்கினியரும் இக்கூற்றிற்கு மேற்கோளாகக் காட்டுவர். மேலும்,

'தோழி! அன்னை யானவள் நாம் காதலனைப்
புணர்ந்ததை அறிந்து புனங்காக்கச் செல்லும்
செலவை நீக்கினால் அதனால் இனிப் பகற்குறி
வாயாது; அதனால் பலாப்பழம் பெற்ற ஆண்குரங்கு ஏல என்று பெண்குரங்கை அழைக்கும்படியான மலைநாடன் புலந்து கொள்ளுமோ' (தி.மொ.ஐம்: 10) என்பதையும் காட்டுவர். இதனால் மனைப்பட்டுச் சிதைந்தவழி காட்டப் பெறுகிறது. நச்சினியார்க்கினியர் குறிக்கும்,

'துஞ்சாயோ என் குறுமகள்' (நற்: 61,5)

எனும் செய்யுளில் தலைவியைத் தாய் கூறிய வழி மனைப்பட்டுக் கலங்கியது அறியமுடிகிறது. மற்றும் காமம் மிக்க கழிபடர் கிளவியில் அமைந்து வரும் நற்றிணைப்(70) பாடலில் தலைவி குருகினிடம் தன் துயரினைத் தலைவனிடம் கூறுக, என்றமையால் தலைவி

மனைப்பட்டுக் கலங்கிக் காப்பு சிறைமிக்க கையறு கிளவிகளும் இதனுள் அடக்குவர்.

மேலும் தலைவியின் காமம் மிக்க கழிபடர் கிளவியாய் அமைந்த தொகை நூல்களுள் இடம்பெறாத "இருபாடல்களை"(132) இக்கூற்றிற்கு நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டுவர்.

## இ. தலைவி தன்குறி பிழைக்க நிற்கப் பெற்றவை

தலைவி தன்குறி பிழைக்க நிற்கப் பெறுவனவாக பின்வரும் கூற்றுகள் அமைக்கப் பெறுகின்றன. அவை

1. வேற்று வரைவுவரின் அது மாற்றுதற் கண்ணும்
2. நெறிப்பட நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்
3. பொய்தலை அடுத்த மடலின் கண்ணும்
4. கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்
5. வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும்
6. குறியின் ஒப்புமை மருடற் கண்ணும்
7. வரைவு தலைவரினும்
8. களவறிவுறினும்
9. தமர்தற்காத்த காரண மருங்கினும்
10. வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்
11. வரையா நாளிடை வந்தோன் முட்டினும்
12. உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்
13. தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்

ஆவகை பிறவும் தோன்று மன்பொருளே

என்பன.

### 1. வேற்று வரைவுவரின் அது மாற்றுதற் கண்ணும்

உயிர் தனது உடம்பினைவிட்டு நீங்குவது போலும் துன்பம் உண்டாக அயலார் தன்னை மணம் பேச வந்த நிலையில் அதனை மாற்றுதற் பொருட்டும் தலைவிபால் கூற்று நிகழும். இக்கூற்றிற்கு உரையாசிரியர் மற்றும் அறிஞரிடையே கருத்து ஒற்றுமை உள்ளது. இளம்பூரணர்,

'அன்னை வாழிவேண் டன்னை புன்னைப்
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
என்னை என்றும் யாமே யிவ்வூர்
பிரிதொன் றாகற் கூறும்
ஆங்கு மாக்குமோ வாழிய பாலே' (ஐங்: 110)

எனத் தோழி கூற்றாக அமைந்த இச்செய்யுளுள் 'பிரிதொன்றாகக் கூறும்' என்பது நொதுமலர் வரைவாகும். தோழி நொதுமலர் வரைவினைத் தன் வாயாற் கூறாது பிறிது வாயாற் கூற விரும்பியே 'பிரிதொன்றாகக் கூறும்' என்பள். இச்செய்யுளினையே நச்சினார்க்கினியரும் மேற்கோளாகக் காட்டுகிறார். மேலும்

'பெரு வரை அடுக்கத்துக் கிழவோன் என்றும்
அன்றை அன்ன நட்பினன்
புது வோத்து அம்ம இவ்வழுங்கல் ஊரே' (குறுந்: 385)

என்னும் செய்யுளுள் "புதுவோத்து" எனத் தலைவி கூறியது 'வேற்றுவரைவு' என்பர்.

## 2. நெறிப்பட நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்

தலைவியின் கூட்டமுண்மையைத் தோழி ஆராய்கின்ற காலத்து அவளது தோற்றம், செயல் முதலியவற்றில் உள்ள வேறுபாடு குறித்து வினவுவாள். அப்போது, தலைவி அதனை மறுத்துக் கூறுவாள். அந்நிலையில், "கண் சிவக்கும் நுதல் வேறுபாடு முதலிய மெய்வேறுபாடு நிகழ்ந்துழி அவற்றைத் தோழி அறியாமலும் செவிலி அறியாமலும் தலைவி தான் மறைப்பினும்"(133) என்பர் நச்சினார்க்கினியர்.

இக்கூற்றிற்கு இளம்பூரணரும், நச்சினர்க்கினியரும் கூறும் உரை ஒத்துக் காணப்பெறினும், 'இளம்பூரணர் ஓர் எடுத்துக்காட்டுச் செய்யுளும்' நச்சினார்க்கினியர் இரண்டு எடுத்துக்காட்டுச் செய்யுளும் காட்டுவர். இளம்பூரணர் காட்டிய "துறைவன் துறந்தெனத் துறையிருந்தழுதளன்"(134) எனும் செவிலிக்கு மறைத்தது எனும்

பொருளில் செய்யுளினை நச்சினார்க்கினியர் காட்டி "கண்ணுந் தோளுந் தண்ணுறுவ கதுப்பு"[135] எனத் தலைவி வருத்தம் கூறும் செய்யுளினை மேலும் காட்டுவர். இருப்பின் இரு உரையாசிரியர்கள் காட்டும் இச்செய்யுட்கள் தொகை நூல்களில் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### 3. பொய்தலை அடுத்த மடலின் கண்ணும்

தலைவன் தலைவியைக் கூடுவதற்குப் பின்னால் தோழியைக் குறையிரந்து நிற்பான், முடிவில் மடல் செயல் செய்வேன் என்பான். இதற்கு இளம்பூரணர் "தன் குறையினை விரைந்து முடித்துக் கொள்ளும் வேட்கையுடையனாகிய தலைவன் தன் பெருமைக்குத் தகாதவாறு மடலேறுவேன் எனப் பொய்யொடு மிடைந்து கூறும் மடற் கூற்றின் கண்ணும்"[136] என்பர். ஆயின் நச்சினார்க்கினியர், "தலைவன் தலைவியைத் தலைவனது குறைநயக்கச் செய்ய வேண்டித் தோழி தலைவன் நின் பொருட்டு மடலேறுவேன் என்கிறான் என்று கூறியவிடத்துத் தலைவி அதனைப் பொய்யெனக் கூறுமிடத்தும்"[137] என்பர்.

உரையாசிரியர்கள் இருவரின் உரையினை நோக்கி, க.வெள்ளைவாரணர் 'மடலேறுவேன் எனத் தலைவன் கூற்று மெய்யேயாயினும் தோழி அந்நிகழ்ச்சி நிகழ ஒட்டாமல் அதனைப் பொய்யாக்குதல் வேண்டி பனைமடலின் வாழும் பறவைக் குழாம் அருளுடையனாகிய நின்னை மடலேற வொட்டா என இங்ஙனம் நகையாடிக் கூறுதலின் பொய்தலை அடுத்த மடலின் கண் என்றார் ஆசிரியர். இவ்வாறன்றி இத்தொடர்க்குப் பொய்மையால் மடலேறுவேன் எனத் தலைவன் கூறிய வழியும்' என இளம்பூரணர் கூறும் பொருள் தோழி முதலியோரை அச்சுறுத்தித் தனது வேட்கையை நிறைவேற்றிக் கொள்ளும் கருத்துடன் தலைவன் இவ்வாறு பொய் கூறினான் எனத் தன்னிகரற்ற தலைவனைப் பொய்யனாக்குதலின் பொருந்தாது எனச் சுட்டாமல் இத்தொடர்க்குத் தொல்காப்பியர் கருத்துணர்ந்து உண்மைப் பொருள் வரைந்த நச்சினார்க்கினியர் உரைத்திறன் நல்லறிஞர்களது பாராட்டுக்குரியதாகும்"[138] என மொழிவர்.

ஈண்டு இக்கூற்றிற்கு இளம்பூரணர் எடுத்துக்காட்டுச் செய்யுளினை 'வந்த வழிக்கண்டு கொள்க' என உரைப்பர். ஆயின் நச்சினார்க்கினியர் "வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே"(139) எனும் தொகை நூல்களுள் காணப்பெறாத செய்யுளினைக் குறிப்பர். இச்செய்யுளினை இறையனார் களவியல் உரைகாரர் நக்கீரர் 9-வது சூத்திர உரையுள் "அருளாலரிதென விலக்கலும்"(140) என்பதற்கு எடுத்துக்காட்டாகக் கூறியிருப்பது நோக்குதற்குரியதாகும்.

## 4. கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்

தலைமகனது துயர் கண்டு செயலற்ற நிலையினளாகிய தோழி துன்பக் கண்ணீரைத் துடைத்து, தோழியை ஆற்றுவித்த நிலையில் தலைவிக்குக் கூற்று நிகழும். இதற்கு இளம்பூரணர் "தோழி கையினால் தலைவி கண்ணீர் துடைத்த வழியுங் குறிவழிச் செல்லாளாம்"(141) என்பர். நச்சினார்க்கினியர், தலைவியை ஆற்றுவித்துக் கையற்ற தோழி தலைவி கண்ணீரைத் துடைப்பினும் எனக் குறிப்பர். இருப்பின் இரண்டு உரையாசிரியர்களும் மேற்கோளாகக் குறிப்பிடும் செய்யுள் ஒன்றாகும் அதானின்,

'தலைவி தன் காம நோயை ஒருவாறு ஆற்றுவாள்
ஆயின் குன்ற நாடனைக் கண்ட அவள் கண்களோ
அவள் வரை நில்லாமல் தலைவன்பால் தனக்குரிய
உரிமையாலே தாமாகவே அழுகின்றது என்செய்வேன்'(குறுந்:241)

எனக் கூறுமிடத்து தலைவி தன் ஆற்றாமைக்குக் காரணம் உணர்த்தப் பெறுகிறது.

## 5. வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும்

தலைவிக்கு ஏற்பெற்ற உடல் மெலிவு கண்டு வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துவிக்க வரும் அச்சத்தின் கண்ணும் தலைவிபால் கூற்று நிகழும் என்பது 'வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும்' எனும் கூற்றின் பொருளாகும். இக்கூற்றிற்கு உரையாசிரியர் இடையேயும் அறிஞர்களிடையேயும் கருத்து வேறுபாடு இல்லை. இளம்பூரணர் இக்கூற்றிற்குக் காட்டும் செய்யுளில்

'செறிந்த பற்களையுடையாய் தாயானவள்
நாமுற்ற துயரம் நோக்கி வேலனை
வெறியாட்டயரத் தந்தாள். அவ்வேலன்
நமக்கு நாடனோடு உள்ள நட்பினை
அறிவானோ?' (ஐங்.241)

எனத் தலைவி கூறுகின்றவிடத்து, தலைவனுக்கும் தலைவிக்கும்உள்ள நட்பினை வேலன் அறிந்து பலரும் அறிய உரைப்பனேல் அது அலராய் வருந்தும் அச்சமாய்த் தலைவி கூறியது. நச்சினார்க்கினியர் காட்டும் பாடலில்

'தலைவன் தந்த துன்பம் தலைவனால் தணியும் என்பதை அறியாதாளாய் என் கைவளை நெகிழ்தலைப் பார்த்து உடல் மெலிவின் காரணத்தைக் கட்டுவிச்சியிடம் வினவ, அவள் அரிசி, தினை முதலியன கொண்டு அது முருகனாலாயது எனக் கூற, அது கேட்டு வேலனைக் கொண்டு வெறியாடின் என்ன நேருமோ? வெறியாடிய பின்னரும் என் நோய் தீராதாயின் ஊரில் இக்களவொழுக்கம் வெளிப்படாதிருத்தல் அரிதாகும் அதனினும் தலைவன் இந்நோய் பிறிதொன்றால் வந்தது எனப் பிறர் கூறக் கேட்பின் யான் உயிர் வாழ்தல் அரிதாகும்'(அகநா:98) எனக் கூறுகையில் தலைவியின் வெறியாட்டு அச்சம், வெறியெடுத்த பின்னர் நோய் பிறிதொன்றால் வந்தது என்றால் உயிர் வாழாதது ஆகியவை பெறப் பெறுகின்றன.

## 6. குறியின் ஒப்புமை மருடற் கண்ணும்

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைவனது சொல்லின் வரம்பினைக் கடத்தல் தலைவிக்கு அறமன்றாகலானும் தான் சொல்லுதற்குரிய வழி அவ்விடமாதலானும் தலைவன் தலைவி இருவரும் மீண்டும் கண்டு அளவளாவுதற்குரிய இடத்தைக் குறிப்பிடும் பொறுப்புத் தலைமகளைச் சார்ந்ததாகும். இதனைத் தொல்காப்பியர்,

'அவன் வரம்பு இறத்தல் அறம் தனக்கு இன்மையின்
களஞ்சுட்டுக் கிளவி கிழவியது ஆகும்
தான் செலற்கு உரியவழி ஆகலான' (தொல்.பொருள்.களவு: 30)

என்பர். ஈண்டுத் தலைவியின் உடன்பாடு பெற்றுத் தோழியாற் குறியிடம் சுட்டப்பட்டுத் தலைவன் தலைவியைக் கூடும் இடம் என்றது. தோழியின் உதவி பெற்றுத் தலைமகளைக் கண்டு அளவளாவும் தோழியிற் கூட்டத்தின் பகற்குறி இரவுக்குறி ஆகிய இடங்களில் இரவுக்குறி வரும் தலைவன் செய்யும் குறி புள் முதலியவற்றால் இயல்பாக நிகழ்ந்த ஒன்றைத் தலைவன் செய்த அடையாளங்கள் எனத் தலைவி மயங்கிய நிலையில் கூற்று நிகழும். இதனைத் தொல்காப்பியர், குறியின் ஒப்புமை மருடற் கண்ணும் எனக் கூறுவர். இக்கூற்றிற்கு இரு உரையாசிரியர்களும் ஒத்த கருத்தினராய் உளர்.

இளம்பூரணர் இதற்கு மேற்கோளாக, 'தலைவி தலைவனின் தேர் பூட்டிய குதிரையின் மணியோசை என்று எழுந்து குறியிடம் சென்றேன். ஆயின் அங்கு கனி விரும்பும் பறவைகளின் ஓசை கேட்டு மீண்டேன்' (ஐந்.ஐம்.50) என்பதையும்,

'மழை வேண்டிப் பாடும் வானம் பாடிப் பறவை போல் அவன் அருள் வேண்டி நிறைந்த அன்புடையேன் யானாக இருக்க, அவன், நான் பகல் நடு நாளில் இடம் மாறிய காரணத்தால் பகற்குறி வாய்க்கப் பெறாமல் அதற்கான பழியை என்பால் சார்த்தி நினக்குக் கூறும்' (கலித்:46) எனத் தோழி கூறுவதனையும் எடுத்துக் காட்டுவர்.

நச்சினார்க்கினியர் முற்கூறிய ஐந்திணை ஐம்பதில் அமைந்த செய்யுளைக் காண்பித்து மேலும்,

'தோழி, தலைவன் வந்தான் என<br>
எண்ணிக் குறியிடம் சென்று ஏமாற்றம்<br>
உற்றேன். ஆண்குரங்கு கொம்பில்<br>
பாய்ந்தமையால் கொம்பு தாங்காது முறிந்த<br>
தவறு குரங்கினதாகவும் கொம்பினிடத்திச்<br>
சார்த்திக் கூறுவது போல தலைவன் தவற்றிற்கு<br>
என் தோள்கள் பசலையுற்றன'(குறுந். 121)

எனத் தலைவி கூறுவதனை எடுத்துக்காட்டுவர்.

### 7. வரைவு தலைவரினும்

இக்கூற்றிற்கு இளம்பூரணர் தலைவனை வரைய வருகின்ற நாள் அணித்தாக வரினும் குறிவழிச் செல்லாளாம்''[143] என்பர்.

நச்சினார்க்கினியர் களவு வெளிப்பட்ட பின்னராயினும் முன்னராயினும் வரைந்து எய்துதற் செய்கை தலைவன் கண் நிகழினும் ஆண்டு முற்காலத்து நிகழ்ந்த ஆற்றாமை பற்றிக் கூறும்"[144] என உரைப்பர். க.வெள்ளைவாரணர் இளம்பூரணர் கூற்றைத் தழுவுவர். ஆயின் பாலகிருட்டிணன் தலைவி தோழியிடம் அறத்தொடு நில் என வேண்டுவதோடன்றித் தலைவனுக்குத் தன் துன்பத்தை உரைத்து அவனை வரைவுகடாவுமாறும் தோழியிடம் வேண்டுவாள்."[145] வரைகடாவுதற்கும் அறத்தொடு நிற்றலுக்கும் பொதுப்பட அமைந்தது இக்கூற்று எனக் கூறுவர்.

'வரைவு தலைவரினும், என்பதற்கு இளம்பூரணர் மேற்கோளாகக் காட்டும் பாடலில்

குவளை படர்ந்த சோலையில் காந்தளில்
வண்டு ஊது மலைநாடன் வரைவொடு
வந்தான் அதனால் அன்னையின் வருத்தம்
இப்பொழுது நீங்கியது' (ஐந். எழு: 3)

எனத் தோழி செப்பும் வழி தலைவன் வரைவொடு வந்த செய்தி உணரப்பெறுகிறது மேலும்,

'மழை பெய்தலால் அருவியானது கல்லில் பாய்ந்து
அகில் சுமந்து ததும்பியோடும் மலை நாடன்
சூளுறவு காக்கும் பண்பு முதலிய வுடையனாமையின்
இப்போது பொருள் காரணமாகப் பிரிந்தாலும்
என் தோள்கள் வாடலை மறந்தன' (ஐந். எழு: 2)

எனத் தலைவி உரைக்கு, இச்செய்யுளுள் "நாடன் நயம் உடையன்"[146] எனும் அடி வரைவு தலைவந்தமையை உணர்த்திற்று.

மேற்குறித்த செய்யுளையே நச்சினார்க்கினியரும் மேற்கோளாகக் காட்டுவர் 'தலைவியின் சுற்றத்தார் தலைவனுக்குத் தலைவியைக் கொடுக்க மறுத்தனர். தோழி செவிலித்தாயிடம் சென்று அவனைத் தான் மணம் முடிக்க வேண்டுமென்று வற்புறுத்தினாள். அவள் நற்றாயிடம் சென்று சொன்னாள். அவள் அவளுடைய தந்தைக்கும் அண்ணன்மார்க்கும் சொல்லி வற்புறுத்தினாள். அவர்கள் ஒருவாறு

இசைவு தந்தனர். திருமணம் விரைவில் முடிய வேண்டுமென்று கன்னிப் பெண்கள் தெய்வத்தை வேண்டிக் குரவை ஆடும் நிலையில்' தலைவி,

'நாணம் மிக்குவரும் காலத்துத் நம் நாணைத்
தாங்குவார் என்ன தவம் செய்தனரோ? அப்படி
நாம் நாண் தாங்கியிருந்தமையின் வேங்கை
மலர் தாது சொரியும் பாறையுள்ள முற்றத்தில்
நனவிலேயே தலைவனுடன் புணர்ச்சி நடக்குமோ?
அப்படி நடக்குமானால் அவனைக் களவிற்
புணர்தலை நாம் கடிவோம் அன்றோ' (கலித். 39)

என மொழியும் வழிக் களவு வெளிப்பட்ட பின் தலைவன் வரைந்தெய்தும் நிகழ்வு எதிர்பார்த்துப் பேசப் பெற்றது ஒப்புமை உடையதாக உளது.

## 8. களவு அறிவுறினும்

இத்தலைவி கூற்றிற்கு இளம்பூரணர் "களவினைப் பிறர் அறியினும் குறிவழிச் செல்லாளாம்"(147) என்பர். "தம் ஒழுகலாறு புறத்தார்க்குப் புலனாகத் தலைவன் ஒழுகினும்"(148) என்பர். நச்சினார்க்கினியர், வெள்ளைவாரணர் இரு உரையாசான்களையும் தழுவுகிறார். பாலகிருட்டிணன், "அலர் அறிந்தோ, தனது மேனி வேறுபாடு கண்டோ செயல் மாறுபாடு கண்டோ அன்னை களவினை அறியும் நிலையிலும்"(149) என உரைப்பர்.

இதற்கு இளம்பூரணர் காட்டும் பாடல், 'தாய் தன் மகளை நோக்கிக் கிளிகடியாமல் எவ்வாய்ச் சென்றாய் என்று வினவியதாகாவும், அதற்கு மகள் அருவி விழும் மலைநாடனை அறிதலும் அறியேன் காணுதலும் காணேன் மலர் கொய்து சுனைபாய்ந்து, ஆடலும் ஆடேன் என்று கூறியதாகவும். அதுகேட்டு அன்னை தலை இறைஞ்சியதாகவும் படைத்துக்கூறிப் பொய் புகலத் தெரியாத தலைவி என்ன ஆவாளோ என்று தோழி வருந்துவதாக அமைந்த' (நற். 147) இச்செய்யுளில் தோழி படைத்து மொழிவதை நோக்குகையில் தலைவியின் களவுக் காதல் அலராகி அன்னைக்கும் தெரியப் போகிறது என்பதை உணர்த்துகின்றாள். நச்சினார்க்கினியர் இதற்கு,

'ஏந்து எழில் மழைக்கண் கலுழ்தலின் அன்னை
எவன் செய்தனையோ நின் இலங்கு எயிறு உண்டு என
மெல்லிய இனிய கூறலின் வல்விரைந்து
உயிரினும் சிறந்த நாணும் நனி மறந்து
உரைத்தல் உயர்ந்தனனே தோழி' (நற். 17)

என்ற பாடலைக் காட்டுகிறார். இதனை நோக்குமிடத்து 'அருவியைப் பார்த்து நின்ற இடம் தான் அவள் காதலனைக் கண்டு மயங்கிய இடம். அந்த நினைவு வரவே தலைவி கண்கள் கலங்கின. அதைக் கண்ட தாய் வினவ உண்மையைச் சொல்லவிருந்த அவள் எப்படியோ சொல்லாமல் தவிர்ந்து உயர்ந்தாள்' என்பதன் வழி, பாலகிருட்டிணன் குறிப்பிட்ட அன்னை களவினை அறியும் நிலை உணர்த்தப் பெறுவது ஒப்பு நோக்கும் தன்மையுடையது.

## 9. தமர் தற்காத்த காரண மருங்கினும்

இக்கூற்றிற்கு இளம்பூரணர் "தன்னைத் தமர் காத்த காரணப் பக்கத்தினும்"(150) என்பர். அங்ஙனம் களவு அறிவுற்ற அதன்தலைச் செவிலி முதலிய சுற்றத்தார் தலைவியைக் காத்தற்கு ஏதுவாகிய காரணப் பகுதிக் கண்ணும்"(151) என நச்சர் உரைப்பர்.

வெள்ளைவாரணர், பாலகிருட்டிணன் ஆகிய இருவரும் "தலைவி இற்செறிக்கப்படுதல்"(152) எனும் பொருளில் இதற்கு விளக்கம் தருவர்.

'இளம்பூரணர் இக்கூற்றிற்குத் தரும் மேற்கோள் செய்யுளில்,
தோழி, கானலிடத்துத் தலைவனொடு மரநிழலில்
தங்கி, நண்டின் குழிந்த வளைகளைத் தோண்டி
ஊசலாடி, குரவைக் கூத்து வெறுக்கின் கடலில்
தோழியருடன் நீராடித் தழைகளையுடுத்தி இப்படித்
தங்கி வருதலைப் பற்றிப் பெண்டிர் கூறும்
அலரை அன்னை உட்கொண்டு கடற்பெருந்துறையிடத்துப்
பகலும் இரவும் இயங்கும் ஒரு தேர் உண்டு

என்று எண்ணி நம்மைக் காவற் படுத்தினாள்'(அகநா. 20) என்பதன் மூலம் தலைவியைத் தமர் காவற் செய்தது உணர்த்தப் பெறுகிறது.

நச்சினார்க்கினியர் மேற்காட்டிய செய்யுளையும் மேற்கோளாகக் காட்டி அத்துடன்,

இற்செறிக்கப்பட்ட தலைவி நம் தலைவனொடு மெய் தோய்ந்த நட்பு, பின்னர் அவனொடு விளையாடுதலையும் நீக்கியது (குறுந்.401) என்பதைக் காட்டும் நிலையில் தலைவியின் வேறுபாடு கண்டு இற்செறித்தமை தலைவி தன்னுள்ளே கூறியது என்பது பெறப் பெறுகிறது. மேலும்,

'. . . . . பானாள் தனித்து ஓர்
தேர் வந்து பெயர்ந்தது என்ப அதற்கொண்டு
ஒரும் அலைக்கும் அன்னை பிறரும்
பின்னு விடு கதுப்பின் மின் இழை மகளிர்
இளையரும் மடவரும் ஊரே
அலையாத் தாயரொடு நற்பாலோரே' (குறுந். 246:3-9)

எனக் கூறும் வழி, பிறர் கூற்றால் தாய் தலைவியை இற்செறித்த தன்மை புலப்படுத்தப் பெறுவதனொடு, உடன்போக்கு மேற்கொண்ட தலைவியைத் தேடிச் செல்லும் செவிலி, 'தலைவியைத் தான் இற்செறித்த தன்மையைப் பிணைமானிடம் கூறுவது போல அமைந்த அகநானூற்றுச் (70) செய்யுளின் வழி விளக்குவர்'. ஈண்டுத் தலைவியின் தோற்றப் பொலிவாற் செவிலி காத்த தன்மை உணரப்பெறும்.

## 10. வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்

இக்கூற்றினை, இளம்பூரணர் "தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குகின்றான். இன்ன நாள் வரைந்து கொள்வல் எனக் கூறித் தோழியற் கூட்டத்திற்கு முயலாது தணந்த வழியதனைத் தோழி ஐயப்படுங் குறிப்புத் தோன்றாமை மறைந்தொழுகிய தலைவி அவன் வருந்துணையும் ஆற்றாது வருத்தமுறினும்"(153) எனக் கூறுவர். நச்சினார்க்கினியர், "வரைவு மாட்சிமைப்படா நிற்கவும் பொருள் காரணந்தான் அதற்கு இடையீடாகத் தலைவன் நீக்கி வைத்துப் பிரிந்த காலத்துத் தலைவி வருத்த மெய்தினும்"(154) என்பர். இருப்பின்,

மேற்கோளாக இக்கூற்றிற்கு இளம்பூரணர் ஒரு செய்யுளை மட்டும் காட்டுவர். அதானின்,

'தலைவனுடை நட்பு வாய்மையாகாமல் என்
நினைவின் மட்டும் நின்று என்னைப் பெரிதும்
வருத்துவ தொன்றாயிற்று' (குறுந். 195)

எனத் தலைவி கூறுவதாக அமைப்பர். ஆயின் நச்சினார்க்கினியர் இக்கூற்றிற்குத் தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல் என்னும் தந்திரவுத்தியாகக் கொண்டு அதன்கண் வேறுபட வருவன வெல்லாங் கொள்க எனும் கொள்கையினராய்ப் பத்துச் செய்யுட்களை மேற்கோளாகக் காட்டுவர்.

அவற்றினை,

1. வரைவிடை ஆற்றாமையாகாமல் கூறல்
2. வரைவிடைக் கவன்ற தோழிக்குக் கூறல்
3. வரைவிடைப் பருவங்கண்டு கூறல்
4. வரைவிடை வன்புறை எதிரழிந்து கூறல்
5. வரைவிடை மாலைப் பொழுது கண்டு கூறல் எனப் பகுத்துக் கூறலாம்.

## 1. வரைவிடை ஆற்றாமையால் கூறல்

இதன் கண் தலைவி,

'தலைவன் சொன்ன சொல்லைக் காவாமல்
பிரிந்தான்; அதனால் தலைவி உயிர் நீப்பதாகத்
தீ மொழியை மொழியினும் தலைவன்
ஒழுக்கத்தை ஆண் குரங்கும் அறியும் அது
தன் கண்ணாற் கண்டதைப் பொய்யாது'(நற். 236)

எனவும்,

'தலைவன் தலைவியோடு கூடிய காலத்தில்
கண்டார் யாருமில்லை ஆயின் நீர் வழியோடும்
ஆரல் மீனை இரைக்காகப் பார்த்துக் கொண்டிருக்கும்
குருகு மட்டுமே இருந்தது'(குறுந். 25)

எனவும் காட்டித் தலைவன் துறந்தான் போலவும் மறந்தான் போலவும் கருதித் தான் தீது மொழியினும் எனவும் யானெவன் செய்கோ எனவுந்

தோழி வினாவுங் காலத்து அவன் தவறினை வரைவிடை வைத்தலின் ஆற்றாமைக்கு அறிவித்தாள். அடுத்த நிலையில் தோழி வினாவிய வழி,

'தலைவி தலைவனோடு கொண்ட உறவினைத்

தினைப்புறம் காவல் உற்றபோது ஏற்பட்டது'(நற். 125)

எனக்கூறும் முகத்தான் அமைப்பர்.

## 2. வரைவிடைக் கவன்ற தோழியிடம் கூறல்

இதன்கண் நச்சினார்க்கினியர் இருபாடல்களைக் காட்டுவர். அதானின்,

'தலைவனின் பிரிவிற்கு அஞ்சிய தலைவி ஊர்

அலரின் காரணமாகத் தலைவன் வரவில்லையோ?

பலரும் தூங்கும் நள்ளிரவிலும்கூட என்

நெஞ்சில் வருவதல்லது நேரில் வந்திலன்'(குறுந். 302)

எனக் கூறுவதையும்

'என் கண்கள் தம்மகத்தே காதலர் உளராகவும்

அதனை அறியாவாய் அவர் பிரிந்து போயினர்

என்று கருதி உறங்காமல் வருந்தி நின்றது

இத்தகைய மடமையைச் செய்யும் இயல்பினை

உடையது காமநோய்'(குறுந். 5)

என்பதனையும் காட்டுவர்.

## 3. வரைவிடைப் பருவங்கண்டு ஆற்றாது கூறல்

இதன்கண் இரண்டு பாடல்களைக் காட்டுவர். ஒன்று,

"முன் நாளில் குன்றம் குளிர மழை பெய்யத் தொடங்கியது. பொய்யாத மேகம்; அதனால் என் கண்கள் மிக்க துளிகளைக் கொண்டு முலை மார்பை நனைக்கும்."(156) என்பது. மற்றொன்று,

'அவரை மலர்கள் முல்லையொடு கலக்கும்படி

வாடைக் காற்று வீசும். அதற்கு மேலும் யான்

கண்டு ஆற்றியிருத்தற்கமைந்த தலைவன்

மலையும் மாலையில் கடலில் மூழ்கும் கலம் போல்

இருளில் மறையும் அதனால் பிரிவை ஆற்றதில்லேன்(குறுந். 240)

எனப் பருவங்கண்டு ஆற்றாது தலைவி தோழிக்குக் கூறுவதாகும்.

### 4. வரைவிடை வன்புறை எதிரழிந்தது

இதன் கண் ஒரு பாடலைக் காட்டுவர். அதானின்,

"வீட்டில் குத்தும் உலக்கை ஓசையால்
புனத்துக் கிளியைக் கடியும் படியான
கான நாடன் நம்மைப் பிரியவே என் மாமையழகு
தானும் என்னை விட்டுப் பிரிந்தது; நம்முடன்
உடனுறை வாழ்க்கையை மறந்து விட்டதோ
அக்கவின்"(157) எனத் தலைவி வன்புறை எதிரழிந்து கூறுவதாக அமைந்தது.

### 4. வரைவிடை மாலைப் பொழுது கண்டு வருந்துதல்

இதற்கு ஒரு செய்யுளைக் காட்டுவர்.

"தீத்தெளிப்பது போல் உள்ள காற்றுடன்
அசைந்து சிவந்து நிறம் கொண்டு வரும்
சிறிய புல்லிய மாலைக் காலமே தினமும்
என்னை வருத்த வருகிறாய். ஆனால் அவர் குன்ற
நாட்டிற் சென்று அவரிடம் ஒன்றும் சொல்லவில்லையே"(158)
என மாலைப் பொழுதைக் கண்டு வருந்திக் கூறுவதைக் காட்டுவர்.

### 11. வரையா நாளிடை வந்தோன் முட்டினும்

தலைவன் வரைவு நீட்டித்து வரையா நாளிடை, செவிலி முதலானோரை எதிர்ப்படுமிடத்துத் தலைவிக்குக் கூற்று நிகழும். இதனை இளம்பூரணர், "வரையாத நாளின்கண் மறைந்தொழுகா நின்ற தலைவன் செவிலி முதலாயினாரை முட்டின வழியும்"(159) என்பர். நச்சினார்க்கினியர், "வரையாதொழுகும் தலைவன் ஒரு ஞான்று தோழியை யானும் ஆயத்தையானுஞ் செவிலியையானுங் கதுமென எதிர்ப்பினும்"(160) எனக் கூறுவர்.

இதற்கு மேற்கோளாக இளம்பூரணர், கைந்நிலையில் உள்ள பாடலைக் காட்டுவர். அப்பாடலானது தோழி தலைவியிடம்,

'தலைவி நம் தலைவனை இன்னான் என
அறியாது நம் தாயானவள் புறக்கடை

வாயில் வந்து நாளும் மனைப் புகுந்து செல்லும்
அறிவிலி யாரோ யான் அறியேன் என்று
கூறிக் கதவில் உள்ள சிறு துளையையும் அடைத்துப்
பூட்டி விட்டாள்'(கைந். 59)

எனக் கூறுவதாக அமைந்த பாடலைக் குறிப்பர். மேலும்,

'தலைவன் துணங்கைக் கூத்திற்குப் போகும் போது தோழியை எதிர்ப்பட்டும் படாதவனாய்ச் சென்றதைக்'(நற்.50)கூறும் நற்றிணைப் பாடலையும் குறிப்பர்.

நச்சினார்க்கினியர், தலைவன் தலைவியை முட்டிய வழி ஆயத்தாரை முட்டிய வழி, செவிலியை முட்டிய வழி ஆகிய மூன்று நிலைகளைக் குறிப்பிடுவர்.

## தலைவியை முட்டிய வழி

தலைவன் தலைவியைக் களவில் முட்டியவிடத்துத் தலைவி 'தோழி நேற்றையிரவில் பொய்வல்ல தலைவன் நனவு போலக் கனவில் மெய்யுறப் பொருந்தி மருட்ட விழித்துப் படுக்கையைத் தடவினேன்' (குறுந். 130) எனக் கூறுவதனை எடுத்து மொழிபர்.

## ஆயத்தாரை முட்டிய வழி

'தலைவன் ஒருவன் அவனால் எய்யப்பட்ட அம்பு பாய்ந்த யானை இவ்வழி வந்ததோ என்று வினவி நின்றான். அவனைக் கண்டோர் பலர்; அவருள் யான் மட்டும் படுக்கையில் கிடந்து நீர்வார் கண்ணோடு நெகிழும் தன்மையுடையனாய் உளேன்'(அகநா. 82) எனக் கூறுவது, தலைவன் ஆயத்தாரை முட்டிய வழிக் கூறியதாகும்.

## செவிலியை முட்டிய வழி

நச்சினார்க்கினியர் இக்கூற்றிற்கு, இளம்பூரணர் காண்பித்த கைந்நிலைப் பாடலைக் காட்டி மேலும் ஒரு பாடலைக் காட்டுவர். அதில், 'ஆண் பன்றியின் வீரத்தை மதித்துக் கானவன் அம்பை எய்யாமல் மீண்டது போல் அன்னையும் நம் தலைவனின் பெருந்தகைமையை நினைத்து அவனைக் கடிந்து கொள்ளாமல் போய் விட்டாள்' (அகநா. 248) என்பதைக் காட்டுவர்.

## 12. உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்

இக்கூற்று இரண்டு நிலையில் அமையப் பெறுகிறது. ஒன்று 'களவொழுக்கத்தினை உயிர்த் தோழிக்குச் சொல்லுக எனத் தலைவன் தலைவிக்குச் சொல்லிய நிலையிலும்,' மற்றொன்று 'தலைவியின் வருத்தத்தைத் தலைவனுக்கு உரையெனத் தோழிக்கு உரைத்த நிலையிலும்,' தலைவிபாற் இதனை இளம்பூரணர் "இவ்வொழுக்கத்தினை நின் தோழிக்கு உரையெனத் தலைவன் கூறிய வழி என்றும் தலைவற்கு உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும் என்றுமாம்"[161] என்பர்.

நச்சினார்க்கினியர் "நொதுமலர் வரைவிற்கு மணமுரசு இயம்பிய வழியானும் தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக் கூறி அதனை நமரறியக் கூறல் வேண்டுமென்று தலைவற்கு நம் வருத்தம் அறியக் கூறல் வேண்டுமென்றுங் கூறுதற் கண்ணும்"[162] எனக் கூறுவர்.

மேற்கோள் இலக்கியமாக இக்கூற்றிற்கு இளம்பூரணர் 'இரண்டு' செய்யுள்களை எடுத்தோதுவர். தலைவனிடம் அறத்தொடு நிற்க என்பதற்கு,

'தலைவன் களவுப் புணர்ச்சியில் இடையூறாக
இல்லாமல் இன்பமாகப் புணர்ச்சியின் மகிழ்ந்து
நினது நலத்தைப் பாராட்டினான். அந்நாட்கள்
நன்கே இருந்தன. இனி எப்படி யாமோ?'(ஐந். ஐம். 11)

எனத் தலைவி கூற்றாகக் கொண்டு இளம்பூரணர் கூறுவர். ஆயின், இது தோழி கூற்றெனத் தொகை நூலில் குறிக்கப்பட்டுள்ளது.

தலைவி அறத்தொடு நிற்றலைத் 'தோழி யாது காரணம் நம் தலைமகனார் மாட்டு விரைந்து வரைதலை மேற்கொள்ளாதது. செவிலி நம் மாட்டு நடந்து கொள்ளும் மனப் போக்கும் கொடுமையினைக் கொண்டுளது. ஆதலின் தலைவனை விரைவில் வரைதல் செய்ய வேண்டுக'(ஐந். எழு. 56) எனத் தோழியிடம் தலைவி அறத்தொடு நிற்றலை எடுத்துக் காட்டுவர். நச்சினார்க்கினியர் இப்பாடலையும் காட்டி மேலும் மூன்று பாடல்களை எடுத்தோதுவர். அவர் கூற்றின் படி,

தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்கும் நிலை மட்டும் உணர்த்தப் பெறுகிறது. எவ்வாறெனின்,

"தலைவி தலைவன் கைப்பட்டுக் கலங்கிப் புணர்ச்சி
நிகழ்ந்தமை கூறி அருங்கடி நீவாமைக் கூறின்
நன்றெனத் தமர்க்குக் கூறுமாறு"[163] தோழிக்குத்

தலைவி கூறுவதனையும் தொகை நூல்களில் காணப் பெறாத இரண்டு பாடல்களின் வழி, "துணையைப் பிரியின் அன்றில் வாழாது போலத் தானும் வாழேன்"[164] என்றும்,

"தலைவன் சென்ற தேரின் வழியை அலைகள்
தூர்க்க வில்லை ஆயின் தம் துன்பத்தை
மெதுவாகக் கூறினும் அவர் கேட்பர்"[165] என்றும் கூறும் வழித்

தலைவி தோழியிடம் அறத்தோடு நின்ற நிலையை உணர்த்துவர்.

**13. தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்**
**ஆவகை பிறவும் தோன்றுமன் பொருளே**

தலைவி தனது பிரிவுத் துயரத்தைப் பொறுக்கும் மனவன்மையின்றித் தலைவன் உள்ளவிடத்தே செல்வோம் என்னும் நன் மொழியினைத் தலைவி கூறுதற் கண்ணும், அவை போன்ற கூற்று வகை பிறவற்றின் கண்ணும், தலைவியிடத்துக் காதல் மிகுதியாகிய மிக்க பொருள் தோன்றும் கூற்றுகள் அமையும். இதனுள் உரையாசிரியர்கள் இருவரும் மாறுபாடு கொள்ளவில்லை.

மேற்கோளாக, இளம்பூரணர் காட்டும் செய்யுளுள் 'கடம்பின்கண் தங்கும் கடவுள் சூள் தப்பிய கொடியோரை ஒறுக்கும் என்று கூறுவர்; என் தலைவரோ சூளில் தப்பினார் அல்லர்; அவர் மிகவும் நல்லர்; என் நுதல் பயந்தமைக்கும் தோள் மெலிந்தமைக்கும் என் மனநிலையேயன்றி அவர் காரணராகார்'(குறுந். 87)

எனத் தலைவியின் நன்மொழியினைக் காட்டுவர். நச்சினார்க்கினியர் ஐந்து செய்யுளினை மேற்கோளாகக் காட்டுவர். அவற்றுள்,

'தலைவன் தலைவியின் நலனைப் புனைந்துரைக்க
இந்நாள் இனியதாகப் போயினது எப்படி எனின்
அப் புணர்ச்சிக்கு இடையூறாக வந்தவர் இல்லாமல்'(ஐந்.ஐம்.11)

எனக் கூறுவதையும்,

'தலைவனிடம் ஊரலர் பற்றித் தாய் அறியின்
இங்கு வாழும் வாழ்க்கை நமக்கு இல்லாமற்
போகும் என்று எடுத்துரைத்தால் அவர் நம்மை
அழைத்துக் கொண்டு சென்றாலும் செல்வார்'

(நற். 309)

என மொழிவதனையும்,

'தோழி அசோகின் தளிர் போன்ற பசலையை என்
வலிமையற்ற உடலில் காண்கிறாய், ஆதலின் நீ
தலைவனுக்கு என் நிலை பற்றி உரைத்தல்
வேண்டும் அல்லது என் துயரைச் சிறிதும் அறியாத
அன்னைக்கு இந்நோய் தணியும் வழியிது
என எடுத்துக் கூறல் வேண்டும்'(நற். 309)

எனத் தலைவி அறத்தொடு நிற்குமாறு தோழிக்குக் கூறுவதனையும்,

'வாழையின் கொழுத்த மடலில் உள்ள அகன்ற
இலையிலே நீர்த்துளி கலந்து தங்கியிருக்கும்
பெரிய தலைவனின் கேண்மை நமக்குத்
துன்பமாய் இருக்கவும் அதனை அறிபவள்
இல்லையே என்று நீ கூறுவாய் ஆனால்
அவருடைய நட்பை நான் மிகவும்
நன்றாகத் தெளிந்திருக்கின்றேன்'(நற். 309) என்று கூறுதலையும்,

'தலைவன் என் தோள் மணந்த காலத்தில் யான் நின்னைப் பிரியேன் என்று சூளுறவு செய்தான். அதற்கிணங்க அவன் வந்திலன். எனின் அது அவர் செய்த தவறாகும். நான் ஒருவாறு ஆற்றியிருக்கின்றேன். அவர் செய்த தவறு நினக்கு நோயாகாதன்றே ஆதலின் நீ வருந்தாதே'(குறுந். 36) எனக் கூறுவதனையும் எடுத்துக்காட்டுவர்.

**ஈ. தலைவி கலக்கமின்றித் தெளிதல்**

தலைவி கலக்கமின்றித் தெளிவாகப் பின்வரும் கூற்று அமையும்

**தன்குறி தள்ளிய தெருளாக் காலை**
**வந்தனன் பெயர்ந்த வறுங்களம்**

**நோக்கித் தன் பிழைப்பாகத் தழீஇத்**
**தேறலும்**

"தலைவி தன் குறிதப்பித் தலைவன் எதிர்ப்படுதல் இல்லாக் காலத்து, வந்த தலைவன் திரும்பிச் சென்று வருங்களத்தினை நோக்கித் தான் குறிதப்பியதனால் ஏற்பட்ட குறையென்று உட்கொண்டு அவ்விடத்திற் கலக்கமின்றித் தெளிவு பெறுவாள்"[166] என்பது இரு உரையாசிரியர்களும் இரு அறிஞர்களும் கூறும் கருத்தாகும்.

இக்கூற்றிற்கு இளம்பூரணர்,

'வாள் போலும் கூரிய கற்கள் நிறைந்து
நடப்பதற்கு அரிய நெறியும், கடக்க நினைப்பவர்
அஞ்சத்தக்க கற்கள் அடர்ந்த சிறிய நெறியும்
ஆகிய வழி கடந்து அருள் உள்ளத்துடன் வந்த
தலைவன் கொடியவன் அல்லன். குறியிடம் தந்த நீயும்
தவறுடையையல்ல, உனக்குந்
துன்பம் விளைவித்த யானே தவறுடையேன்'(கலி. 72)

எனத் தலைவி மொழிவது இக்கூற்றிற்கு ஒப்புமையுடையது. நச்சினார்க்கினியர், 'தோழி! வான்தோய் வெற்பன் தினைப்புனத்து வருதல் மெய்மை. வந்தானாயின், ஊஞ்சல் இல்லாத வறிய இடத்தையும் நீர் தெளிந்து நிலம் புதியதாக மலர்ந்த சுனையையும் கதிர்கள் கொய்யப்பட்ட தாள்கள் உள்ள புனத்தையும் பார்த்து நீள நினைந்து துன்புற்றவனாய்த் திரும்பிப் போகாமல் வருந்துவன் அல்லவா? தினைப்புனத்திலிருந்து கூப்பிடும் தூரத்தது எம் ஊர் என்பதை யான் அறிவுறுத்த மறந்து விட்டேன். அதனால் என் அழகு கெடுக' (அகநா. 38) எனத் தலைவி கூறுவதனை நோக்குமிடத்து, குறியிடம் வரமுடியாமையின், தலைவன் தன்னைக் காணாது சென்றபின், விடியலில் வறிய களத்தைக் கண்டு முன் கூட்டிய குறியிடம் வரமுடியாதது என்பதைத் தலைவனுக்குக் கூறாதது என் தவறு எனத் தலைவி கூறுவது ஒப்புமையுடையது.

**உ. தன்வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தமையும்**

இத்தொடர் நிலைக்கு இளம்பூரணர் "அயலாகிய நிலை"[167] என்பர் நச்சினாக்கினியர், "கற்பின்கண் பரத்தை காரணமாகத்

தலைமகள் பால் தோன்றும் புலவி உணர்த்தலாமன்றி நீங்காது. களவின்கண் தோன்றும் அயன்மை பற்றிய இப்புலவி தலைவன் கண் பரத்தைமையின்றியும் தலைவி தனது காதல் மிகுதியால் அங்ஙனம் ஏறிட்டுக் கொள்ளும் பெண் இயல்பால் சிறிதுபோது வெளிப்பட்டுக் கடிதின் மாறும் இயல்பினை உடையது எனக் கூறி இதனைப் புலவிப் போலி"[168] என்பர்.

களவு, கற்பு என்ற இருவகைக் கைகோளில், களவில் பரத்தமைக்கு இடமில்லை. ஆயின் பரத்தைப் பற்றிய அயன்மை குறித்த ஐய்யப் பாடானது,

"ஒரு தலைவன் ஒரு தலைமகளை மணப்பதற்கு
முன் தலைவனுக்குப் பரத்தையர் பால் தொடர்புண்டு,
அப்பரத்தை யாரெனின் அவனுக்கென்று அவன்
பெற்றோர்களால் விடுத்து வளர்க்கப்பட்டவள்.
குரவர் பணியைக் கொள்ளுதல் கடன் என்ற
நன் நோக்கத்தால் தலைவன் அப்புற மகளிரை
நயப்பான் காதலாடுவான்"[169]

என இறையனார் அகப்பொருள் உணர்த்தும். இவ்வகையில் களவில் தலைவனுக்குப் பரத்தைத் தொடர்பு உண்டு எனத் தலைவி தெளிந்தால் களவின் இடையூறாகப் பரத்தையும் அமையும். அப்படியெனில் களவு எவ்வாறு தொடர்ந்து நடைபெறும்? கற்பு மலரும் வாய்ப்பு இல்லாமல் போய்விடும். ஆதலின் "இறையனார் அகப் பொருள் உணர்த்துவது தமிழ் மரபொடு ஒவ்வாது"[170] என முனைவர்.வ.சுப.மாணிக்கனார் காட்டுவது நினைக்கத்தக்கது.

ஆக, களவில் தலைவியின் பரத்தை பற்றிய புலவிப் போலி கற்பில் தொல்காப்பியர் குறிப்பிடும் பரத்தையரொடு இயைந்து காண்பதற்கு இல்லை. அதனால் தான் தொல்காப்பியர்,

'கிழவோள் பிறள்குணம் இவையெனக் கூறி
கிழவோன் குறிப்பினை உணர்தற்கும் உரியள்'

(தொல். பொருள். பொருளி: 39)

எனும் நூற்பா செய்தார். ஈண்டுக் களவில் தலைவியின் பரத்தை பற்றிய புலவிப் போலிக்கும் கற்பில் பரத்தை குறித்த ஊடலுக்கும் வேறுபாடு உணர்த்தவே 'கிழவோள் பிறள்குணம்' எனும் நூற்பாவைக் கையாண்டுளர்.

இத்தகைய 'புலவிப் போலிக்' கூற்றுகளாக,

1) வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும்
2) பொழுதும் ஆறும் புரைவ தன்மையின் அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்
3) காமஞ் சிறப்பினும்
4) அவனளி சிறப்பினும்
5) ஏமஞ் சான்ற உவகைக் கண்ணும்

என்பன அமைந்துள்ளன. ஆயின் நச்சினார்க்கினியர் "மறைந்தவற் காண்டல் தொடங்கி முப்பத்து ஆறு நிலைகளிலும் இப்புலவிப் போலி"[171] அமையும் என்பர்.

## 1. வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும்

தலைவியை ஆற்றுதல் வேண்டித் தோழி தலைவனை இயற்பழித்த காலை, அவன் இயல்பு தோன்றக் கூறுமிடத்துத் தலைவிக்குக் கூற்று நிகழும். இளம்பூரணர் இதற்கு, "தலைவனை இயற்பழித்த வழி அதன் குற்றமில்லானாக நிலை நிறுத்தப்பட்ட இயற்பட மொழிந்த பொருண்மைக் கண்ணும் தன்வயின் உரிமை தோன்றவும் அவன் வயிற் பரத்தமை தோன்றவும் கூறும் தலைவி என்றவாறு"[172] என்பர். "வழுப்படுதலின்றி நின்ற இயற்படு மொழிதற் பொருண்மைக் கண்ணும்"[173] எனக் கூறி மேலும் வழுவின்றி நிலைஇய என்றதனால் தோழி இயற்பழித்துழியே இயற்பட மொழிவதென்க. தலைவன் வழுவைத் தோழி கூறியதற்குப் பொறாது தான் இயற்பட மொழிந்தல்லது தன் மனத்து அவன் பரத்தமை"[174] கருதுதல் உடைமையிற் பொருள் வேறு குறித்தாளாம் எனக் குறிப்பர்.

இக்கூற்றிற்கு இளம்பூரணர் 'அடும்பங் கொடியானது கொடி மறைந்து புதையும்படி மலர்களை விரிக்கும் தண்ணந்துறைவனானவன் கொடி வகையினும் ஆகுக. அவனே என் உயிர்க்குக் காவலன்

ஆவான்'(ஐங்.6) என்பதை எடுத்துக்காட்டி, இது அவன் வயிற் பரத்தமை தோன்ற எடுத்துக்காட்டியது என்பர்.

நச்சினார்க்கினியர் மேற்குறித்த இளம்பூரணர் செய்யுளினைக் காட்டி மேலும்,

"தோழி தொடி தன் நிலை சாய்ந்து நெகிழத்
தோள்கள் அவர் கொடுமை கூறினாலும்
வரை நாடற்குக் கொடுமையில்லை. அவர் என்
நெஞ்சை விட்டுப் பிரிந்ததும் இல்லை. நம்மை
நோக்கும் நோக்கத்தைத் தனக்குள்ள
குறையாகக் கூறும்படித் தவிர்ந்ததும் இல்லை
அதனால் அவர் நட்பு நிலத்தினும் பெரிதே"[175]

என்பதைக் காட்டுவர். ஈண்டு அகன்று உயர்ந்து தாழ்ந்தவற்றும் பெரிதாகிய நட்புடையவன் எனக் கூறியது, ஒரு காலைக்கு ஒரு காற் பெருகுமென்றுங் கூறினாளாயினும் நமது நட்புப் போல் ஒரு காலே பெருத்ததில்லையென இரண்டுங் கூறினாள்"[176] என்பர்.

## 2. பொழுதும் ஆறும் புரைவது அன்மையின் அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்

இத்தலைவி கூற்றிற்கு, தலைவன் வருங்காலமும் இடனும் குற்ற முளவாதலான் ஆண்டு அழிவு வந்த சிந்தைக் கண்ணும்"[177] என இளம்பூரணர் கூறுவர்.

நச்சினார்க்கினியர் தலைவியும் தோழியுந் தலைவன் இரவுக் குறி வருங்காற் பொழுதாயினும் நெறியாயினும் இடையூறாகிப் பொருந்துதல் இன்மையின் அழிவுதலைத் தலைசிறப்ப வந்த ஆராய்ச்சிக் கண்ணும்"[178] என்பர்.

வெள்ளைவாரணர், இளம்பூரணர், கருத்தைத் தழுவுவர்; பாலகிருட்டிணன், "தலைவி தலைவன் பொழுதும் ஆறும் கொடுமை உடையனவாய் விளங்குவதையும் அவை அறிந்து துன்புறுவதையும் சிந்தை கலங்குமாறு கூறும் நிலையிலும்"[179] என இரு உரையாசிரியர்களைத் தழுவி விளக்குவர்.

இதற்கு மேற்கோள் கூறும் இளம்பூரணர், 'தலைவனே! நீ இரவுக் குறிவந்து கூடிப் பிரிந்தவுடன் தலைவியின் கண்கள் வேங்கைப் பிடியினின்றும் தப்பியோடிய யானையானது தன் நடையொலி கேட்டு அவ்வேங்கை வருமோ என அஞ்சி மெல்ல நடக்கும்படியான வழியில் நீ செல்லல் நேருமோ என அஞ்சியதால் துயிலாவாயின' என உரைப்பதன் வழி, தலைவன் வரும் காலமும் இடமும் ஒத்ததல்லாமை உணர்த்தப் பெறுகிறது. மேலும்,

'தோழி! தலைவனிடம், என் அன்னையானவள்
எங்களை நோக்கித் தினைப் புனத்துக் கிளிகளைக்
கடியச் செல்க என்றாள் எனவும், இனி ஈண்டு
இரவில் வராது ஆண்டுப் பகலில் வருக' (குறுந். 141)

எனவும் வரும் தலைவி கூற்றுப் பாடலில் இரவுக்குறி வந்தொழுகும் தலைவனுக்கு வரும் ஏதம் அஞ்சிப் பகற்குறி நேர்ந்தது அறியப் பெறுகிறது. இதனையே நச்சினார்க்கினியரும் காட்டி மற்றும்,

'இறும்பு பட்டு இருளிய இட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கான நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப் புறத் தன்ன கண்மிசைச் சிறுநெறி'(அகநா. 28: 8-11)

என்பது தலைவி கூற்றுப் பாடல். ஈண்டு, சிறுகாடிட்டு இருண்ட குறுகலான கடத்தற்கரிய பக்கமலைகளைக் கொண்டதும், யானை முதுகிற் கிடந்த கயிற்றுத் தழும்பு போன்ற கன்மிசையேயுள்ள சிறிதான வழி எனக் கூறியிருப்பதும் நோக்குமிடத்துத் தலைவன் இரவுக் குறி வருங்கால் பொழுதாயினும் நெறியாயினும் இடையூறாகியிருத்தல் காட்டப் பெற்றது. மேலும் தோழி, 'நின்பால் வேண்டும் குறையொன்றுடையேன் ஒரு நிலையில் நில்லாத என் உயிர்க்குக் காவல் செய்ய வேண்டி நீ நாடனிடம் அரவு வழங்கும் வெற்பில் இரவில் எம்பொருட்டு வாராதே என்பதை உரைப்பாயாக'(ஐந். எழு.14)என்பதும் பொருந்தத்தக்கது.

### 3. காமஞ் சிறப்பினும்

தலைவனைப் பிரிந்தமையால் காமம் மிகும் போது தலைவிக்குக் கூற்று நிகழும். இதனை இளம்பூரணர் "தலைமகன் மாட்டு வேட்கை

மிகினும் தன் வயின் உரிமையும் அவள் வயிற் பரத்தமையும் உரைக்குந் தலைவி என்றவாறு"[180] என மொழிவர். ஆயின் நச்சினார்க்கினியர் "தலைவி காமஞ் சிறந்து தோன்றினும்"[181] எனச் சுருங்கக் கூறுவர்.

இக்கூற்றிற்கு இளம்பூரணர் மூன்று செய்யுளினை இலக்கியச் சான்றாகக் குறிப்பர். அதானின்,

'புன்னை அணிமலர் துறை தோறும்
உதிர்ந்து கோலஞ் செய்தாற் போலத் தலைவன்
குறியிடந் தோறும் நம்மைத் தலைக் கூடித் தண்ணளி
புரிந்தனன். அந்நன்றி மறக்கற் பாலதன்று'(ஐந்.ஐம்.117) என்றும்
'நள் என்ற ஒலியுடையதாயிற்று நடு இரவு
ஊர் மக்களும் பேச்சடங்கி இனிதாகத் துயின்றனர்
வெறுப்பின்றி உலகமும் துஞ்சின. துயிலாதவள்
நான் ஒருத்தியே'(குறுந்.6) எனவும்,

'வளைந்த காலுடைய நண்டே யாம் நின்னை ஒரு குறை வேண்டி இரப்போம் ஒலியடங்காத சேர்ப்பனது நெடுந் தேர் கடந்த வழிச்சுவட்டை எம் கண்ணாரக் காணும் பொருட்டு நீ நடந்து நடந்து அழித்து விடாதே'(ஐந்.ஐம்.42) என்றும் கூறுவது அவன் வயிற் பரத்தமை தோன்றக் கூறியது என்பர்.

இதில், தலைவி துயிலாது பிரிவாற்றாமை குறித்த ஞான்று தன் வயின் உரிமைக்குக் கூறியது மற்றும் இச்செய்யுளினை நச்சினார்க்கினியர் "வருந்தொழிற்கு அருமை வாயில் கூறின்"[182] என்பதற்கு எடுத்துக்காட்டுவது நோக்கத்தக்கது.

நச்சினார்க்கினியர் இக்கூற்றிற்கு நான்கு செய்யுளினை எடுத்து இயம்புவர். அதில் ஒன்று இளம்பூரணர் காட்டிய தலைவி நண்டிடம் கூறியதாகும்(ஐந்.ஐம்.42). பிறவானது,

'தலைவன் தன் உள்ளத்தில் என்னை நினைப்பதுண்டா? பனை மரத்தின் மடலில் உள்ள கூட்டில் தன் பெடையோடு சேர்ந்திருக்கும் அன்றிலின் வருத்தம் தரும் குரலைக் கேட்கும் தோறும் தலைவி உறங்காத கண்ணையுடையவளாய்த் துயரினால் உடல் மெலிந்தாளாய்

நம் காரணமாக வருந்துவாளே என்று எண்ணுதலும் உண்டாகுமே'(நற்:303) என்பதையும்,

'ஞாயிறு மறையும் பொழுதில் பறவைகள்
தம் பார்ப்புகளுக்கு வாயிலூட்டற் பொருட்டு
இரை தேர்ந்து தம் வாயிற் கொண்டனவாய்
விரைந்து தம் சேக்கை நோக்கிப் போகின்றன.
ஆயின் நம் காதலர் ஒன்றுறக் கலந்து
இல்லறம் செய்தற்குக் கருத்திலர்'(குறுந். 92)

என்பதையும்,

"புன்னைக் கிளையில் இருந்த மடநாரைக்கு நான் உரைத்தேன்; அது யாதெனின் எனக்கு நீ செய்யும் கடமையாக நினைத்துத் தலைவன் தேர்வரப் பார்த்து அவனிடம் நீ இப்படி இரவில் அரிய வழியில் வருதல் தகாது என்று நிறுத்தி விடுக"[183] எனக் கூறுவதையும் காட்டுவர். பிற்குறித்த இச்செய்யுள் தொகை நூல்களுள் காணப்பெறவில்லை.

## 4. அவனளி சிறப்பினும்

இத்தலைவி கூற்றிற்கு இளம்பூரணர், "தலைவன் தலையளி மிக்கவழியும் தன்வயின் உரிமையும் அவள் வயின் பரத்தமையும் தோன்றக் கூறலும் என்றவாறு"[184] எனக் கூறுவர். "தலைவிக்குக் காமமிக்க கழிபடர் சிறந்தாற் போல்வது தலைவன்கட் சிறந்துழி. அது காரணத்தால் அவன் அளி சிறந்து தோன்றினும் இவ்வாறு அரிதின் வருகின்றான் வரைகின்றாலெனன் அவ்விரண்டுந் தோன்றும்"[185] என நச்சினார்க்கினியர் மொழிவர்.

இளம்பூரணர் இக்கூற்றிற்குக் காட்டும் மேற்கோள்கள் இரண்டு;

'மலைநாடனுடைய மார்பினை யான் எண்ணுங்கால்
என் உள்ளத்தில் நோய் பெருகி நின்றது;
அம்மார்பினைப் புல்லு மிடத்து அந்நோய்
இல்லையாகின்றது. இச்செயல் வியப்பாக இருக்கிறது'

என்பதையும்,

'ஊர் மன்றத்தில் உள்ள பலாவின் சுளைகள்
பொருந்திய இனிய பழத்தை உண்டு வந்த
மந்தியானது தன் முலையை வருடவே
தன் கன்று வருடுவதாக எண்ணிக் காட்டுப்
பசுவானது பால் சுரக்கும்படியான மலை
நாடனை யாம் பிரிவதும் இல்லை'(ஐந்.எழு:4)

என்பதையும் காட்டுவர். இதில் முற்குறித்தது அவன்வயிற் பரத்தமையும் பிற்குறித்தது தன் வயின் உரிமையும் ஆகும்.

நச்சினார்க்கினியர் மேற்குறித்த குறுந்தொகைப் பாடலைக் காட்டி மேலும்,

'தலைவர் வரும் நெறிகள் அரியவை; ஆறு முதலைகளை உடையவை. இத்தகைய நெறிகளில் போதற்கு அஞ்சுவோம் என்னாது வருவர். ஆண்புலி, கருவுற்ற தன்பெண்புலி உண்ண ஆண்பன்றியைக் கொன்று இழுத்துச் செல்லும் வழியை எண்ணாமல் வரும் அவர் தவறுடையவர் அல்லர். அவரை வரும்படியாகச் சொன்ன நீயும்'(அகநா:72)தவறுடையவை அல்லை; யான் தவறுடையேன் எனத் தலைவி தோழிக்கு உரைப்பதைக் காட்டி "வந்தோன்"[186] என்பது அவனளிசிறத்தல். "தவறுடையேன்"[187] என்பது தன் வயின் உரிமை. "கொடியனும் அல்ல"[188] என்பது அவன்வயிற் பரத்தமை என்பர்.

## 5. ஏமஞ்சான்ற உவகைக் கண்ணும்

தலைவி தலைவனொடு எய்தும் இன்பத்திற்குப் பாதுகாவல் அமைந்த உவகையினைத் தலைவி எய்திய விடத்தும் கூற்று நிகழும். இதனை "ஏமம் பொருந்திய மகிழ்ச்சி வந்துழித் தன் வயின் உரிமையும் அவன் வயின் பரத்தமையும் தோன்றக் கூறும் என்றவாறு அஃதாவது இவன் வரைந்தல்லது நீங்கான் என்னும் உவகை"[189] எனக் குறிப்பர் இளம்பூரணர்.

நச்சினார்க்கினியர் "நால்வகைப் புணர்ச்சியால் நிகழும் களவின்கண் எஞ்ஞான்றும் இடையீடுபடாமல் தலைவன் வந்து

கூடுதல், இன்பத்திற்குப் பாதுகாவல் அமைந்த உவகையினைத் தலைவி எய்தியக் கண்ணும்"[190] என உரைப்பர்.

இத்தலைவி கூற்றிற் இளம்பூரணர் கலித்தொகை திணைமொழி ஐம்பது ஆகிய நூல்களிலிருந்து செய்யுட்களை எடுத்துக்காட்டியுள்ளார். அவை கலி.131, தி.மொ.ஐம்.3 அவை முறையே முன்னம் ஒரு முறை பிரிந்து சென்ற தலைவன் எதிர்பாராது வந்து கூடிய நிகழ்ச்சியை, தலைவியும் தோழியும் நினைக்கிறார்கள். முதலில் நடந்ததைக் கூறி முடிவில் அவன் வருவான் என்ற நம்பிக்கையை,

'கணங்கொள் இடுமணல் காவி வருத்தப்
பிணங்கு இரு மோட்ட திரைவந்து அளிக்கும்
மணங்கமழ் ஐம்பாலார் ஊடலை ஆங்கே
வணங்கி உணர்ப்பான் துறை'(கலி:131:37-40)

எனும் அடிகளின் வழி உணர்த்துவர். மற்றும் 'மலைப் பக்கங்களில் காந்தள் மணம் கமழப் பாம்பு எனும்படி வளைந்த மின்னலுடன் மேகம் இடிப்பதனால், பிரிந்தார் வருந்தும்படியான பூங்குன்ற நாடன் நம்மைப் புணர்ந்த அந்த நாளைப் போல, செறிந்தில்லாமல் இந்நாளில் வளைகள் நெகிழ்ந்தன'(தி.மொ.ஐம்:3) எனும் பொருள்பட வந்த இச்செய்யுளும், மேற்கூறிய செய்யுளும் தலைவனொடு தலைவி முன்பு பெற்ற இன்பத்தைப் பேசுகின்றன. நச்சினார்க்கினியர்,

புன்னை அரும்பிய புலவு நீர்ச்சேர்ப்பன்
என்ன மகன் கொல் தோழி'(நற்.94:6-40)

எனக் குறிக்குமிடத்தை நோக்கினால் குவியிணர்ப் புன்னை மணக்கும் என்றது, களவாய் இருந்த நட்பு வரைவு மூலம் விரிந்து மணக்கும் என்றதாம்; ஈண்டு வரைவு என்பது ஏமப்பொருள்; தலைவிக்கு ஏற்பெறும் உவகை ஆயிற்று என உணர்தல் வேண்டும். மேலும் தலைவன் கூற்றில் அமைந்த செய்யுள் ஒன்றில்,

'இரண்டு அறி கள்வி நம் காதலோளே' (குறுந். 312) எனக் கூறுமிடத்து, தலைவி 'இரவில் தலைவனொடு தலைவி ஒத்துத் தமரை மாறுபட்டவராகவும் பகற்பொழுதில் தன்னொடு ஒத்துத் தலைவனை மாறுபட்டவளாகவும் இருக்கிறாள்' எனத் தலைவன் கூறியதை நோக்குமிடத்து, தலைவியின் ஏம இன்பக் குறிப்பு அறியப் பெறுகிறது.

## உ. வழுவமைதி நிலை

வழுவமைதி நிலையில்,

1. அன்னவு முளவே ஓரிடத்தான
2. எஞ்சியோருக்கு எஞ்சுதல் இலவே

ஆகிய கூற்றுகள் அமைந்துள்ளன.

## 1. அன்னவு முளவே ஓரிடத்தான

இதற்கு இளம்பூரணர் "அவை போல்வன என்றவாறு"[191] எனக்கூறி மேலும் ஓரிடத்துக்கண் என்றதனால் இவ்வாறு எல்லார் மாட்டும் எவ்விடத்தும் நிகழாது என்றவாறாம். எனவே,

'குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை

நெறிப்பட வாரா அவள் வயின் ஆன'(தொல்.பொருள்.களவு.18:3-4) கூற்று நிகழாதென்பதனை மறுத்து ஓரிடத்துக் கூற்று நிகழும் என்றவாறாம் எனக் கூறுவர்.

நச்சினார்க்கினியர், "அன்னபிற வென்றதனால் இன்னும் தலைவி கூற்றாய் இவற்றின் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க"[192] எனக்கூறி, தோழி கூற்றில் மூன்று செய்யுளினையும், தலைவி கூற்றில் இரண்டு செய்யுளினையும் எடுத்துக்காட்டுவர். அவை,

1. இரவுக்குறி நேர்ந்த தலைவனுக்குத் தோழி நொந்து கூறியது(குறுந்:355)
2. பருவமென்றழிந்த தலைவியைத் தோழி பருவமன்று என்று வற்புறுத்தியது (ஐந்.ஐம்:-9)
3. தலைவன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது (தி.மொ.ஐம்:3)
4. தலைவி காமம்மிக்க கழிபடர் கிளவியால் சொல்லியது (நற்.102)
5. தலைவி இயற்பட மொழிந்தது (ஐந்.எழு:4)

ஆகியவையாகும்.

## 2. எஞ்சியோர்க்கு எஞ்சுதல் இலவே

தொல்காப்பியர் அகத்திணையியலில் உடன்போக்கின்கண் "நற்றாய், செவிலி, தோழி, கண்டோர், தலைவன் ஆகியோர் நிகழ்த்தும் கூற்றுகளைக் கூறுவர். "[193] ஆயின், தலைவி கூறும் கூற்றாக

எதனையும் கூறவில்லை. உடன்போக்குக் குறித்து, தலைவி கூற்று நூற்பா "அகத்திணையியலில் இருந்து காலப் போக்கில் மறைந்திருக்க வேண்டும்' என்று இளம்பூரணர் கருதுகிறார்."[194] ஏனெனில் தொல்காப்பியர் பொருளியலில்,

'அம்பலும் அலருங் களவு வெளிப் படுக்குமென்று
அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும்'

(தொல்.பொருள்.பொருளி:30-3-6)

என்பதனைத் தலைவிக்குரியதாக மொழிகின்றார். ஆதலின் உடன்போக்கில் தலைவி கூற்றுக்களை அகத்திணையியலில் கூறியிருக்க வேண்டுமென்று இளம்பூரணர் கருதியதில் காரணம் இருக்கின்றது.

இருப்பின் நற்றாயும், செவிலியும், தோழியும், கண்டோரும் தலைவனும் அல்லாத தலைவி, ஆயத்தார் முதலியோர் ஆவர். அஞ்சுதலில் என்றது இவர்களுக்கும் உடன்போக்கில் கூற்று நிகழ்த்துதல் தவிர்த்தல் இல்லை என்பதாம். எனவே, தலைவி ஆயத்தார் முதலியோரும் உடன் போக்கில் சிறுபான்மை கூற்று நிகழ்த்துதற்குரியர் என்பது பொருந்தும். அங்ஙனமின்றி, களவிலும் கற்பிலும் பிரிவு நிகழாதவிடத்தும் நிகழ்ந்தவிடத்தும் இருவகைப் பாங்கர், பாணர், கூத்தர், பரத்தை முதலியோர் இன்னவாறு கூற்று நிகழ்த்துவரென்பது அக்களவியல் முதலியவற்றில் தனித்தனி நூற்பாக்களில் விரிவாகக் கூறப்பட்டிருத்தலை அறிந்து வைத்தும் அவர்களுக்குச் சிறிதும் இயைபு இல்லாத உடன்போக்குப் பற்றி இந்நூற்பாவில் அவர்களுக்கு இடம் கொடுத்தல் (இளம்பூரணர்) தொல்காப்பியர் முன்னும் பின்னும் எடுத்துக் கூறியுள்ள வரையறையைக் கடந்ததாகும்"[195] என்பர். எவ்வாறெனின்,

நச்சினார்க்கினியர், தொல்காப்பியர் களவியலில் கூறும் "நாணு நெஞ்சலைப்ப விடுத்தற் கண்ணும்"[196] என்னும் கூற்றை உடன் போக்கில் தலைவிக்குரியதாகக் கொள்கின்றார். இருப்பின் சங்க அகப் பாடல்களில் தலைவிக்குரிய உடன்போக்குப் பாடல்கள் அனைத்தையும் மேல் குறிப்பிட்ட கூற்றுக்குள் அடக்க இயலாமல் "நச்சினார்க்கினியர் எஞ்சியோர்க்கு எஞ்சுதல் இலவே"[197] என்பதற்குள் அமைத்துக்

கொள்கின்றார். "இளம்பூரணரும் அவ்வாறே அமைத்துக் கொள்கிறார்."[198]

ஆதலின் உடன் போக்குக் குறித்த தலைவி கூற்று எஞ்சியோர்க்கு எஞ்சுதல் இலவே என்பதில் அமைத்துக் கொள்ளப் பெறுகிறது.

## III. ஒரு பாற் கூற்று

ஒரு பாற் கூற்று, ஒரு பாற் கிளவி ஆகிய இரண்டும் ஒரு பொருள் உடைத்து. இவ் ஒருபாற் கூற்று களவு, கற்பு ஆகிய இரண்டிற்கும் உரியதால், இது பற்றிய செய்தியைத் தொல்காப்பியர் பொருளியலில் கூறுவர்.

பாற்கிளவி என்பதற்குத் தொல்காப்பிய உரையாசிரியர்களும் திறனாய்வாளர்களும் வெவ்வேறான விளக்கங்களைத் தந்துள்ளனர்.

இளம்பூரணர் "பாற்கிளவி"[199] என்பது பயிலாது வரும் ஒரு கூற்றுச் சொல் எனப்பட்டது என்பர். நச்சினார்க்கினியர் "இலக்கணத்திற் பக்கச் சொல்"[200] என்பர்.

க.வெள்ளைவாரணர் "உலகியலில் எல்லோருக்கும் உரியதாய்ப் பயின்றதாகாது ஒரு திறத்தார்க்கே உரியதாய்ப் பயிலும் சொல் வகையினைப் பாற்கிளவி என வழங்குவர் என்றும் "பால்-பக்கம், பாற்கிளவி- ஒரு திறத்தார்க்கே உரியதாய்ப் பயிலும் சொல்"[201] என்பர்.

மேற்குறிப்பிட்ட அனைத்தையும் அடிப்படையாய்க் கொண்டு இராம.பெரியகருப்பன் "தொல்காப்பியர் ஒருவர் தம் முன்பாக மற்றொருவர் இருக்கக் கூறுவதனைக் கூற்று வகையில் அடக்கி அங்ஙனம் யாருமில்லாமல் தாமே கூறுவனவற்றை ஒரு பாற் கிளவி என்றார். தம் நெஞ்சிற்குக் கூறுவனவும், எதிர் மறுத்துப் பேசாதனவாகிய புள்ளும், விலங்கும் போல்வனவற்றிடம் கூறுவனவும் இவ் ஒரு பாற் கிளவி ஆகும் என விளக்குவர்."[202] ஈண்டு அவர் தரும் விளக்கம் புதுமையில் அமைவதாயின்,

"ஒருவர் தம் முன்பாக மற்றொருவர் இருக்க
அவரை நோக்கிக் கூறும் கூற்றில் கூட
இத்தகைய பாற்கிளவிகள் இடம் பெறுகின்றன."[203]

என்பர் நா. பாலகிருட்டிணன்.

தலைவனும் தலைவியும் நெஞ்சு, சொல்லாதன, செய்யாதன ஆகியவற்றைத் தத்தம் மனவுணர்வுகளுக்குத் தக்கவாறு பலபடியாகக் கூறுவதனைத் தொல்காப்பியர் அவ்விருவர் தம் கூற்றின் ஒரு பகுதியாகும் என்ற பொருள்படவே பாற்கிளவி என்ற தொடரைக் கையாளுகின்றார் என்று கூறுவது பொருந்தும். பால்-பகுதி, கிளவி-கூற்று, பாற்கிளவி கூற்றின் ஒரு பகுதி. இதனைத் தொல்காப்பியர்,

'நோயும் இன்பமும் இருவகை நிலையின் எனும் நூற்பாவின் வழி விளக்குவர்'. (தொல்.பொருள்.பொருளி:2)

## பாற்கிளவியின் வகைகள்

தொல்காப்பியர் கேட்பதற்குரிய அஃறிணைப் பொருட்களை ஈண்டு, நெஞ்சு, சொல்லாதன, செய்யாதன என மூவகைப்படுத்துவர்.

ஞாயிறு, திங்கள், அறிவு, நாள், கடல், கானல், விலங்கு, மரம், பொழுது, புள், நெஞ்சு ஆகியவற்றுள் நெஞ்சு கூறுவோரினின்று தனியாகப் பிரிக்க முடியாதாகலின் அதனைத் தனித்து ஒருவகையாகக் கூறுவதனை,

**1) நெஞ்சு குறித்த பாற்கிளவி** என்பர். மேலும் இந்நெஞ்சு குறித்த பாற் கிளவியை மூன்று வகையாகக் கூறுவர். அதானின் துன்பமும் இன்பமுமாகிய இருவகை நிலைக் களத்தினையுடைய காமம் பற்றிய வரன் முறையான நிகழ்ச்சியில் ஒருவரையொருவர் காணாதபடி அல்லது அருகிருந்தும் முயக்கம் பெறாதபடி இடையீடு வருதலால் அப்போது நகை முதலிய எட்டு மெய்ப்பாடுகளையும் வெளிப்படுத்தக் கூடிய உறுப்புகளை,

1. உடையது போலவும்
2. உணர்வுடையது போலவும்
3. தம்மை மறுத்துரைப்பது போலவும் என உரைப்பர்.

தம் நெஞ்சோடு சேர்த்துக் கூற்று நிகழ்த்துதல் உண்டு. இவற்றுள் உணர்வுடையது போல் என்பது தலைவி தனது உடல் வனப்பு

வேறுபட்டுத் தனிமையுறுங்கால் தலைமகனது பிரிவைத் தன்னுடைய தோள் முதலிய உறுப்புக்கள் முன்னமே உணர்ந்தன போலப் பொருந்திய வகையாற் கூறப் பெறுவதனை,

'வண்ணந் திரிந்து புலம்புங் காலை
உணர்ந்தது போல உறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையாற் புணர்க்கவும் பெறுமே'

(தொல்.பொருள்.பொருளி:7)

என மொழிவர்.

**2. சொல்லா மரபின பாற்கிளவி**

ஞாயிறு, திங்கள், நாண், கடல், ஆகியவற்றையும்.

**3. செய்யா மரபின பாற்கிளவி**

உவம இலக்கணம் பொருந்துமிடத்துத் தம் மன அறிவையும், ஐம்புலன்களையும் மேற் சொல்லிய நெஞ்சிற்கும் புள் விலங்கு முதலியவற்றிற்கும் உரியவாக வேறுபடுத்தி நிறுத்தி உவமப் பொருளும் உவமிக்கப்படும் பொருளுமாகிய இரு பெயர்களும் உவமை நிலக்களமாகிய வினை, பயன், பண்பு என்னும் மூன்றிற்கும் உரியவாக உவமைப்படுத்திக் கூறுதல்.

உவமம் வாயிற்படுத்தும் பாற்கிளவி என்பதாகும். மேற்குறித்த பொருட்கள் யாவும் உயர்திணை முப்பாலுக்கும் உரியவையாகும் முறையினை நச்சினார்க்கினியர்,

"நெஞ்சென்னும் அஃறிணையொருமையைத் தெரிய விளங்கத் தலைவன் கூறும் வழி உயர்திணை ஆண்பாலாகவும், தலைவி கூறும் வழி உயர்திணைப் பெண்பாலாகவும், பன்மையிற் கூறும் வழி பன்மைப் பாலாகவும் கொள்க என்றும் சொல்லா மரபினவற்றையும் உயர்திணைப் பாலாகியும் அவற்றைத் தம் போலச் சேர்த்துக் கூறுபடுத்தி உயர் திணை முப்பாலாக்கியும் கூறுபவென வழுவமைத்தார்"(204) என விளக்குகின்றார்.

## களவில் ஒருபாற் கூற்று

களவில் தொல்காப்பியர் குறிப்பிடும் தலைவி கூற்றினைச் சங்க இலக்கியத்தோடு ஒப்பிட்டுக் காணுகையில் தொல்காப்பியர் குறிப்பிடும் தலைவிக்குரிய ஒரு பாற் கூற்றானது இனம் காண முடிகிறது. அவை

இரண்டு நிலைகளில் இடம் பெறுகின்றன. ஒன்று தொல்காப்பியர் குறிப்பிடும் சொல்லின் அளவில் வெளிப்படுவது; அவை,

1. உயிராக் காலத்து உயிர்த்தலும்
2. உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்றெனத் தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு காமக் கிழவன் உள்வழிப் படினும்,

ஆகிய இரண்டாகும். இரண்டாவது, உரையாசிரியர்கள் பிற கூற்றுகளுக்கு எடுத்துக்காட்டும் மேற்கோள் செய்யுள் காணப்பெறும் ஒருவழித் தணத்தல், இற்செறிப்பு, காப்பு மிகுதி, வரைவிடை வைத்துப் பிரிதல் ஆகிய சூழல்களும் ஒரு பாற் கிளவிக்குரியனவாக அமைகின்றன. அவை,

1. அருமை செய்து அயர்த்தல்
2. விட்டுயிர்த்து அழுங்கல்
3. நொந்து தெளி ஒளித்தல்
4. அச்சம் நீடல்
5. தமர் தற்காத்த காரணம்
6. வரைவிடை வைத்த காலத்து வருந்துதல் என்பனவாகும். இவை ஒரு பாற் கூற்றாகவும் தலைவி தோழிக்கு உரைப்பனவாகவும் அமைந்துள என்பது குறிப்பிடத்தக்கது.

## கற்பில் ஒரு பாற் கூற்று

கற்பில் தலைவன் பரத்தையிற் பிரிந்த நிலை, தலைவி பருவங்கண்டு ஆற்றாமை, பொழுது கண்டு புலம்பியது

ஆகிய சூழல்களை அடிப்படையாக வைத்து நோக்கும் போது, தொல்காப்பியர் குறிப்பிடும்,

‘கிழவனை மகடூஉப் புலம்பு
பெரிதாகலின் அலமரல் பெருகிய
காமத்து மிகுதியும்’

(தொல்.பொருள்.கற்பு:6.5-7 )

எனும் கூற்றினை, கற்பில் தலைவிக்குரிய ஒரு பாற் கூற்றாகக் கொள்ள இடம் தருகிறது. இருப்பின் தோழியோடு பேசும் நிலையிலும் அமையும்.

**1. உயிராக் காலத்து உயிர்த்தலும்**

வெளிப்படக் கூற இயலாத காலத்தில் வெளிப்படக் கூறுதல் எனும் பொருளில் வரும் இக்கூற்றிற்கு,

'முலைகள் இவள் மார்பகம் முழுவதும் பருத்துச் செப்புடன் ஒத்தன. அதனால் இவள் இனி என் நிலையுடையள் ஆவளோ என ஆராய நின்ற கவலையை உடைய மாக்களை உடையது இவ்வறிவற்ற ஊர்'(குறுந்:159) எனத் தோழி கூறுவதாக அமைந்த இச்செய்யுளினை இளம்பூரணர் கூறி, 'இவ்வாறு கூறாக் காலத்து உயிர் செல்லுமாறு சொல்லுதல்' பெறப்பெறும். மற்றும் "இந்நிகழ்ச்சியைத் தோழிக்கு நாணத்தால் உரையாளாயின் நோயாட வருந்தும்"(205) என இளம்பூரணர் உரைப்பதற்கு அவர் காட்டிய மேற்கோள் பாடலானது.

'தோழி! நம் மனைத் தோட்டத்துப் புதரில் தழைத்துப்
படர்ந்த மாரிக் காலப் பீக்கம் பூக்களைப் பறித்துக்
கொண்டு தலைவர் இருக்குமிடம் சென்று இம்மலரின்
நிறம் போலாயினள் அவள் என்று சொல்லுவார்
உளராயின் நன்று'(குறுந்.98)

எனக் கூறுவதன் வழி, தலைவி பசலையால் துன்புறும் செய்தி, நோயாட வருந்துவதோடு ஒப்பிட்டு நோக்கத்தக்கது.

இக்கூற்றினை, இளம்பூரணர் "உயிராக் காலத்து உயிர்த்தலும் உயிர்செல என்றும் நச்சினார்க்கினியர் உயிராக் காலத்து உயிர்த்தலும் எனக் கொண்டு உயிர்த்தலும்"(206) எனப் பொதுப்படக் கூறுவதனால் தோழிக்குக் கூறுவனவுங் கொள்க என்பர்.

நச்சினார்க்கினியர் இக்கூற்றிற்கு மேற்கோளாக இளம்பூரணர் உரைத்த குறுந்: 145ஆம் செய்யுளைக் காட்டி மேலும்,

'உறைபதி அன்று இத்துறைகெழு சிறுகுடி
கானல்அம் சேர்ப்பன் கொடுமை ஏற்றி
ஆனாத் துயரமொடு வருந்தி பானாள்

துஞ்சாது உறைந்தொடு உசாவாத்

துயில்கண் மாக்களொடு நெட்டிரா உடைத்தே'

எனும் செய்யுளை உரைப்பர். ஈண்டு துயிற்கண் மாக்களை என்றது தலைவி தலைவன் பிரிவாலே வருந்தி, இரவெல்லாம் துயிலாது கிடப்பவும், அதனை அறியாது தோழி நன்கு துயில்கின்றாள் என்று தோழியை அயலார் போன்று கூறுவள். இதனை, 'தலைவனொடு தன்றிறத்து ஒருவரும் ஒன்று உரையாத வழித் தனது ஆற்றாமையால் தன்னொடும் அவனொடும் பட்டன சில மாற்றந் தலைவி தானே கூறுதலும் உள' என்பர்.

நச்சினார்க்கினியர் இக்கூற்றிற்குக் கூறும் உரை ஒப்புமையுடையது. உயிராதாள் தோழியாயினாள்; அவள் தலைவி கூறுவன கேட்டதற்குப் பொய்துயில் கொள்ளும் என்பது இவ்விடம் நோக்குதற்குரியது.

தோழி மறை வெளிப்படுத்துக் கோடற்கு வாய்ப்பு இருந்துழி, தலைவன் தன்மேல் தவறிழைத்த வழி என உரைப்பதற்கு மேற்கோளாக நற்றிணை 72-ஆம் செய்யுளைக் குறிப்பர். இதில்,

'தோழி! பெரியோர் தாம் விரும்பியொழுக வேண்டியனவற்றை விரும்பி ஒழுகார் என்னும் சொல்லை ஆயுங்கால் நாணத்தக்கதாய் இருக்கின்றது. உயிரன்ன நட்பினையுடைய நினக்கு யான் மறுப்பது என்ன உளது' எனத் தலைவன் வரவின்மை கூறி 'தோழி மறை வெளிப்படுத்துக் கோடற்கு வாளாது இருந்துழி தலைவன் தன் மேல் தவறு இழைத்த வழி' என நச்சினார்க்கினியர் கூறுவது ஒப்புமை உடையது.

**3. உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்றெனத்**
**தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு**
**காமக் கிழவன் உள் வழிப் படினும்**

எல்லாவற்றினும் சிறந்த உயிரை விட மகளிர்க்கு நாணம் என்னும் பண்பு இன்றியமையாச் சிறப்பினது. அத்தகைய நாணத்தைவிடக் குற்றமற்ற நல்லறிவின் வெளிப்பாடாகிய கற்புடைமை இன்றியமையாச் சிறப்பினதாகும் என முன்னோர் வாய்மொழியைப்

பொருந்திய நெஞ்சத்துடன் தனது காதற்குரிய தலைவன் இருந்தவிடத்து, தானே செல்லுதலை விரும்பிய நிலையில் தலைவிபாற் கூற்று நிகழும். அவ்வப்போது தலைவி தலைவனை அடையப் பெறாமையால் தனது உடம்பும் உயிரும் மெலிந்த நிலையிலும்,

உடம்பு முதலியவற்றைத் தன்னின் வேறாக எண்ணி, இவை என்ன துன்பம் பெற்றன என அவற்றின் வாட்டத்திற்கு இரங்கிக் கூறுவதன்றித் தலைவன் உள்ள இடத்துத் தானே சேர்தல் என்பது உயிரினுஞ் சிறந்த நாணினளாகிய தலைவிக்கு இல்லை என்பதை,

'உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்
என்னுற் றனகொல் இவையெனின் அல்லதைக்
கிழவோற் சேர்தல் கிழத்திக்கில்லை'

(தொல்.பொருள்.பொருளி:8)

எனக் கூறுவர். மற்றும் தலைவி தன் நெஞ்சத்துடன் தனித்து வினவுங் காலத்தும் தலைவனை அடைதல் வேண்டும் என்ற உணர்வு தலைவிக்கு உரியதாகலும் உண்டு என்பதை,

'ஒரு சிறை நெஞ்சோ டுசாவுங் காலை
உரிய தாகலும் உண்டென மொழிப'

(தொல்.பொருள்.பொருளி:9)

என்பர். ஈண்டு நெஞ்சமொடு ஒரு சிறை உசாவுதலாவது ஒரு பக்கத்துத் தனித்திருந்து தனது நெஞ்சினை முன்னிலைப் படுத்தி வினவி ஆராய்தல் உண்டு என்பதாகும்.

இளம்பூரணர் இக்கூற்றிற்கு மேற்கோளாகத் தோழி உடன்போக்கு உணர்த்திய விடத்துத் தலைவி,

'நமது நாண் இரங்கத் தக்க ஒன்றாயிற்று அது
நம்மொடு நெடுநாள் துயர் உற்றுக் கிடந்தது
இப்போது காமநோய் மிகுதியாலே என்னை நீத்து
அகலா நின்றது யான் என் செய்வேன்'(குறுந். 149)

எனத் தலைவி நொதுமலர் வரைவு நோக்கிக் கூறியதாகக் காட்டுவர். மற்றும்,

'தலைவி தன் நெஞ்சை விளித்து நெஞ்சே நாம் அவரைப் பிரிந்தமையால் உடல்மெலிந்து கண் கலுழ்ந்து அழுதலின்றும்

தப்புவோம். யான் வேற்று நாட்டில் அவர் இருப்பினும் அங்குச் செல்லத் துணிந்தேன் ஆதலால் நீயும் உடன் வருவாயாக'(குறுந்.11) எனக் காமக்கிழவன் உள்வழிப்படுத்தற்குக் காட்டுவர்.

நச்சினார்க்கினியர் இச்செய்யுளைக் காட்டி மேலும் மூன்று செய்யுளினை எடுத்து இயம்புவர். அவை,

'தலைவி யானும் ஓர் ஆடுகள மகள்; தலைவனும் ஓர் ஆடுகள மகனே ஆவான். அவன் இப்போது யாண்டு உள்ளானோ? யான் அவனை யாண்டும் தேடியும் கண்டதில்லை'(குறுந். 31) என்பதையும்,

'தலைவி அன்னையின் காவலையும் நீங்கி இல்லின் வாயிலைக் கடந்து, ஊர்ப்பொது மன்றம் போய், பகல் நேரத்தில் பலரும் காண அவன் ஊர் எங்கே என்று வாய்விட்டுக் கேட்டு, அவனை அணுகி, நீ சான்றோய் அல்லை என்று கூறி வருவதற்குச் செல்வோமா'(நற். 365) என்னும் செய்யுளையும்,

'தோழி இரவில் செல்வதற்கு அவர் நாட்டு வழிகள் அரியவை அல்ல. சென்றால் அங்கு நம் கூந்தலை வாரி, நீ இந்நெறியில் வருவதற்கு அறிவீரோ என வினவுவார் இவர். ஆதலால் செல்லாமையே நன்று'(அகநா.8) என்பதையும் காட்டி விளக்குவர்.

## IV. கூற்று மெய்ப்பாடு

தலைவி கூற்றில் தலைவியானவள் பண்டை நல்வினையாற் கூட்டப் பெற்ற ஊழ்வினை குறித்து, ஒற்றுமைப்பட்ட நண்பினாலே தலைவன் தன்னை மணந்து கொள்ளுதற்குக் குறையுறுகின்றதனைத் தெளிந்த தலைவி, தான் அரியளாந் தன்மையினைப் புலப்படுதல் அமைந்த எண் வகை மெய்ப்பாடு அல்லது மெய் தொட்டுப் பயிறல் முதலான எண்வகைகளால் பெருமை நிறைந்த இயல்பினளாய் நிற்கும் நிலையிலும் தலைவி பாற் கூற்று நிகழும். இதனை,

'பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி
ஒருமைக் கேண்மையின் உறுகுறை தெளிந்தோள்
அருமை சான்ற நாலிரண்டு வகையிற்
பெருமை சான்ற இயல்பின் கண்ணும்'

என்பர் தொல்காப்பியர். ஈண்டு **அருமை சான்ற நாலிரண்டு** வகையில் **நாலிரண்டு** என்பது சிக்கலைத் தோற்றுவிக்கிறது. ஏனெனின் நாலிரண்டு என்பதற்கு இளம்பூரணர்,

மெய்ப்பாட்டியலில் "வரைந்து எய்தும் கூட்டத்திற்குரியனவாகிய

1. முட்டுவயிற் கழறல்
2. முனிவு மெய் நிறுத்தல்
3. அச்சத்தின் அகறல்
4. தூது முனிவின்மை
5. துஞ்சிச் சேர்தல்
6. காதல் கைமிகல்
7. அவன் புணர்வு மறுத்தல்
8. கட்டுரையின்மை

எனச் சொல்லப்பட்ட எண்வகை மெய்ப்பாடுகளையுடையவாகிய இயல்பு"(207) என்பர். ஆயின் நச்சினார்க்கினியர் "தலைவன் கூற்றில் இடம்பெறும்,

1. மெய் தொட்டுப் பயிறல்
2. பொய் பாராட்டுதல்
3. இடம் பெற்றுத் தழால்
4. இடையூறு கிளத்தல்
5. நீடு நினைந்து இரங்கல்
6. கூடுதல் உறுதல்
7. சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி
8. தீராத் தோற்றம் உளப்படத் தொகைஇ

என்பர்."(208) இவ்விடத்துப் பேராச்சிறப்பின் இருநான்கு கிளவி என்பதை அருமை சான்ற நாலிரண்டு வகை என்பதோடு ஒப்புமைப் படுத்தி நச்சினார்க்கினியர் கூறுவர். இருப்பின், ச.வே.சுப்பிரமணியம், "தோழி கூற்றில் இடம் பெறும்,

1. நாற்றம்
2. தோற்றம்
3. ஒழுக்கம்
4. உண்டி
5. செய்வினை மறைப்பு

6. செலவினும்

7. பயில்வு

8. புணர்ச்சி எதிர்ப்பாடு உள்ளுறுத்தல்

ஆகிய எட்டினையும் குறிப்பர்."[209] இருப்பின் கூற்று கூறுகின்றவிடத்து அக்கூற்று நிகழ்ச்சிக்குக் காரணமாய் அமைந்த மெய்ப்பாடுகளைத் தொடர்பு பற்றிக் கூறியது கொண்டு ஏனைய மெய்ப்பாடுகளும் கூற்றினுள் அடங்கக் கூறல் வேண்டும் ஆதலின் இளம்பூரணர் உரையை நச்சினார்க்கினியர் மறுப்பர்."[210] ஆயின் "க.வெள்ளைவாரணர், நச்சினார்க்கினியர் மறுப்பை வலியுடைய மறுப்பாகாது"[211] என்பர்.

இவ்வகையில் உரையாசிரியர்களின் கருத்து இருப்பின் மெய்ப்பாட்டியலில் தொல்காப்பியர் கூறியவற்றைச் சொல்லளவிலும் பொருளளவிலும் ஆராயின் சில உண்மைகள் புலப்படும்.

## மெய்ப்பாடு

உய்த்துணர்வதால் அன்றி இயல்பாகவே வெளிப்படும் உணர்ச்சிகளைச் செய்யுளில் புலப்பட அமைப்பது மெய்ப்பாடு என்பதை,

'உய்த்துணர்வின்றித் தலைவரும் பொருளான்

மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடாகும்'

(தொல்.பொருள்.செய்யு:505)

எனக் கூறுவது உலக வழக்கிற்குரியது. மற்றும்

'உய்ப்போன் செய்தது காண்போர்க் கெய்துதல்

மெய்ப்பாடென்ப மெய்யுணர்ந் தோரே'

(தொல்.பொருள்.பொருள்: )

என மொழிவது நாடக வழக்கிற்குரியது. இதில் இருந்து மாறுபடுவது பேச்சு மெய்ப்பாடாகும்.

## கூற்று மெய்ப்பாடு

கூற்று நிகழும் பொழுது அக்கூற்று நிகழ்ச்சிக்குக் காரணமாய் அமைந்த மெய்ப்பாடுகளை நோக்குமிடத்து உள்ளக் கிளர்ச்சியின்

வெளிப்பாட்டில் முக மெய்ப்பாடுகளும், பேச்சு மெய்ப்பாடுகளும் இன்றியமையாப் பங்கு பெறுகின்றன.

உணர்ச்சியின் புலப்பாட்டு நிலையில் அமையும் பேச்சுகள் பேச்சு மெய்ப்பாடுகளாகும். வெறும் எண்ணங்களின் வெளிப்பாடான பேச்சுகள் மெய்ப்பாடுகள் அல்ல. அவை பேச்சுகள்/ கூற்றுகள் எனப்பெறும்.

உணர்ச்சி வயப்பட்ட நிலையில் உணர்ச்சியின் வெளிப்பாடாகப் பேச்சு மெய்ப்பாடு அமைவதால் பேச்சு மெய்ப்பாடு உணர்ச்சி நிரம்பியதாகத் தோன்றுகிறது. இப்பேச்சு மெய்ப்பாட்டோடு தொடர்புற்றுத் தோன்றும் முக மெய்ப்பாடுகளும் இயைந்து ஒரு குறிப்பிட்ட மெய்ப்பாட்டைத் தனித்துவப் படுத்திக் காட்டுகின்றன.

பேச்சு மெய்ப்பாடு என்பது தனக்குத் தானேயும் மற்றவர்களோடும் உள்ளக்கிளர்ச்சியை வெளிப்படுத்துவதில் தனியிடம் பெறுகிறது.

செய்யுளில் படைக்கப் பெறும் தலைவன் தலைவி முதலியோர் தம் உணர்ச்சிகளைப் புலப்படுத்தும் பேச்சுகளையும் மெய்ப்பாடாகத் தொல்காப்பியர் கொண்டதற்கு,

1. இல் வலியுறுத்தல்
2. திணைப்பு வினை மறுத்தல்
3. பாராட்டு எடுத்தல்
4. மடந்தப உரைத்தல்
5. கலங்கி மொழிதல்
6. கையறு வரைத்தல்
7. துன்பத்துப் புலம்பல்
8. அறனளித் துரைத்தல்
9. முட்டுவயிற் கழறல்

ஆகியவற்றை நோக்கும் பொழுது சொல்லளவிலே அவை புலப்படும். இவ்வாறமையும் களவுக் கூற்று மெய்ம்மைகளோடு கற்புக் கூற்று மெய்ம்மைகளும் இணைத்து நோக்குதற்குரியன.

## தொகுப்புரை

தமராலும் பிறராலும் பார்க்கப் பெறாதது களவு என்பதும் கூற்று எனும் சொல் கூறுதல் எனும் பொருளுடையது என்பதும் ஆய்வில் விளக்கப் பெற்றுள்ளது. அகமாந்தர்களின் கூற்று எண்ணிக்கை கோடிட்டுக் காட்டப் பெற்றுள்ளது.

தலைவி கூற்று, அல்ல கூற்று, கூற்று, ஒருபாற் கூற்று, மெய்ப்பாடு கூற்று எனப் பாகுபடுத்தப்பட்டுள்ளதோடு அல்ல கூற்று என்பது களவிற்குரியது என்பதும் மற்றவை களவு, கற்பு ஆகிய இரண்டிற்கும் பொதுவானவை என்பதும் ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளது.

அல்லகூற்று மொழியாக மறைந்தவர் காண்டல், தற்காட்டுறுதல், நிறைந்த காதலில் சொல்லெதிர் மழுங்குதல், வழிபாடு மறுத்தல், மறுத்தெதிர் கோடல், பழிதீர் மொழிவள் சிறுதீர் தோற்றல் என வகைப்படுத்தப்பட்டு உரையாசிரியர்கள் காட்டும் மேற்கோள் எங்ஙனம் பொருந்தியுள என்பதும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

தலைவன் தோழி ஆகிய இருவரிடத்தும் தலைவி நிகழ்த்தும் கூற்றுகள் தலைவி மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழி உரைத்தல், தலைவி அருமறையைச் சொல்லுதல், தலைவி தன் குறிப்பிழைப்பாகி நிற்கப் பெற்றவை, தலைவி கலக்கமின்றித் தெளிதல், தலைவி தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தமையும் தோன்றக் கூறுதல், வழுவமைதி நிலையென வரையறை செய்யப்பட்டுள்ளன.

தலைவி மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழி கூற்றுகள், இயற்கைப் புணர்ச்சி புணர்ந்தபின் நிகழ்வன என்பதும், கைப்பட்டுக் கலங்கினும் முதலாக கூறிய வாயில் கொள்ளாக் காலையும் ஈராக பன்னிரண்டு கூற்றுகள் இவ்வகையில் அமைவன என்பதும் சான்றுகளுடன் ஆய்வில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

தலைவி தன் அருமறையைச் சொல்லும் கூற்று, தன் களவொழுக்கத்தினைத் தோழிக்கு வெளிப்படுத்தும் நிலையில் அமையும் என்றும் வேற்றுவரைவுவரின் அது மாற்றுதற்கண்ணும் முதலாகத் தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும் ஈராகப் பதிமூன்று கூற்றுகள் தலைவி தன்குறி பிழைக்க நிற்கப் பெறுவனவாக அமைவன என்றும் தெளிவுபடுத்தப் பட்டுள்ளன.

தலைவி கலக்கமின்றித் தெளியும் கூற்று, தன்குறி தப்பியவழி கூற்றாகும் என்பதும், களவில் தலைவனுக்குப் பரத்தையர் தொடர்பு உண்டு என்று ஐயுறும் நிலைக் கூற்று, புலவிப்போலிக் கூற்றெனவும், இவ்வகைக் கூற்றுகள் வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும், பொழுதுமாறும் புரைவது அண்மையின் அழிவுதலை வந்த சிந்தைக்

கண்ணும், காமஞ் சிறப்பினும் அவனளி சிறப்பினும், ஏமஞ்சான்ற உவகைக் கண்ணும் என அமையும் எனப் புலப்படுத்தப்பட்டுள்ளன.

வழுவமைதி நிலைக் கூற்றுகள் அன்னவும் உளவே ஓரிடத்தான, எஞ்சியோர்க்கு எஞ்சுதல் இலவே என இருநிலைகளில் அமைவன என்பது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. தொல்,பொருள்,நூற்: 111: -2.
2. தொல்,பொருள், நூற்: 109: -1.
3. தொல்,பொருள், நூற்: 133: -1.
4. தொல்,பொருள், நூற்: 137: -1.
5. தொல்,பொருள், நூற்: 138: -1.
6. தொல்,பொருள்,செய்யு, நூற்: 184: -4.
7. தொல்,பொருள், நூற்: 109: -13.
8. இராம.பெரியகருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.167.
9. தொல்,பொருள், நூற்: 310.
10. தொல்,பொருள்,செய்யு, இளம், உரை, கழக வெளியீடு, ப.419.
11. தொல்,பொருள்,பேரா, இளம், உரை, கழக வெளியீடு, ப.418.
12. தொல்,பொருள்,செய்யு,இளம்,உரை, கழக வெளியீடு, நூற், 490, ப.530.
13. மேலது, நூற்: 491, ப.530.
14. மேலது, நூற்: 492, ப.530.
15. மேலது, நூற்: 493, ப.531.
16. மேலது, நூற்: 494, ப.531.
17. மேலது, நூற்: 495, ப.531.
18. மேலது, நூற்: 496,497, ப.531.
19. மேலது, நூற்: 498, ப.533.
20. மேலது, நூற்: 499, ப.533.
21. மேலது, நூற்: 500, ப.530.
22. தொல்,பொருள்,செய்யு.நச்சர் உரை, கழக வெளியீடு, ப.321
23. தொல்,பொருள்,பேரா, இளம், உரை, கழக வெளியீடு, ப.233
24. தொல்,பொருள், நூற்: 108: -2.
25. தொல்,பொருள், நூற்: 237: -2.
26. தொல்,பொருள்,மெய், நூற்: 260: -2.

27. தொல்,பொருள், நூற்: 458: -1.

28. தொல்,பொருள், நூற்: 467: -6.

29. தொல்,பொருள், நூற்: 492: -4, 554: -1.

30. தொல்,பொருள், நூற்: 490.

31. மேலது, நூற்: 491.

32. மேலது, நூற்: 492.

33. தொல்,பொருள், நூற்: 310: -8.

34. மேலது, நூற்: 310: -5.

35. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றினை ஓர் ஆய்வு, பக்.291-319.

36. தொல்,பொருள், நூற்: 106, 107, 108, 109, 110, 111, 116, 117, 118, 121.

தொல்,பொருள், நூற்: 145, 146, 147, 157, 159, 171, 172, 178.

தொல்,பொருள், நூற்: 194, 195, 199, 200, 221, 223, 229, 230, 231, 232.

தொல்,பொருள், நூற்: 259, 260, 261, 262, 266, 267, 268, 270.

தொல்,பொருள், நூற்: 292, 302.

தொல்,பொருள், நூற்: 497.

37. தொல்,பொருள், நூற்: 105, 109, 110, 111.

தொல்,பொருள், நூற்: 145.

38. தொல்,பொருள், நூற்: 105.

39. தொல்,பொருள், இளம், உரை, கழக வெளியீடு, நூற்: ப.186.

40. சி.கணேசையர்(உ.கு.ஆ)தொல்,பொருள்,களவு,நச்சி,உரை,நூற்: 107, ப.394.

41. தொல்,பொருள், இளம், உரை, கழக வெளியீடு, நூற்: 105: -8, ப.186.

42. சி.கணேசையர்(உ.கு.ஆ)தொல்,பொருள்,களவு,நச்சி,உரை,நூற்:107-8,ப.394.

43. தொல்,பொருள், இளம், உரை, கழக வெளியீடு, நூற்: 105: -9, ப.186.

44. சி.கணேசையர்(உ.கு.ஆ)தொல்,பொருள்,களவு,நச்சி,உரை,நூற்:107-9,ப.394.

45. நம்பி நூற்: 149, (உரை).

46. க.வெள்ளைவாரணன், தமிழ் இலக்கிய வரலாறு தொல்காப்பியம் இரண்டாம் பதிப்பு, ப.124.

47. க.இரத்தினம், சங்க அகப்பாடல்களில் கூற்று, பக்.31-32. (வெளியிடப்படாத முனைவர் பட்ட ஆய்வேடு)

48. குறுந்: 296.

49. தொல்,பொருள், நூற்: 105: - 2.

50. குறுந்: 3.

51. தொல்,பொருள், நூற்: 105: -11-12.

52. கா.சுப்பிரமணிய பிள்ளை, பழந்தமிழ் நாகரிகம் அல்லது தொல்காப்பிய பொருளதிகார கருத்து, பக்.105-109.

53. S. Illakuvanar/ Tholkappiyam (in English) with critical studies, P.179.

54. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சி, உரை, நூற்:107 ப.394-95.

55. மேலது, நூற்: 111: -24.

56. மேலது, நூற்: 111: -24. உரை, பக. 428-429.

57. மேலது, நூற்: 107: 13-15.

58. மேலது, நூற்: 107: 13-15, உரை ப.402.

59. மேலது, நூற்: 111: -15.

60. மேலது, நூற்: 111: -15 உரை, ப.424.

61. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.47.

62. மேலது.

63. தொல்,பொருள், நூற்: 90.

64. மேலது, நூற்: 91.

65. மேலது, நூற்: 92.

66. தொல்,பொருள், நூற்: 257: - 1.

67. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, நூற்: 109: 1 -9, ப.193.

68. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:109, ப.405.

69. மேலது.

70. தொல்,பொருள், நூற்: 106: - 3.

71. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, நூற்: 107, ப.191,

72. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:109, ப.405.

73. க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், ப: 120.

74. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.54-55.

75. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, நூற்: 193

76. மேலது.

77. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:408.

78. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 193.

79. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:409.

80. மேலது.

81. மேலது.

82. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 193.

83. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:409.

84. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 193.

85. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:410.

86. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 193.

87. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:410-411.

88. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 193.

89. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:411.

90. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 208.

91. மேலது, ப.195.

92. மேலது.

93. மேலது.

94. மேலது, ப.194.

95. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:412.

96. மேலது.

97. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 194.

98. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:412.

99. க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், ப: 154.

100. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.54-55.

101. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 194.

102. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:413.

103. க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், ப: 154.

104. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.58.

105. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 194.

106. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:413.

107. மேலது.

108. மேலது, ப.414.

109. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 194.

110. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:414.

111. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 194.

112. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:415.

113. க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், ப: 154-155.

114. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.58.

115. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 194.

116. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:416.

117. க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், ப: 155.

118. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.58.

119. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 194.

120. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:416.

121. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.59.

122. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 195.

123. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:417.

124. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 195.

125. மேலது.

126. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:418.

127. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 195.

128. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:420.

129. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 195.

130. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:420-421.

131. க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், ப: 155.

132. பின்னிணைப்பு III பா. எண். 1, 2.

133. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:424.

134. பின்னிணைப்பு III பா. எண். 3, 4.

135. மேலது.

136. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 201.

137. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:426-427.

138. க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், பக்: 144-145.

139. பின்னிணைப்பு III பா. எண். 5.

140. இறையனார் அகப்பொருள் ஆ-9, உரை.

141. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 201.

142. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:427.

143. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 202.

144. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:429.

145. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.63.

146. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 205.
147. மேலது, ப.203.
148. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:430.
149. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, ப.61.
150. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 202.
151. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:430.
152. க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், ப: 62.
153. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 209.
154. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:440.
155. மேலது.
156. பின்னிணைப்பு, III பா. எண். 8.
157, மேலது, பா. எண். 9.
158. மேலது, பா. எண். 10.
159. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 210.
160. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:440.
161. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 210.
162. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:440.
163. மேலது, ப, 446.
164. பின்னிணைப்பு, III பா. எண். 11.
165. மேலது, பா. எண். 12.
166. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 210.
சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:432-433.

க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், ப:155.

நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.63.

167. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 208.

168. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 130.

169. நக்கீரர் (உ.ஆ) இறையனார் களவியல் உரைவளம், ப.130.

170. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப.246.

171. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:408-440.

172. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 206.

173. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:434.

174. மேலது.

175. பின்னிணைப்பு, III பா. எண். 6.

176. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:434.

177. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 206.

178. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:434.

179. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.60.

180. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 206.

181. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:435.

182. மேலது, ப.489.

183. பின்னிணைப்பு, III பா. எண். 7.

184. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 206.

185. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:436.

186. அகநா. 72: -19.

187. மேலது, 72: -20.

188. மேலது, 72: -19.

189. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 206.

190. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:437.

191. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 206.

192. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:438.

193. தொல், பொருள், அகத், நூற்: 39, 42, 43, 44.

194. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 56.

195. மு. அருணாச்சலம் பிள்ளை, (ஆய்வுரை) தொல், பொருள், அகத், உரைவளம், ப,492.

196. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்:400-401.

197. மேலது, ப,115-116, அகநா: 95, குறுந்: 149, நற்: 149, ஐங்: 385, 397, 203, 312.

198. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப. 57, கலி: 23, நற்: 149, ஐங்: 384, 385.

199. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, நூற்: 197, ப. 331.

200. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, நூற்: 199, ப.696.

201. க. வெள்ளைவாரணன், தமிழ் இலக்கிய வரலாறு தொல்காப்பியம், இரண்டாம் பகுதி, ப: 142.

202. இராம. பெரியகருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய வகைகள், ப.118.

203. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, பக்.167.

204. சி.கணேசையர்(உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, பக்.690-91.

205. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப.423.

206. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, ப.423.

207. தொல், பொருள், இளம் உரை, கழக வெளியீடு, ப.201.

208. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, ப.425.

209. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம், தெளிவுரை, ப.415.

210. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல், பொருள், களவு, நச்சிஉரை, ப.426.

211. க. வெள்ளைவாரணன், தொல், பொருள், களவு, உரைவளம், ப.144.

களவு நெறி கற்பாக முடியும் போது அது நன்னெறி என்று பெயர்பெறும். மறை ஒழுக்கம் செய்யும் காதலர்கள் ஊரில் இருப்பினும், உடன்போக்கு முறையில் அகன்று போயினும் வரைவு எனும் அமைப்பிற்குள் உட்பட்டு, கணவன் மனைவியாக வாழ்தல் வேண்டும். இதனைத்தான் பெற்றோரும் சமுதாயத்தினரும் வரவேற்கும். களவின் முடிவு கற்பு என்பது அகத்திணை வலியுறுத்தும் தலையாய அறமாகும். இத்தகைய கற்பு வாழ்க்கையில் தலைவி நிகழ்த்தும் கூற்று பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுவதனை ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

**கற்பு - விளக்கம்**

தொல்காப்பியத்தில் கற்பு என்று வரும் இடங்களை இல்லறம் என்ற பொருளையே குறிக்கும். கற்பு என்பதற்கு இளம்பூரணர் "மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மன நிகழ்ச்சி"(1) என்றும் நச்சினார்க்கினியர் "தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதொரு மேற்கோள்"(2) எனவும் கூறுவர்.

தொல்காப்பியர் குறிப்பிடும் கற்புக் கூறுகள் இரண்டு; ஒன்று களவில் ஈடுபட்டு அன்புரிமை கொண்ட தலைமகன் தன்மீது காதல் கொண்ட தலைவியைத் தமர் கொடுப்பப் பலரறிய மணந்து வாழும் மனை வாழ்க்கை கற்பெனப்படும். இதனை,

> 'கற்பெனப்படுவது கரணமொடு புணரக்
> கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
> கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே'
>
> (தொல்.பொருள்.கற்பு: 1)

என்று தொல்காப்பியர் கூறுவர். மற்றொன்று,

> 'கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
> புணர்ந்துடன் போகிய காலையான'
>
> (தொல்.பொருள்.கற்பு: 2)

என்பதாகும். ஈண்டு உடன் போகிய இடம், கொடுப்போர் இல்லா இடம், அவ்விடத்தில் திருமணத்தை மேற்கொள்ளின் கரணம் எனும் சடங்கினை

விடாது மேற்கொள்ள வேண்டும் என்பது நூற்பாவின் தெளிபொருள். “கற்பிற்குக் கரண நிகழ்ச்சி ஒரு தலையாயிற்று”(3) என்பர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்.

### கரணம் எதற்கு?

அன்புடைய காதலர்கள் வாழ்வில் கரணம் எதற்கு? எனும் வினா எழின் அதற்கு விடையாகத் தொல்காப்பியர்,

'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்

ஐயர் யாத்தனர் கரணம் என்ப'

(தொல்.பொருள்.கற்பு: 4)

என்பர். பொய்யும் வழுவும் காதலர்களிடையே தோன்றுவனவாகக் கருதுவது பெரும் பிழையாகும். அக இலக்கியத்தின் மதிப்பினைக் கெட்டொழிப்பதாகும். அவ்வாறெனில் பொய்யும், வழுவும் என்பது எதனைக் குறிக்கின்றதென்றால், “களவின் வழி வந்த காதலர்க்கும் களவின் வழி வராக் காதலர்க்கும் திருமணக் காலத்தில் செய்யப் பெறும் சடங்காகும் என்பது வ.சுப.மாணிக்கனாரின்”(4) கருத்தாகும். பொய்யும், வழுவும் இல்லாத ஆண் பெண்கட்கே திருமணத்தன்று சடங்கு நிகழ்கின்றது என்று மேலும் இக்கருத்தினை அரண் செய்வர். அதனானின் தான் தொல்காப்பியர்,

'வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்பது

ஆயிரண்டு என்ப வரைதல் ஆறே'

(தொல்.பொருள்.களவு: 50)

எனும் விதி செய்தார். “பண்டைக் காலத்தில் மணமான பெண்ணுக்கும் மணமாகாத பெண்ணுக்கும் தோற்றத்தில் யாதொரு வேறுபாடும் இல்லை. இஃது ஒரு ஏமாற்ற நிலை. இந்நிலை தான் தொல்காப்பியர் குறிப்பிடும் பொய் ஆகும். புற வேறுபாடின்மை மயக்கம் செய்தலின் பொய் எனப்பட்டது. இத்தகைய மயக்கத்தால் மண அடையாளம் இல்லாத நங்கை மீது உள்ளம் போக்கும் இளைஞன் மேற்கொள்ளும் காதல் முயற்சிகளே 'வழு' ஆகும். தொல்காப்பியர் குறிப்பிடும் பொய்யும் வழுவும் இதுவே ஆகும்”(5) என்பர்.

## கற்பின் பாகுபாடு

தலைவனும் தலைவியும் பலர் அறியத் திருமணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்துதல் கற்பு நெறியாகும். இக்கற்பு நெறியினைத் தொல்காப்பியர்,

'மறை வெளிப்படுதலும் தமரிற் பெறுதலும்
இவை முதலாகிய இயல் நெறி பிழையாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே'

(தொல்.பொருள்.செய்யு: )

எனக் கூறுவர். மண வினை நிறைவேறிய பின்னர் மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு ஆகிய ஐந்து கூறுகளும் அடங்கிய பகுதி கற்பென வழங்கப் பெறுவதாகும்.

## மலிவு

மலிவு என்பது மகிழ்ச்சியாகும். இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலானவற்றில் மகிழ்தல் என்பது "அதானின் களவு முடிந்து மணந்து கொண்ட காதலர் மனக்குறை தீரக் கூடிக் கலந்து இன்புற்று வாழ்தல் ஆகும்."[6] இந்நிலையில் தலைவனும் தலைவியும் களவில் நிகழ்ந்தவற்றை ஒருவர் மற்றவரொடு கூறி இன்புறுவர். மலிவில் தலைவி கூற்றுகளாகத் தொல்காப்பியர் சிலவிடங்களைச் சுட்டுவர்.

## அவனறி வாற்ற அறியும் ஆகலின் ஏற்றற் கண்ணும்

தலைவனது இயல்புகளைத் தலைவி மிகுதியும் அறிவாளாதலின் தலைவனை உயர்த்திக் கூறும் நிலையில், தலைவிக்குக் கூற்று நிகழ்வதனை இளம்பூரணர்,

"தலைவனது நினைவைத் தலைவி மிக அறியுமாகலின்
அவனை உயர்த்திக் கூறுதற் கண்ணும்"[7]

எனக் கூறுவர். ஆயின் நச்சினார்க்கினியர் மேற்குறித்த கூற்றோடு,

"நிறுத்தற் கண்ணும்"[8]

"உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில்

பெருமையில் திரியா அன்பின் கண்ணும்"[9]

என்பதைச் சேர்த்து ஒரு கூற்றாக எண்ணுவர். இளம்பூரணர் தனித்தனிக் கூற்றாகக் கருதுவர். இருப்பின் நச்சினார்க்கினியர் இக்கூற்றிற்கு, "வேதத்தையும் தரும நூலையும் தலைவன் அறிந்த அறிவைத் தலைவி மிக அறியுமாதலின், அந்தணர் முதலிய மூவருந் தத்தமக்குரிய வேள்வி செய்யுங்கால் தம் மனைவியர் பலருள்ளுந் தமக்கு ஒத்தாளை வேள்விக் கண் உரிமை வகையான் ஏனை மகளிரின் உயர்த்தல் செய்யுமிடத்தும் அவர் குலத்திற்கேற்ற உரிமைகளைக் கொடுத்த தலைவனிடத்து, தத்தங் குலத்திற்கேற்ற பெருமையினின்றும் நீங்காது அன்பு செய்து ஒழுகுதற் கண்ணும்"[10] எனக்கூறி "அந்தணர்க்கு நால்வரும், அரசர்க்கு மூவரும், வணிகர்க்கு இருவருந் தலைவியராகிய வழித் தங்குலத்திற் கொண்டவரே வேள்விக்கு உரியர். ஏனையோர் வேள்விக்கு உரியரல்லார் என்பதூஉம் அவர்க்குத் தங்குலங்கட்கு ஏற்ற வகையின் உரிமை கொடுப்பரென்பதுஉம் அவர்களும் இது கருமமே செய்தானென்று அன்பில் திரியார் என்பதுஉம் கூறியவாறு"[11] என்பர்.

இருப்பின் "மனைக்கிழத்தியாகிய தலைவியொருத்தியின் கூற்று வகையினை விரித்துரைக்கும் இந்நூற்பாவிற்கு அந்தணர்க்கு நால்வர், அரசர்க்கு மூவர், வணிகர்க்கு இருவர் என்ற முறையில் வேள்விக்குரியராக மனைக்கிழத்தியார் பலர் உளர் எனக் கொண்டு நச்சினார்க்கினியர் கூறும் பொருள் தொல்காப்பியனார் கருத்துக்கு ஒத்ததன்று என உணர்தல் வேண்டும்"[12] என்பர் வெள்ளைவாரணர்.

இலக்கியச் சான்றாக இளம்பூரணர் நற்றிணையின் முதற்பாடலைக் குறிப்பர். அதுயாதெனின்,

"தலைவி தலைவனை, நிலைத்த சொல்லை உடையவன்; நீண்ட நாள் இனிமை இருக்கச் செய்பவன்; என் தோளைப் பிரிய அறியாதவன். மற்றும் தாமரையின் தாதினை வண்டு ஊதி மலைமேல் உள்ள சந்தன மரத்தில் தேனைச் சேர்த்து வைக்கும் அத்தேன் போல் உயர்ந்தோன் நட்பு உறுதியாக உயர்வுடையது. மேலும், நீர் இல்லாமல் உலகம் வாழ முடியாது. அதுபோல அவர் இல்லாமல் நாம் வாழ முடியாது. அதனால் அவர் நம்மை விரும்பி, நம் நெற்றியில் பசலை படர்தலைக்

கண்டு அஞ்சுவர். ஆதலின் அவர் என்னைப் பிரிந்து சிறுமை அடைய மாட்டார்'' என்பதை எடுத்துக்காட்டுவர்.

நச்சினார்க்கினியரும் இப்பாடலைக் காட்டி "தாமரைத் தாதும் சந்தனத் தாதும் உயர்வு தாழ்வு கருதி நின்றன"[(13)] எனும் கருத்துரைப்பர்.

"தாமரைத் தாதையும் ஊதிச் சந்தனத் தாதையும் ஊதி வைத்த தேன் போலப் புரைய என்றதனான் ஏற்றற்கண் தலைவி கூறினாள் பிரிவறியலரென்றும் அன்னதோர் குணக்குறையிலர் என்றதாம். பிரிவுணர்ந்து புலந்துரைப்பின் நாணழிவோம்"[(14)] என மொழிவர். நிறுத்தற் கண்ணும் என்பதற்கு,

'தலைவி தலைவனுடன் கொண்ட நட்பானது
பூமியைக் காட்டிலும் அகலமானது, வானைக்
காட்டிலும் உயர்ந்தது, கடலைக் காட்டிலும் ஆழமுடையது'

எனும் குறுந்தொகைப் (பா.எண்.3) பாடலைக் காட்டுவர். ஆயின் இளம்பூரணர் இப்பாடலை உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில் பெருமையில் திரியா அன்பின் கண்ணும் எனும் கூற்றிற்குக் காட்டுவர்.

**உரிமை கொடுத்த கிழவோன் பாங்கின்**
**பெருமையில் திரியா அன்பின் கண்ணும்**

அருட் பண்பினைத் தோற்றுவிக்கும் அன்பினை உள்ளடக்கிய சொற்களைப் பணிதற் பொருள் தோன்றச் சொல்லுதல் வேண்டும் என்பதை,

"அருண்முந் துறுத்த அன்பு பொதி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோள் குறித்தே'

(தொல்.பொருள்.கற்பு: 20)

எனும் நூற்பா வழியாகவும் குறிப்பர்.

இல்லறத் தலைமை என்னும் உரிமை கொடுத்த தலைவன் மாட்டு இதனை,

"தலைவிக்கு உரிமையைக் கொடுத்த கிழவோன்
மாட்டு, பெருமையில் திரியா அன்பின் கண்ணும்"[(15)]

என்பர் இளம்பூரணர். எடுத்துக்காட்டுச் செய்யுளாக 'நிலத்தினும் பெரிதே' எனும் குறுந்தொகைப் பாடலைக் காட்டுவர்.

### புலவி, ஊடல், உணர்வு

புலவி, ஊடல், உணர்வு ஆகிய மூன்றும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையன; பிரிக்க முடியாதன இவற்றுள் "புலவி அண்மைக் காலத்து ஊடல் அதனினும் மிக்கது"(16) என்பர் இளம்பூரணர். "உணர்தல் என்பது ஊடலை அளவறிந்து நீக்குதல்"(17) எனக் குறிப்பர் பரிமேலழகர். புலவி, ஊடல், உணர்வு ஆகிய மூன்றையும் இணைத்த தலைவி கூற்றாகத் தொல்காப்பியர் சிலவிடங்களைச் சுட்டுவர்.

**கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி**
**நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ**
**நளியின் நீக்கிய இளிவரு நிலையும்**

புதல்வன் பிறந்த நிலையில் நிகழ்த்தப் பெறும் விரும்பத்தக்க நெய்யாடல் விழாவிற்குக் கலந்து கொள்ள விரும்பி வந்த தலைவனை, நெஞ்சு புண்படுமாறு செய்து தன்னொடு கூடுதலை விலக்கிய தாழ்வுற்ற நிலையிலும் தலைவிபால் கூற்று நிகழும். இதனை இளம்பூரணர்,

"புதல்வன் தோன்றிய நெய்யணி நயந்த
கிழவனை நெஞ்சு புண்ணுறுமாறு பண்ணிச்
செறிவு நீக்கிய இளிவந்த நிலையின் கண்ணும்"(18)

என மொழிவர். ஆயின் நச்சினார்க்கினியர்,

"யானைக் கன்று போலும் புதல்வன் பிறந்தலான்
உளதாகிய விருப்பத்தையுடைய நெய்யணிக்கு
விரும்பிய தலைவனை நெஞ்சை வருத்தித் தன்னைச்
செறிதலினின்றும் நீக்கிய இளிவந்த நிலைமைக்
கண்ணும்"(19)

எனக் கூறுவர். இவ்விடம் கயந்தலை என்பதற்கு யானைக் கன்று என ஆசிரியன் உரைப்பதை க.வெள்ளைவாரணர் மறுத்து "மெல்லிய

தலையினையுடைய இளங்குழந்தை"[20] எனப் பொருள் உரைப்பது பொருத்தமாய் அமைந்துளது.

இக்கூற்றிற்கு, இலக்கியச் சான்றாக இளம்பூரணர் ஐங்குறுநூற்றில் இருந்து 65-ஆம் செய்யுளினைக் காட்டுவர். அதில்,

'தலைவி இல்லறஞ் செய்தற்கு இயற்றிய இல்லத்தில் பரத்தையர் குழுமிய அவர் சுற்றத்தாரை ஓம்பி நிற்பர். ஆதலின் தலைவன் தன்னை அவமதித்துப் பரத்தையர்க்கு உரிமை வழங்கியுள்ளான். மற்றும் தான் மகப் பெற்றமையே என்னுங் கருத்தால் புதல்வனை ஈன்ற எம்மேனி நின் மார்பு சிதைப்பது என்று கூறித் தலைவனை விலக்கினாள்' என்பதைக் கூறுவர். இதனையே நச்சினார்க்கினியரும் உரைப்பர்.

**புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு**
**அகன்ற கிழவனைப் புலம்பு நனி காட்டி**
**இயன்ற நெஞ்சத் தலைப்ப பெயர் தருக்கி**
**எதிர்ப்பெய்து மறுத்த ஈரத்து (வீரத்து) மருங்கினும்**

இதனை விரும்பிய உள்ளத்தோடு புதுப்பரத்தையர் நலம் நாடிச் சென்று வந்த தலைவனிடம், தனது தனிமைத் துன்பத்தைக் காட்டி அவன்பாற் செல்ல முயன்ற நெஞ்சைச் செல்லவிடாது ஊடல் மிகுதியால் மீட்டு அதனைத் தன்பால் அருகப் பண்ணி, அவன் நாடிச் சென்ற பரத்தையைத் தான் கூறும் சொற்களில் எதிர்ப் பெய்து கொண்டு. அவன் கருதி வந்த புணர்ச்சி மறுப்பது போல மறுத்துப் பின்பு அன்புடைமையால் தலைவனை ஏற்றுக் கொண்ட நிலையில் பரத்தையர், தலைவனைப் பற்றித் தலைவியிடம் வந்து கூறிய துயரத்தினைத் தலைவி தலைவனோடு கூடி மகிழும் புணர்ச்சியின் இறுதியினும், தலைவனொடு தானுற்ற புலவிக் காலத்தும் கூறுவதனை,

'தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்
மெய்ம்மையாக அவர்வயின் உணர்ந்தும்

தலைத்தாட் கழறல் தம்எதிர் பொழுதின்றே
மலிதலும் ஊடலும் அவையலங் கடையே'.

(தொல்.பொருள்.பொருளி: 40)

என்பதன் வாயிலாக உரைப்பர்.

இளம்பூரணர் இக்கூற்றிற்கு மேற்குறித்த கருத்தைக் கூறுவர். ஆயின் நச்சினார்க்கினியர்,

"புதல்வன் விளையாட்டை விரும்பின உள்ளத்தோடு புதுவது புணர்ந்த பரத்தையர் தன்மாட்டு மன நெகிழ்ந்த மென்மையின் பொருட்டு அவர்க்கு அருள் செய்யப் பிரிந்து வந்தோனை, தனது தனிமை மிகவும் அறிவித்து அவன் மேற் சென்ற நெஞ்சினைச் செல்லாமல் அவனிடத்தினின்றும் மீட்டு அருகப் பண்ணி பிறருள் ஒருத்தியைக் காணாளாயினுங் கண்டாள் போலத் தன் முன்னர் பெய்து கொண்டு வாயின் மறுத்ததனால் தோற்றிய நயனுடைமைக் கண்ணும்"(21) எனக் கூறுவர்.

ஈண்டு நச்சினார்க்கினியர், இளம்பூரணர் உரையை உள்வாங்கிக் கொண்டு "தலைவன் புதல்வன் விளையாட்டை விரும்பிய நிலையில் பரத்தையரை விட்டு அகன்றான்"(22) என்றும், இளம்பூரணர் கூறிய "காதலியை எதிர்ப்பெய்தல் என்பதற்கு இணையாக பிறள் ஒருத்தியைக் காணாளாயினும் கண்டாள்"(23) என நச்சினார்க்கினியர் மாற்றம் செய்வர்.

மேற்கோளாக, இளம்பூரணர் இக்கூற்றிற்குத் தோழி கூற்றில் அமைந்த அகநானூற்றுப் பாடலைக் காட்டுவர். அதானின்,

'தலைவ, நீ பரத்தையின் கையை நின் கையால் பிணித்த பிணிப்பை விட்டனை; அதனால் அவள் சினந்தாள். ஊர் முழுவதும் உன்னைத் தேடித் திரிகின்றாள். உன் காதலியான பரத்தை எம்மைப் போல் மகனைப் பெற்று, இல்லத்தில் தனியே கிடப்பதற்குக்

கடமையுள்ளவளா? இல்லை; அதனால் நீ அவளிடமே செல்வாயாக' என்பதனைக் குறிப்பர். இச்செய்யுளினை இளம்பூரணர் தலைவி கூற்றாகக் கொண்டார் போலும்.

நச்சினார்க்கினியர் மேற்குறித்த செய்யுளினை எடுத்துக்காட்டி மேலும் எதிர்ப்பெய்து மறுத்த ஈரமெனவே 'எதிர்ப்பெய்யாது மறுத்த ஈரமுங்கொள்க' எனக் கூறித் தலைவி கூற்றில் அமைந்த அகநானூற்றுச் (26-ஆம்) செய்யுளினைக் காட்டுவர். அது யாதெனின்,

தோழி தலைவியை நோக்கி உன் ஊடல் தீர்ந்த காரணம் யாது? என வினவ, தலைவி தலைவரைப் புலத்தல் கூடுமோ; அவர் எம் கொங்கைகளில் மயங்கிப் பாராட்டிய பருவமும் உண்டு; அப்போது புலத்தல் கூடும். இப்போது யாம் அவரைத் தழுவிக் கொள்ள எண்ணினோம். அவரோ தம் மார்பில் பால்படும் என என்னைத் தழுவிக் கொள்ள அஞ்சினார். அதைக் கண்ட நான் என் மகனைப் பார்த்த வண்ணம் தலைவர் கேட்ப, நீவிர் பரத்தையர்க்குப் பொருத்தமானவர். யாம் இம்மகனுக்குத் தாயாவதற்குப் பொருந்துவோம் என்றேன். அதைக் கேட்ட அவர் யாமும் அவனிடம் அன்புடையோம் எனச் சொல்லிப் பின்பக்கமாக வந்து என்னைத் தழுவிக் கொண்டார். ஆதலால் இத்தகையவருடன் ஊடல் கொள்ள முடியுமோ என்று கூறினாள் எனும் செய்தியினை எடுத்துக் கூறுவர்.

இருப்பின் 'வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇ' என்னும் கூற்றிற்கு "ஆற்றாமை வாயிலாகச் சென்றுழித் தடையின்றிக் கூறியதற்கு மேற்குறித்த செய்யுளினைக் காட்டுவது"(24) நோக்கத்தக்கது.

**தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி**
**எங்கையர்க்கு உரையென இரத்தற் கண்ணும்**

பரத்தையர்பால் தங்கிய புறத்தொழுக்கமுடைய தலைவனை வணங்கி, நினது வேட்கையை என்பால் உரையாது என் தங்கையராய

பரத்தையர்க்கு உரைப்பாயாக என இரந்து தலைவி கூறும் நிலையினை இளம்பூரணர்,

> "பிறள் மாட்டுத் தங்கிய ஒழுக்கத்துக் கிழவனைத்
> தாழ்ந்து எங்கையர்க்கு உரையென
> வேண்டிக் கோடற் கண்ணும்"[25] என்பர்.

நச்சினார்க்கினியர், "பரத்தையர் மாட்டுத் தங்கிய செவ்வியை மறையாத ஒழுக்கத்தோடே வந்த தலைவனை நீ கூறுகின்ற பணிந்த மொழிகளை எங்கையர்க்கு வணங்கிக் கூறென இரந்து கோடற் கண்ணும்"[26] என உரைப்பர்.

இதற்கு இலக்கியச் சான்றாக இளம்பூரணர் இரண்டு செய்யுளினைக் காட்டுவர். ஒன்று, கலித்தொகை 73-ஆம் செய்யுள். இதனுள், 'நொந்து கொள்ளத் தக்கவள் நீ, என்று உன்னை நொந்து பழியாதவர் இல்லாததனாற் போலும் துணிவுடன் வந்து தீது இலேன் யான் என்று கூறித்தேறுதல் கூற வருகின்றாய். ஆயின் தொடி கழலும் இளையவரான பரத்தையின் முலை இடையிலே இதழ்களெல்லாம் உதிர்ந்து போகத் தன் இதழ் வனப்புக் கெட்டுத் தோன்றும் உன் கண்ணி உன்னைக் காட்டிக் கொடுத்து விடுகின்றதே, மேலும், சுழலும் கண்ணியரான பரத்தையரின் தலைமாலை கலைந்துவிட்ட நின் அழகிய மார்பிலே பாடழிந்து தோன்றும் சந்தனம் உன்னைக் காட்டிக் கொடுத்து விடுகின்றதே; நிரைதொடியுடைய பரத்தையொடு நீ ஆடிய துணங்கைக் கூத்தினால் கரை கிழிந்து போன உன் ஆடை உன்னைக் காட்டிக் கொடுத்து விடுகிறதே; வெள்ளம் நிறைந்த கடல், ஆற்று நீரால் நிறைவதில்லை, அதனால் நான் சொல்வதனைக் கேள்; உன்னைப் பெறாத பரத்தையர் வருந்துவர். அவர்களை வாடவிடாது, தேற்றி மகிழச் செய்ய நீ செல்வாயாக; என்னைப் பற்றிக் கவலைப்படாதே; உன் பொய்மைக்கு மயங்கி எப்பொழுதும் உனக்குத் தோற்று இசைந்துவிடக் கூடியவள் தானே யான்' என்பள் என்பதனை எடுத்து மொழிவர். நச்சினார்க்கினியரும் மேற் பாடலை எடுத்துக்காட்டுவர் "கொடுமை யொழுக்கம் கோடல் வேண்டி"[27] எனத் தொடங்கும் கூற்றிற்கு நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டும் ஐங்குறுநூறு 46-ஆம் செய்யுள் இளம்பூரணர் இக்கூற்றிற்கு எடுத்துக்காட்டும் மற்றொரு செய்யுளாகும்.

ஆயின் இக்கூற்றிற்கு இளம்பூரணர் குறிப்பிட்ட கலித்தொகைப் பாடலை இவரும் குறிப்பர்.

### செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும்

தலைவன் முன்னர், தலைவி தன்னைப் புகழ்ந்துரைக்கும் கூற்றும் எவ்வகையானும் தலைவிக்கு இல்லையாதலை,

'தற்புகழ் கிளவி கிழவன் முற்கிளத்தல்
எத்திறத்தானும் கிழத்திக்கு இல்லை
முற்பட வகுத்த இரண்டலங்கடையே'

(தொல்.பொருள்.கற்பு: 39)

என்பர். ஈண்டு முற்பட வகுத்த இரண்டலங்கடையே என்பது தலைவி உயர்வும், தலைவன் தாழ்வும், புலவி நீட்டித்தலாகிய ஊடற் காலத்தும் அவ்வூடல் துனியாய் முதிர்ந்த காலத்தும் உரியதாகும். இதனை,

'மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலை புலவியுள் உரிய'

(தொல்.பொருள்.பொருளி: 32)

எனக் கூறுவர். ஆயின் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் முற்பட வகுத்த இரண்டலங்கடையே என்பதற்கு அகத்திணையில் தலைவன் கூற்றில் அமைந்த,

'பரத்தையின் அகற்சியின் பிரிந்தோள் குறுகி
இரத்தலும் தெளித்தலும் என இருவகையொடு'

(தொல்.பொருள்.அகத்: 44. 22-23)

என்பதில் இரத்தலும், தெளித்தலும் என்பதனைக் குறிப்பர்.

தலைவியைப் பணிந்து நின்ற தலைவன் இனிச் செல்லான் என்பதை இடத்தாலும் காலத்தாலும் உணர்ந்த தலைவி, ஊடல் உள்ளத்தால் கூடப் பெறாது, தலைவனது உள்ளக் குறிப்பினை அறிந்து கொள்ளுதலை விரும்பிய நிலையில் அவனது நெஞ்சம் அன்பினால் ஊடல் நீக்கியவிடத்தும், உறவின்மையைப் புலப்படுத்தும் சொல்லாக அப்பரத்தையர்பால் செல்க எனக் கூறுவதனை,

'அவன் குறிப்பு அறிதல் வேண்டியும் கிழவி
அகமலி ஊடல் அகற்சிக் கண்ணும்

வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே'

(தொல்.பொருள்.கற்பு: 18)

என மொழிவர். இதனை வலியுறுத்தும் இக்கூற்றிற்கு

"தலைவன் போகாத காலத்துப் போவெனக்

கூறுதலும் என்றவாறு"[28]

என இளம்பூரணரும்,

"தலைவன் செல்லான் என்பது இடமும் காலமும் பற்றி அறிந்த காலத்து ஊடல் உள்ளத்தாற் கூடப்பெறாதாள் செல்கெனக் கூறி விடுத்து ஆற்றுதற் கண்ணும்"[29]

என நச்சினார்க்கினியரும் குறிப்பர்.

மலர் போலும் கண்ணையுடைய எம் மகனைப் பல பொய்களைச் சொல்லிப் பாராட்டி அவனை விட்டுப் போகாமல் பரத்தையர் குறிக்கொண்ட நிலைமையைக் கடவாமல் எம் வீட்டின் வாயிலில் நில்லாதே; நின்றால் அவன் அணியை அழிப்பவன் ஒருவனாய் உள்ளான். ஆதலால் எம்மகனை இங்கே தந்துவிட்டு அந்தப் பரத்தையர் சேரியில் உள்ள அப்பரத்தையரிடமே செல்வாயாக எனத் தலைவி கூறும் கலித்தொகை 79-ஆம் செய்யுளை நச்சினார்க்கினியர் குறித்து மேலும், தோழி கூற்றில் அமைந்த அகநானூற்றுப் பாடலையும் சுட்டுவர். அது யாதெனின்,

'தலைவ, அயலார் நீ பரத்தை ஒருத்தியை மணந்தாய் என்பர். யாம் அதைக் கூறோம்; என் கைவளை கழன்றாலும் கழலட்டும். செல்வாய் நின்னைத் தடுப்பவர் யார் இருக்கின்றார்? எனக் கூறுவதனை எடுத்தோதுவர்.' இதனை நச்சினார்க்கினியர் தலைவி கூற்றாகக் கொண்டார் போலும்.

## காமக்கிழத்தி தன்மகத் தழீஇ
## ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்

காமக்கிழத்தி தலைவியின் மகனைத் தழுவிக் கொண்டு விளையாடும் விளையாட்டின் முடிவிலும் தலைவிபால் கூற்று நிகழும். இதனை,

"காமக்கிழத்தி தலைவி மகவைத் தழீஇ

ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்"[30]

என்று இளம்பூரணர் உரைப்பர். நச்சினார்க்கினியர்,

"மனையறத்திற்கு உரியாளாக வரைந்து கொண்ட காமக்கிழத்தி, தலைவி புதல்வன் மனைப்புறத்து விளையாடுகின்றவனைத் தழுவித் கொண்டு தான் ஏமுறுதற்குக் காரணமான விளையாட்டின் முடிவின் கண்ணும் எனக்கூறி 'ஏமுறு விளையாட்டு' என்பதற்கு அவள் எம்மைப் பாதுகாப்பீரோவென வினாய வழி, அவனும் அதற்கு உடன்பட்டான் போலக் கூறுதல்"[31] என்று கூறி இறுதி என்பதற்கு விளையாட்டு முடியுந் துணையுந், தான் மறையநின்று பின்னர்க் கூறுதல் என விளக்குவர். இவ்விடம் பின்னர்க் கூறுதலாவது, தலைவனுக்கு உளதாகும் ஒழுக்கக் குறைகளைப் பிறர் அறியாமல் காத்துப் போற்றுதல் தலைவியின் கடப்பாடு ஆதலினாலும் அவன் தனக்குப் பணித்த மொழிப்படி நடத்தல் இயல்பு ஆதலினாலும் என் மகனுக்கு நீயும் தாய் எனக் காமக்கிழத்தியை உயர்த்துதல் தலைவியின் உயர்குணச் சிறப்பாகும். இதனை,

'அவன் சோர்பு காத்தல் கடன் எனப்படுதலின்
மகன் தாய் உயர்பும் தன் உயர்பாகும்
செல்வன் பணிமொழியியல் பாடலான'

(தொல்.பொருள்.கற்பு: 33)

என இவ்விடம் கூறுவது பொருத்தமுடையது. மேற்கோள் செய்யுளாக இளம்பூரணர் இதற்கு, "தலைவ, கூர்மையான பற்களை உடையவள் நின் புதல்வனைக் கண்டு அணைத்துக் கொண்டு நின்றாள்; அதனைக் கண்ட யான் வெளிப்பட்டு வந்து பரத்தையைப் பார்த்து நீயும் இவனுக்குத் தாயே என்று சொல்ல, அவள் நாணி நின்றாள். ஆதலால் அவள் உன் மகனுக்குத் தாயாவதைக் கண்டு அவளை நான் விரும்பினேன். எனவே பொய் சொல்லாதே என்றாள் தலைவி" எனும் அகநானூறு 16-ஆம் செய்யுளை எடுத்துக் கூறுவர். நச்சினார்க்கினியரும் இளம்பூரணர் குறித்த மேற்கோளினைக் காட்டுவர்

**சிறந்த செய்கை அவ்வழித் தோன்றி**
**அறம் புரி நெஞ்சமொடு தன் வரவறியாமை**
**புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டித் தானும்**

தலைவி தன் புதல்வனோடு விளையாடிக் கொண்டிருக்க, தலைவன் தன் வரவினை அவன் அறியாமல் அவள் பின்பு நின்று அவளது ஊடலைப் போக்குமிடத்துத் தலைவிக்குக் கூற்று நிகழும் என்பதை இளம்பூரணர் "சிறந்த செய்கையினையுடைய அவ்விடத்துத் தலைவன் தோன்றி அறம்புரி நெஞ்சத்தோடு தனது வரவைத் தலைவி அறியாளாக நின்று தலைவியைப் புறஞ்செய்து அவள் மாட்டு உளதாகிய ஊடல் பெயர்த்தல் வேண்டின விடத்தும்"(32) என்று கூறி, மேலும் அவ்வழி என்பதற்குத் தலைவியும் காமக்கிழத்தியைப் போலத் தன் மகனைக் கொண்டு விளையாடிய வழியும்"(33) என உரைப்பர்.

நச்சினார்க்கினியர் இக் கூற்றினுள் "அறம்புரி நெஞ்சமொடு என்பதற்கு இணையாக அறம்புரி உள்ளமொடு"(34) என மாற்றம் செய்து "காமக்கிழத்தியது ஏமுறு விளையாட்டுப் போலாது தலைவி தன் புதல்வனைத் தழீஇ, விளையாட்டுடைய இல்லிடத்தே தலைவன் தோன்றி அவ்விளையாட்டு மகிழ்ச்சியாக மனை அறத்தினைக் காண விரும்பிய நெஞ்சோடே, தன் வரவினைத் தலைவி அறியாமல் அவள் பின்னே நிற்றலைச் செய்து தலைவியின் துனியைப் போக்குதல் வேண்டிய இடத்தும்"(35) எனக் கூறுவர். மேலும்,

"தன் வரவறியாமை என்றதற்குத் தன்னைக் கண்டால் தலைவி யுழை நின்றலர் தமக்குச் செய்யும் ஆசாரங்களையும் அவர் செய்யாமற் கைகவிழ்த்துத் தன் வரவு அறியாமை நிற்பள்"(36) என்று கூறுவர்.

இளம்பூரணர் இதற்கு மேற்கோளாக, கலித்தொகை 81-ஆம் செய்யுளைக் காட்டுவர். அவற்றில், 'பெருமையுடையவனே, பெருந்தகைமை பொருந்தியவனே; உன் மழலைச் சொல்லைக் கேட்டு இனிமை மாறாதிருக்கும் மனத்துக்கு அமுதத்தை உண்டது போல் இன்னும் இனிதாக விருந்தினர் வருவதால் செயல் ஒழியாத எம்மையும் நினைக்காது, தாயர் பெருந்தெருவில் உன்னைக் கொண்டாடிக் கற்பிக்கக்

கற்பிக்க நீ அவர்களிடம் திருத்தமாய்க் கற்ற சொற்களை யாம் கேட்கும்படிக் கூறுவாயாக என்றும் பின் தோழியை நோக்கி,

நம்மிடம் பழக்கமுடைய பாணன் நீ இப்போது எங்குள்ளாய் என்று வினவ, பரத்தையர் சொல்லில் மனம் பொருத்தி நமக்கு அயலவனாய் நின்று வாயால் கூறும் சொல் சிதைந்து ஏனாதிப் பாடித்தோம் என்று கூறிய தம்மைப் போல் நமது நோயைத் தணித்தற்குக் காரணமான மருந்து என்று நாம் பாராட்ட, மாறாமல் அத்தா அத்தா என்று அடுத்தடுத்துக் கூறுபவனை அவனது தவற்றைக் கருதாது நம் மூங்கில் போன்ற தோளிலே ஏற்றிக் கொண்டு பின்பும் இவனது வாயினின்று போகாமல் உள்ளான். இதற்குக் காரணம் என்ன, தலைவி தன் மகனைப் பார்த்து நீ கற்றவற்றுள் ஒன்றைக் கூறு என்று வினவினாள். அவள் கேட்ட அப்போதே தலைவன் தலைவிக்குப் பின்புறமாய் வந்தான். தன் வருகையைத் தலைவிக்குத் தெரிவிக்க வேண்டா எனச் சைகை செய்தான் தோழியர்க்கு. அதனால் அவன் வருகையை அறியாத தலைவி, தோழியை நோக்கி, நாம் இவன் கற்றதைச் சொல் என்றால் இவன் தந்தையையே சொல்லி வருந்துகின்றான் என்றாள். தந்தையைப் பார்த்து விட்டதால் மகன் அத்தா, அத்தா என்று அழைத்தான்.

அவ்வாறு வினவிய தலைவி தோழியின் குறிப்பாலும் மகன் அத்தா அத்தா என்று அழைத்ததாலும், தலைவன் வந்து விட்டான் என்பதை உணர்ந்து, பகைவரை எண்ணி அவரிடத்தே படைக்கலங்களைச் சேரவிடுதற்குக் கள்வர் வருதல் போன்று இங்கு எம்மை இகழ்வதற்காகவே வந்தார். நம் மீது அன்பு கொண்டு வந்தவர் அல்லர் எனத் தலைவர் கேட்பத் தோழியை நோக்கிச் சொன்னாள்' எனும் செய்தியினை எடுத்துக் காட்டுவர் இளம்பூரணர். நச்சினார்க்கினியரும் மேற்குறித்தவற்றை எடுத்துக் காட்டுவர்.

**தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால்**
**அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கினும்**

தந்தையர் பண்பினாலும் செயலினாலும் ஒப்பர் அவர் தம் மைந்தர் என உலகம் கூறுதலால் முடிவில்லாத சிறப்பினை உடைய மகவைத் தந்தையொடு சார்த்திப் பழித்துரைக்குமிடத்துத் தலைவிக்குக்

கூற்று நிகழும் என்பதை, "தந்தையரை மக்கள் ஒப்பர் என்பதனால் அந்தமில்லாத சிறப்பினையுடைய மக்களைப் பழித்தற் கண்ணும்" என இளம்பூரணரும் "விளையாடுகின்ற காலத்து மக்கள் தந்தையை ஒப்பர் என்னும் வேத விதி பற்றி முடிவில்லாத சிறப்பினையுடைய மகனைப் பழித்து வெகுளுதற் கண்ணும்"[38] என நச்சினார்க்கினியரும் கூறுவர். மற்றும்,

"மகனுக்கும் இக்குணம் உண்டு எனக் கூறலின் தலைவனைப் பழித்தல் அன்றி மகப்பழித்து என்றார்"[39] என்பர்.

இதற்கு இளம்பூரணர் "தந்தையின் குணங்களுடன் ஒப்புடைய மகனின் குணங்களையும் ஒப்பாகாத குணங்களையும் கூறி முடித்தான்" என்று கூறிச் சான்றாகக் கலித்தொகை 86-ஆம் செய்யுளில்,

'பெரும, தன்னைச் சார்ந்தவர் கெடுதலன்றித் தானே கெடுதல் அறியாத சிறந்த பொருளை விரும்பியவர்க்கும் கொடுக்கும் செயலில் தந்தையைப் போன்றவன் ஆவாய். மற்றக் குணங்களில் காதலையுடைய மென்மையான பார்வைகளையுடைய உன் தந்தை வருத்தம் மிக நோக்காது விட்டு விடுதல் போல் நீயும் அவர்கள் நோய்மிக்கு வருந்தும்படி விடுதலான பரத்தமையைக் கொள்ளாதே' எனத் தலைவி கூறுவதனை எடுத்துக் காட்டுவர்.

நச்சினார்க்கினியரும் மேற்குறித்த செய்யுளினை எடுத்துக் காட்டி அச்செய்யுளின் இறுதி அடிகளான,

"தந்தை வியல் மார்பில் பாய்ந்தான் அறன் இல்லா
அன்பிலி பெற்ற மகன்"[40]

என்பதனை எடுத்தோதி இது மகன் தன்திறத்து அன்பிலன் என நெருங்கிக் கூறியதையும் சுட்டுவர்.

### கொடியோர் கொடுமை சுடும் என ஒடியாது
### நல்லிசை நயந்தோர் சொல்லோடு தொகைஇப்
### பகுதியின் நீங்கிய தகுதிக் கண்ணும்

கொடுமை உடையவரின் கொடுந்தன்மை அவரையே பின்னர்ச் சுடும் எனும் பழமொழியை உள்ளத்தில் கொண்டு, தன் துன்பத்தினை

எண்ணித் தளராது, தலைவரது நற்புகழை விரும்பியவர்களோடு சொல்லால் பொருந்தித் தலைவனுடன் வேறுபட்டுப் பிணங்குதலினின்றும் நீங்கிய நிலையில், தலைவி உரையாடுவாள். இதனை,

"கொடியாரது கொடுமை சுடாநின்றதெனப்
புணர்ச்சியை ஒடியாது புகழை விரும்பினோர்
சொல்லோடே ஒருப்பட்டு வேறுபடுதலின்
நீங்கிய தகுதிக் கண்ணும் என்றவாறு"[41] என்பர். மேலும்,

அக்காலத்துத் தக்கறிதல் புகழை விரும்பினோர் சொல்லும் சொல்லாவது காமம் விரும்பும் பரத்தையரைப் போலாது அறத்தை விரும்புதல்"[42] என்பர் இளம்பூரணர். ஆயின் நச்சினார்க்கினியர்,

"கொடியோரென்று பாணர், கூத்தர், விறலியர், அந்தணர் முதலியோரைக் கொடியோராய்த் தலைவன் புகழைக் கூறுதற்கு விரும்பினோர் பரத்தையர்க்கு வாயிலாய் வந்து கூறிய சொல்லோடே தானும் அவரிடத்தே சேர்ந்து, காவற் பாங்கிற் பக்கமும் ஆங்கோற் பக்கமுமாகிய பகுதிய காத்தலின்று நீங்கிய பரத்தையரைக் கூடிய கொடுமை நெஞ்சைச் சுடுமென்று கூறி அவன் தவற்றைக் கூறுதலைத் தவிராமற் கூறுதற்குத் தக்க தகுதியிடத்தும்"[43] என்பர்.

இலக்கியச் சான்றாக இளம்பூரணர் இதற்குக் கலித்தொகை 89-ஆம் செய்யுளுள் அமைந்த 'நெஞ்சே இவனைப் பொய் சொல்ல விடேன் என்று மாறுபட்டுச் சினம் கொண்டால், தப்பினேன் என்று என் அடிகளில் வீழ்ந்து வணங்குவான். ஆதலின் நம்மை மறந்து நாம் ஒரு காலமும் மாட்சிமைப்பட்டிருத்தலை நினையாத இவனுக்கு இந்த ஊடல் போரில் தோற்று, அதன் பயனைக் காண்போம்' என்று ஊடல் நீங்கப் பெற்ற தலைவியின் கூற்றை எடுத்து மொழிபர்.

நச்சினார்க்கினியர் இளம்பூரணரிடமிருந்து மாறுபடுவதால் மேற்கோள் இலக்கியமாக 'ஊர, சேரிப் பரத்தையரின் பற்குறியுடை நின் உதட்டை எனக்குக் காட்டி என் துன்பத்தை மிகுதிப்படுத்தும்படி பாணன் கூறினானா? வண்ணாத்திப் பரத்தையர் எறிந்த ஒலியுடைய சாதிலிங்கத்தை எனக்குக் காட்டி என் துன்பத்தை மிகுதிப்படுத்தும்படி

கூறினானா? அந்தணன் பரத்தையர் கூந்தலின் பூந்துகளை எனக்குக் காட்டி என் துன்பத்தை மிகுவிக்குமாறு கூறினானா'

எனும் பொருள் அமைந்த பாடலைக் காட்டுவர். ஆயின் துறை ஆசிரியர் இப்பாடலைக் காமக்கிழத்திக் கூற்றாகக் கூறுவர். மற்றும், "தலைவன் பரத்தையால் ஊடல் போரில் ஏற்படுத்தப்பட்ட புண்களுடன் வந்தனன்; அவனைப் பார்த்து நீ எங்குச் சென்று வருகின்றனை? எனக்கேட்பாள் தலைவி. அவன் நான் குதிரை ஏறினேன் என்றான். தலைவி உண்மையை உணர்ந்தவள் ஆதலால் அவனுடைய பரத்தையைக் குதிரையாய் உருவகம் செய்து இங்கிருந்து போவாயாக"(44) எனக் கூறுவதனையும்,

"பரத்தையரிடம் பிரிந்து சென்ற தலைவன் தலைவியிடம் வந்த போது நான் கடவுளரிடம் சென்றிருந்தேன்".(45) எனக் கூறுதல், "யானைத் திறம்"(46) செய்தேன் எனக் கூறுதல் ஆகிய கலித்தொகைச் செய்யுட்களை எடுத்தோதுவர்.

**கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி**
**அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்**
**காதல் எங்கையர் காணின் நன்றென**
**மாதர் சான்ற வகையின் கண்ணும்**

தலைவன் தனது கொடிய புறத்தொழுக்கினைப் பொறுத்துக் கோடல் வேண்டும் என்று அடிமேல் வீழ்ந்த தலைவனை இடித்துரைத்து, ஈன்ற தாயினைப் போன்று இடித்துரைத்து அவனது மனக்கவலையை மாற்றி அன்பினால் தழுவிக் கொள்ளுதலும் ஆராய்தலையுடைய மனையறக்கிழமை பூண்ட தலைவிக்கு உரியதாகும். இதனை,

'தாய்போற் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலையான'

(தொல்.பொருள்.கற்பு: 32)

என்பர் தொல்காப்பியர்.

இச்செயல் நின்பால் காதலுடைய என் தங்கையரான பரத்தையர் காணின் நன்றாமோ எனத் தன் காதல் நினைவு தோன்றக் கூறும் நிலையில் தலைவி கூற்று நிகழ்த்துவதனை இளம்பூரணர், "தலைவனது கொடுமை யொழுக்கத்தினைத் தலைவியே பொறுக்க வேண்டி, அவளடி மேல் வீழ்ந்தவனை நெருங்கி நின் மாட்டுக் காதலுடைய எங்கையர் காணின் இப் பணிதல் நன்றாமெனக் காதலமைந்த வகையின் கண்ணும்"[47] எனச் செப்புவர்.

நச்சினார்க்கினியர், "பரத்தைமை மாட்டு ஒழுகிக் கொடுமை செய்த ஒழுக்கத்தைத் தலைவி பொறுத்தலை வேண்டி, தன் அடிமேல் வீழ்ந்து வணங்கிய தலைவனை அதனின் மீது துனி மிக்குக் கழற நின்மாட்டுக் காதலையுடைய எங்கையர் காணின் இவை நன்றெனக் கொள்வரெனக் கூறிக் காதல் அமைந்து மாறிய வேறுபாட்டின் கண்ணும்"[48] எனச் செப்புவர்.

இக்கூற்றிற்கு எடுத்துக்காட்டாக இளம்பூரணர் கலித்தொகை 95-ஆம் செய்யுளைக் காட்டுவர். அவற்றில், 'நல்லவனே நான் செய்த தவறுகளை என் தலையிலே இட்டு என் பொய்களை எல்லாம் தெளிவித்து, என் களவைக் கையுடன் பிடித்துக் கொண்டாய். நானும் உனக்குத் தவறிழைத்தேன்; இனி எனக்கு அருள்வாய் என்றான். அதைக்கேட்ட அவள், ஏடா நீ கூறியபடியே அருள்வோம் யாம். அவ்வாறு அருள்வதற்கு யாம் உமக்கு யார்? விடலையே! நின் பூழ் எல்லாம் நின் முன்பு அளித்துப் பின் கைவிடுதலால் நின் நடிப்பில் அகப்பட்டு நோயைப் பெரிதாய்ப் பொருந்தும். அவை வருந்தாதபடி நீ உனக்கு ஆகும்படி பண்ணிய பூழ் எல்லாவற்றையும் இன்னும் உன் பாணனால் அழைத்து அவற்றின் மனம் தெளியுமாறு அளித்து ஆடுவாயாக என்றாள்' என்பதனைக் காட்டுவர். நச்சினார்க்கினியர் மேற்குறித்த பாடலைக் காட்டுவதோடு மேலும் தோழி கூற்றில் அமைந்த ஐங்குறுநூறு 46-ஆம் பாடலைத் தலைவி கூற்றாகக் கொண்டு,

'தலைவ, நின்னுடைய மார்பின் முயக்கத்தை விரும்பிய அழகிய நெற்றியையுடைய பரத்தையானவள் உன்னுடைய புறத்தோற்றத்தை

விரும்புவள்; நீயும் அவள் புறத்தோற்றத்தை விரும்புவாய். ஆதலின் நீ இங்கு வருவதைத் தவிர்த்து பரத்தை மனையில் தங்குவது உமக்கு இனிமை உண்டாவதாகும். அச்செயல் எமக்கும் இன்பம் பயப்பதாகும்' என்பதனையும் எடுத்துக் காட்டுவர்.

**தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை**
**மாயப் பரத்தை உள்ளிய வழியும்**

காமக் கிழத்தியர் அணிந்துவிட்ட நல்லணியோடு வந்த புதல்வனைக் கண்டு, தலைவனது பொய்ம்மை உடைய பரத்தைத் தன்மையைக் கருதிய வழி, தலைவிபால் கூற்று நிகழ்வதனை, "தாயரைக் கிட்டிய நல்லயையுடைய புதல்வனை மாயப் பரத்தை குறித்த வழியுங்"(49) எனக் கூறி மேலும் "புதல்வனைப் பரத்தைமை குறித்தலாவது தலைவன் புறப்பெண்டிர் மாட்டுப் போகிய வழி வெகுளுமாறு போல, புதல்வனையும் அவரிடைச் சென்ற வழி வெகுள்ல் எனக் கூறி, கண்ணிய நல்லணியெனவே அவர் கொடுத்த நல்லணி என்பதும் பெறுாஉம்"(50) என இளம்பூரணர் கூறுவர்.

நச்சினார்க்கினியர் "பரத்தையர் கருதி அணிந்த நன்றாகிய அணிகளையுடைய புதல்வனை மாயப் பரத்தைமையைக் குறித்த விடத்தும் என மொழிந்து"(51) எனவும் "அவருள் துனியாலே வருந்திய பரத்தையர் தம் வருத்தத்தை உணர்த்தியும் தலை நின்றொழுகும் பரத்தையர்தஞ் சிறப்பு உணர்த்தியும் அணிவர் என்றற்குக் கண்ணிய என்றார்"(52) என்றும் கூறுவர்.

மேற்கோள் இலக்கியமாக இளம்பூரணர் 'தலைவி தன் மகனைப் பணிப்பெண்ணுடன் கோயில்களுக்குச் சென்று வரும்படி அனுப்பினாள். அவள் நாழிகழிந்து வந்தனள். அதன் காரணம் யாது? எனத் தலைவி வினவினாள். அவள் பரத்தையர் தன் மகனுக்கு அணிகள் அணிவித்ததையும் தொடியை அணிவித்ததையும் உரைத்தாள். அது யார் அணிவித்தது என வினவிய தலைவி அவள் விடை கூறாமையால் தன்னை நொந்து' எனக் கூறும் கலித்தொகை 84-ஆம் செய்யுளை மொழிவர். இதனையே நச்சினார்கினியரும் மேற்கோளாகக் காட்டுவர்.

**காமக்கிழத்தி நலம்பாராட்டித் தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும்**

தலைவனுடைய காமக்கிழத்தியின் நலத்தினைப் பாராட்டத் தொடங்கித் தலைவன் தலைவியை அயன்மை செய்து ஒழுகுதலாகிய தீமையினை முடித்துக் கூறுமிடத்தும் தலைவிக்குக் கூற்று நிகழும். இதற்கு இளம்பூரணர், "காமக்கிழத்தி நலத்தினைப் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும் என்றும் நலம் பாராட்டுவள் தலைவி. அவள் பாராட்டுதல் தீமை பற்றி வருதலான் அதனாற் சொல்லி முடிப்பது பிற பொருளாயிற்று"(53) எனக் குறிப்பர். நச்சினார்க்கினியர் "தலைவி தன்னிற் சிறந்தாராகத் தன்னான் நலம் பாராட்டப்பட்ட இற்பரத்தையர் மேல் தீமையுறுவரென முடித்துக் கூறும் பொருளின் கண்ணும்"(54) எனச் செப்புவர். இதனைப் பரத்தைக்குக் கூறுகையில்,

'கற்பு வழிப்பட்டவன் பரத்தையை ஏத்தினும்
உள்ளத்து ஊடல் உண்டென மொழிப'

(தொல்.பொருள்.பொருளி:38)

என மொழிவர் தொல்காப்பியர்.

இலக்கியச் சான்றாக இளம்பூரணர் இரு செய்யுட்களைச் சுட்டுவர். அவற்றில் ஒன்று, தோழி கூற்றில் அமைந்த ஐங்குறுநூறு 122-ஆம் பாடலாகும். ஆயின்,

இளம்பூரணர் தலைவி கூற்றாகக் கொண்டு தலைவி தோழியிடம் 'நம்மாற் காணப்பட்டவள் உயர் மணலில் வீழ்ந்த அணிகலன்களைத் தேடிப் பின்பு வெள்ளாங் குருகை வினவும் பேதைப் பருவத்தள் என்று அவள் இளமையை நகையாடியதைக்' குறிப்பர். மற்றும், குறுந்தொகை 49-ஆம் செய்யுளின்,

'பரத்தைமை மீண்டு வந்த தலைவனைக் கண்டு ஆற்றாமை நீங்கி மகிழ்ந்த தலைவி புணர்ச்சிக்குப் பின் தன்னுடன் இருந்த தலைவனை நோக்கி, தலைவ! இப்பிறவி மாறி மறுபிறப்புக் கூடியவிடத்தும் நீயே என் கணவன்; யானே நினது மனைவி; பால்வரை தெய்வம் அவ்வணமே கூட்டுவதாக' எனப் பொருள் தோன்ற வருவனவும் கொள்க என்பர்.

நச்சினார்க்கினியர், இளம்பூரணர் காட்டிய குறுந்தொகைப் பாடலைக் காட்டி (குறுந்:49) மேலும் ஐங்குறுநூறு 47-ஆம் செய்யுளில், 'காமக்கிழத்தி பழித்துரைத்த செய்தியைத் தலைவி கேள்வியுற்ற நிலையில், தலைவனிடம் தலைவ, நீ என்னைப் புறக்கணித்ததால் என்னைவிட அவள் பெருநலம் உடையள் என்று கருதித் தருக்கி நிற்கின்றாள். ஆயின் அவளுக்கு நான் ஒருத்தியே பகை அல்ல. அவளிடமிருந்து உம்மைப் பிரிக்கப் பல பரத்தையர் உளர் என்பதை அவள் அறியாள் அறிந்தால் என்னை மட்டும் தன்னோடு ஒப்பப் பேசமாட்டாள். இதனால் அவள் மடமையை உடையவள் ஆவள்' என்பது பட மொழிவதனைக் கூறுவர்.

**கொடுமை யொழுக்கம் தோழிக்கு உரியவை**
**வடுவறு சிறப்பிற் கற்பில் திரியாமைக்**
**காத்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்**
**ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்**

தலைவனது கொடுமை ஒழுக்கமாகிய பரத்தமையின்கண் தலைவி தோழியிடம் கூறுவதற்குரிய வகையில் தலைவனைச் சினப்பேன் எனலும் சினவாது உவப்பேன் எனலும், ஏற்க மாட்டேன் எனலும், ஏற்றுக் கொள்வேன் எனலும் ஆகிய நான்கிடத்தும் பிற நிலையிலும் தலைவிக்குக் கூற்று நிகழும். இதற்கு இளம்பூரணர்,

> "தலைவி கொடுமை யொழுக்கத்துத் தோழிக்குக் கூறுதற்குரியவை குற்றமற்ற சிறப்பினையுடைய கற்பின்கண் திரியாது தலைவனைக் காய்தலும் உவத்தலும், நீக்கி நிறுத்தலும் பேணிக் கோடலும் அவ்விடத்து வரும், பலவாய் வேறுபட்டு வரு நிலையினும் தோழிக்குரியவை என்றதனால் தோழிக்குக் கூறத்தகாதனவும் உள"(55)

என மொழிவர். ஆயின் நச்சினார்க்கினியர், இளம்பூரணர் கூற்றை உள்வாங்கிக் கொண்டு அதனை மேலும்,

"பரத்தையிற் பிரிவும் ஏனைப் பிரிவுகளும் ஆகித் தலைவன்கண் நிகழும் கொடுமை யொழுக்கத்தில் தோழி கூறுவதற்கு உரியளென மேற் கூறுகின்றவற்றைக் கேட்ட வழி, எஞ்ஞான்றும் குற்றமின்றி வருகின்ற பிறப்பு முதலிய சிறப்பிடத்தும் கற்பிடத்துந் திரிவுபடாதபடி தோழி

கூற்றினை வெகுளுதலும் மகிழ்தலும் அவனைப் பிரித்தலும் பின்னும் அவள் கூற்றினைக் கேட்டற்கு விரும்புதலுமாகிய நிலையின் கண்ணும், அத்தோழியிடத்துத் தலைவனைக் காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலுமாய் வரும் நிலையின்கண் இக்கூறியவாறன்றிப் பிறவாற்றாய்ப் பல வேறுபட்டு வரும் நிலையின் கண்ணும்"[56] எனக் கூறுவர். இலக்கியச் சான்றாக இளம்பூரணர் காய்தல் என்பதற்குக் குறுந்தொகை 93-ஆம் செய்யுளைக் காட்டுவர். அதில்,

'தோழி நல்ல பெண்மை நலம் கெடவும் உடல்மிக மெலியவும் இனிய உயிரானது நீங்குமாயினும் அவர் பால் பரிவு கூர்ந்த சொற்களைச் சொல்லுதல் வேண்டா. தலைவர் நமக்குத் தாயும் தந்தையும் அல்லரோ. அன்பு இல்லாவிடத்து ஊடல் உண்டாவது எதற்கு' எனத் தலைவி கூறுவதனை மொழிவர். மற்றும். உவத்தல் என்பதற்குத் 'தலைவனைக் காணும் போது அவர் குற்றங்களைக் காணமாட்டேன். அவரைக் காணாத பொழுது அவருடைய குற்றமல்லாதவற்றைக் காண்பதில்லை' எனும் 1286ஆம் குறளையும், தொகை நூலில் இடம்பெறாத செய்யுள் ஒன்றையும் காட்டுவர். பிரித்தல் என்பதற்கு,

'அடும்பவிழ் அணிமலர் சிதைஇமீன் அருந்துந்
தடந்தாள் நாரை யிருக்கும் எக்கர்த்
தண்ணந் துறைவற் றொடுத்த நன்னலங் கொள்வோம்
இடுக்கண் அஞ்சி இரந்தோர் வேண்டக்
கொடுத்தவை தாஎனக் கூறலின்
இன்னா தோதநம் மன்னுயிர் கிழவே'

எனும் தொகை நூலில் இடம் பெறாத செய்யுளைக் காட்டுவர்.
பெட்டலும் என்பதற்கு,

'தலைவன் நாள்தோறும் வதுவை அயர்ந்து வந்தால் யான் அதற்குப் பொறேனாக நீ ஊடலன்றி அவன் வந்த பொழுதே எதிர் கொள்கின்றாய்' என்ற தோழிக்குத் தலைமகள்,

'விருந்தினரை எதிர் கொள்ளுவதாலும் அவன் பொய்யான சூளால் நமக்கு வருத்தம் உண்டாகும் என்று அஞ்சுவதாலும் பெறுவதற்கு அரிய மகனைத் தழுவிக் கொண்டு அவன் உறங்குவதைக் காண்பதாலும் என்

நெஞ்சம் தலைவனுடன் கொள்ளும் ஊடலைத் தீர்க்கிறது' எனும் கலித்தொகை 75-ஆம் பாடலைக் காட்டுவர். பிறவாற்றான் என்றமைக்கு, அகநானூற்றில் அமைந்த 56-ஆம் செய்யுளுள்,

'தோழி, இரும்பு மனத்தையுடையராகிய பரத்தையர் ஊர் முழுவதும் கலங்கத், தாம் முன்பு கூடிய பரத்தையர் தாய்மார் கலங்க, அப்பரத்தையர் ஆவ்வாம்பல் பூப்போல் குவிய, குவிதல் விட்ட குவளை மலர் போலும் பூப்பெய்து கொள்ளப்பட்ட பரத்தையரை நுகர்ந்து வருகின்ற காலத்து வழியில் அகப்பட்ட சேடியர் முதலானவரையும் நுகர்ந்து பின்னும் சிலரைக் கூட, கொடுநாக்கறிந்து கொண்டு வரும் தலைவனுடன் புதிய பரத்தையரைக் கூட்டும் பாணன் வந்தான். அப்போது கன்றை ஈன்ற பசு அவன் மீது பாய்ந்தது. அவன் யாழைக் கீழே விட்டு நம் இல்லத்துள் புகுந்தான். அவனை நோக்கி நான் உம் வீடு இதுவன்று அதோ அங்குள்ளது என்றேன். அவன் என்னை வணங்கி நின்றான். அதை இப்போது நினைத்தாலும் எனக்குச் சிரிப்பு ஏற்படுகின்றது என்றாள் தலைவி' எனும் நிலையினைச் சுட்டுவர். ஆதலின் தலைவன் பொருட்டு, தோழி வாயில் வேண்டாது கைவிடுக என்பது குறிப்பு.

நச்சினார்க்கினியர், "அவள் வயின் என்னாது தொல்காப்பியர் ஆவயின் என்றமையால் தோழியும் பொருள் என்பது பற்றித் தோழியை வெகுளுதலும், மகிழ்தலும், அவளைப் பிரித்தலும், அவள் கூற்றைக் கேட்க விரும்புதலும் ஆகிய நிலையினைக் கொள்வர்."[57]

தலைவி தோழியை வெகுளுதலுக்கு நச்சினார்க்கினியர், 'தலைவி இயற்பழித்த தோழியை நோக்கி, ஏடி இஃதென்ன? தலைவர் சால்பிலர் என்னும் இன்னாக்கிளவியை இனிக்கிளவாதே கொள். அவரது திருமனையின் கண் யாம் செய்தற்குரிய பல கடமைகள் உள்ளன. அவற்றைச் செய்தல் ஒழிந்து பிறர் பழிதூற்றல் முறையன்று எனக் கடிந்து கூறுகின்றாள்' எனும் குறுந்தொகை 181-ஆம் செய்யுளைக் காட்டுவர்.

தோழியை உவத்தல் மகிழ்ந்து கூறுதலுக்கு 'விளாம் பழங்களை உணவாகக் கொண்டு வேற்று நாட்டிற்கு அரிய வழிகளில் யாம் சேரும் என்று தலைவர் கூறலும் அது நன்று என விருப்பத்தோடு கூறினாய்; அவ்வாறு கூறியதனால் நீ நன்று ஒன்றைச் செய்தாய்' எனத் தோழியைத் தலைவி மகிழ்ந்து கூறும் நற்றிணை 24-ஆம் பாடலை மொழிவர்.

தோழியைப் பிரித்துக் கூறலுக்கு குறுந்தொகை 21-ஆம் செய்யுளைக் காட்டுவர். அது, 'தலைவன், குறித்த பருவம் வந்தது; ஆனால் தலைவன் வரவில்லை. அது வரை ஆற்றியிருந்த தலைவி இனி ஆற்றாள் எனத் தோழி கவல்வதைத் தலைவி குறிப்பாய் அறிந்தாள். கானம் அவர் கூறிய பருவத்தைக் காட்டினாலும் அது இப்பருவம் அன்று; ஏனெனில் அவர் பொய் கூறார் எனத் தான் ஆற்றியிருப்பேன் என்பது தோன்றக் கூறியது என்பதாகும்.' மேலும்,

தோழி கூற்றைக் கேட்க விரும்பிய விடத்தை 'பொருள்வயிற் பிரிந்த தலைவன் காலம் நீட்டித்த வழி அவன் வன்கண்மையை நினைந்து தோழியை நோக்கி, நம்மைப் பிரிந்து தனித்து உறைதலை தலைவர் கற்றனரோ? என்று வினவித் தோழியின் கூற்றைக் கேட்க, மேலும் விரும்புதலைப் புலப்படுத்துவர்.'

அடுத்த நிலையில் தோழியிடத்துத் தலைவனை வெகுளுதலுக்கு 'இளம்பூரணர் சுட்டிய பாடலைக் குறித்து, மேலும், ஐங்குறுநூறு 155-ஆம் செய்யுளில் அமைந்த, தலைவன் பரத்தமை ஒழுக்கங் காரணமாகத் தலைவி ஊடியிருந்தாள். அக்காலம் தலைவி கருவயிற்றில் கருக் கொள்ளும் காலமாக இருந்தது. அச் செய்தியைத் தோழி தலைவிக்கு எடுத்துக் காட்டி மகப்பேற்றிற்குரிய காலத்தே நீ ஊடியிருத்தல் முறையன்று என வற்புறுத்தினாள். அது கேட்ட தலைவி, அவளை வெகுண்டு நான் கனவிலே மகப் பெற்றுவிட்டேன். நீ வாளாபோ என்று இகழ்ந்து கூறுவாள்' என்பதனையும் காட்டுவர்.

தோழியிடத்துத் தலைவனை உவத்தலுக்கு, ஐங்குறுநூறு 14-ஆம் செய்யுளைக் குறிப்பர். இதில், ‘தலைவனின் பரத்தைமை ஒழுக்கம் காரணமாகத் தலைவி ஆற்றாதவளாய் வருந்தினாள். அது கண்ட தோழி, நீ நின்னை மறந்தவனை நினைந்து வருந்தாய் என்று தேற்றினாள். அது கேட்ட தலைவி, அவன் நம்மை மறந்தாலும் நாம் மறக்கமாட்டோம். அத்துணைப் பேரின்பம் நல்கும் இயல்புடைத்து அவன் மார்பு’ என்று தலைவனை உவத்துக் கூறுவதெனக் காட்டுவர்.

தோழியிடத்துத் தலைவனைப் பிரித்தலுக்கு, ‘தலைவன் புதிய புதிய பரத்தையரை விரும்பும் இயல்புடையான். எனவே அவன் அவ்வொழுக்கத்தினின்றும் மீள்வான் இல்லை; ஆயின் தன் நெஞ்சு தனக்குத் துணையாதலன்றி அவனையே நினைந்து அழுகின்றது’ எனும் ஐங்குறுநூறு 17-ஆம் செய்யுளைக் குறிப்பர்.

தோழியிடத்துத் தலைவனைப் பெட்டமைக்கு, ‘இளம்பூரணர் உவத்தலுக்குக் காட்டிய பாடலையும், (நற்.24) பெட்டமைக்குக் காட்டிய கலித்தொகைப் பாடலையும் எடுத்துக் கூறுவர்’ (கலித். 75).பல்வேறு நிலையாவன என்பதற்கு

1. தோழி பிரிவுணர்த்திய வழி செலவழுங்கக் கூறுவனவற்றின் வேறுபாடுகளும் (குறுந்: 20,39)
2. தலைவன் பிரிந்துழி வழியருமை பிறர் கூறக் கேட்டுக் கூறுவனவும் (குறுந்: 12)
3. தலைவனது செலவுக் குறிப்பறிந்து தானே கூறுவனவும்(கலித்:4)
4. தூதுவிடக் கருதிக் கூறுவனவும் (ஐங்: 473)
5. நெஞ்சினையும், பாணனையும் தூதுவிட்டுக் கூறுவனவும் (ஐங்: 317,474)
6. வழியிடத்துப் புட்களை நொந்து கூறுவனவும் (குறுந்: 46) (ஐங்: 333)
7. பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவள் என்பதுபடக் கூறுவனவும் (குறுந்: 41)

8. அவன் வரவு தோழி கூறிய வழி விரும்பிக் கூறுவனவும் (குறுந்: 75)

9. கூறிய பருவத்தின் வாராது பின்னர் வந்தவனொடு கூடியிருந்து, முன்னர், தன்னை வருத்திய குழலை மாலையிற் கேட்டுத் தோழிக்குக் கூறுதலும் (திணை: மாலை. நூற்: 123)

10. தலைவன் தவறிலன் எனக் கூறுவனவும் (குறுந்: 313)

11. புதல்வனை நீங்கா தொழுகிய தலைவன் நீங்கிய வழிக் கூறுவனவும் (ஐங்: 66)

12. காமஞ்சாலா இளமையோளைக் களவின்கண் மணந்தமை அறிந்தேன் எனக் கூறுவனவும் (ஐங்: 69)

13. பருவங் கண்டழிந்து கூறுவனவும் (குறுந்: 110)

14. பருவங் கண்டு காய்ந்து கூறுவனவும் (குறுந்: 191)

15. வன்புறை எதிரழிந்து கூறுவனவும் (ஐங்: 334)

16. தூது கண்டு கூறுவனவும் (ஐங்:47) (குறுந்:106)

ஆகிய பதினாறையும் குறிப்பிட்டு இவற்றின் வேறுபட வருவனவும் பிறவும் இதன்கண் அமைக்க என்பர்.

## வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇ

தலைவன் விடுக்க வந்த தோழியல்லாத ஏனைய வாயில்களிடத்தும் தலைவி கூற்று நிகழும் என்பதை இளம்பூரணர் "வாயில்கள் மாட்டு வரூஉங் கூற்றுவகை யுளப்படத் தலைவி கூற்று நிகழும் என்றவாறு. வாயில்களாவார், பார்ப்பர், பாங்கன், தோழி, செவிலி, பாணன், விறலி, இளையர், விருந்தினர், கூத்தர், அறிவர், கண்டோர். இவருள் தோழி வாயிலாதல் மேற்கூறுதலின் ஒழிந்த வாயில்கள் ஈண்டுக் கொள்ளப்படும்"(58) எனக் கூறுவர்.

நச்சினார்க்கினியர், வாயில் தன் ஏதுவாகத் தலைவிக்கு வரும் கூற்றுவகை என்றும், வாயில்களாவார் செய்யுளியலுள் கூறும் பாணன் முதலியோர் 'வகை என்றதனான் ஆற்றாமையும், புதல்வனும் ஆயின் ஆடை கழுவுவாளும் பிறவும் வாயிலாதல் கொள்க' என்பர்.

இருப்பின், இவ்வாயில்கள் தலைவனது பிரிவினால் தலைவிக்கு உளதாகிய துன்பம் மிகுதியைத் தலைவனுக்கு அறிவுறுத்தும் பொருட்டும் இரங்கல் உணர்வு தோன்ற மொழிய வேண்டுவதை,

'வருத்த மிகுதி சுட்டுங் காலை

உரித்தென மொழிப வாழ்க்கையுள் இரக்கம்'

(தொல்.பொருள்.பொருளி: 31)

என்பர் தொல்காப்பியர். ஈண்டு, தலைவன் பிரிவினால் தலைவிக்கு ஏற்பட்ட இரக்க உணர்வினை வாயில்கள் தலைவி கூற்றை உட்கொண்டு தாமே கூறுதல் போலத் தலைவனிடம் கூறவேண்டும் என்பதை,

'தோழியுள் ளுறுத்த வாயில் புகுப்பினும்

ஆவயின் நிகழும் என்மனார் புலவர்'

(தொல்.பொருள்.கற்பு: 8)

எனக் குறிப்பிடுவர். இக்கூற்றிற்கு இளம்பூரணர் மேற்கோளாக ஆறு செய்யுளினைக் காட்டுவர். அவை,

1. பாணன் வாயிலாக வந்தமைக்கும் (குறுந்: 33)
2. தலைவன் வருகின்றான் என்று உழையர்க்கும் (குறுந்:753)
3. பாங்கன் வாயிலாக வந்தவிடத்தும் (நற்:60)
4. ஆற்றாமை வாயிலாகச் சென்றற்கும் (நற்:340, 380)
5. புதல்வன் வாயிலாகச் சென்றற்கும் (கலித்:74) என அமையும்

பாணன், உழையர், பாங்கன், ஆற்றாமை, புதல்வன் ஆகியோர் வாயிலாக வந்தவிடத்து, தலைவி கூறுவதாக அமைந்த செய்யுளை மேற்கோளாகக் காட்டுவர்.

இவற்றில் தலைவன் வருகின்றான் என்று உழையர்க்குத் தலைவி கூறுவதாக அமைந்த செய்யுளில்,

'நீ கண்டனையோ கண்டார்க் கேட்டனையோ' எனத் தொடங்கும் குறுந்தொகைப் பாடல் துறைக் குறிப்பில் தலைமகன் வரவுணர்த்திய பாணற்குத் தலைமகள் கூறியது எனக் குறிக்கப் பெற்றுளது. பாடலில் பாணன் என்பதற்கும், உழையர் என்பதற்கும் எந்தவிதக் குறிப்பும் இல்லை. ஆதலில் இளம்பூரணர் உழையர் வாயிலான வழி என்றும் துறை ஆசிரியர்கள் பாணன் வாயிலான வழி என்றும் குறித்துள்ளனர்.

இது போலவே பாங்கன் வாயிலாக வந்தமைக்கு இளம்பூரணர் காட்டும்(நற்:90)பாடல், துறைக் குறிப்பில் தோழி கூற்றாக அமைந்துள்ளது. ‘தோழி தலைவிக்கு உரைப்பவள் போல வாயில் வேண்டி வந்த பாணன் கேட்பச் சொல்லி வாயில் மறுத்தது’ எனக் காணப் பெறுகிறது. இவற்றில் (நற்:90) பாணன் என்பதற்குக் குறிப்பு ஏதுமில்லை, ஆயின் நற்:380 ஆம் பாடலில் ‘கொண்டு செல்பாண, நின்தண் துறை ஊரனை’ எனப் பாடலடிகள் இடம் பெற்றுள்ளமையால், இது எப்படி பாங்கனுக்குப் பொருந்தும். இதனைப் பாணன் வாயிலாக வந்தவிடத்துத் தோழி அல்லது தலைவி கூறியதாகக் கருதலாம்.

நச்சினார்க்கினியர் ‘பத்துச் செய்யுட்களை’ மேற்கோளாகக் காட்டுவர். அவற்றுள் இளம்பூரணர் காட்டிய ஆறு செய்யுட்களும் அடங்கும். அவை தவிர்த்து “தோழி வாயிலாக வந்தமைக்கும்,”(60) “ஆடை கழுவுவாள்”(61) வாயிலாக வந்தமைக்கும் முறையே ஒவ்வொரு பாடல் காட்டுவர்.

ஆயின் பாங்கன் வாயிலாக வந்தமைக்குக் காட்டாது, இளம்பூரணர் குறிப்பிடும் பாங்கன் குறித்த பாடல்களைப் பாணனுக்குக் காட்டுவது பொருத்தமுடையது.

## பிரிவு

களவில் தலைவன் தலைவியை விட்டு ஒரு நிமித்தம், கருமம் பொருட்டுப் பிரியும் வழக்கம் இல்லை. ஆயின் கற்பு வாழ்க்கையில் தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் வாய்ப்புகள் நேரிடும். இறையனார் களவியல் நூலில்,

‘ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்(று)
ஆங்க ஆறே அவ்வயிற் பிரிவே’

(இறை.கள.நூற்:35)

எனக் குறிப்பர். ஈண்டுக் கல்வியின் பொருட்டும், நாடு காத்தற் பொருட்டும், இரண்டு அரசர்கள் தம்முள் மாறுகொண்டு பொருதும்பொழுது அவர்களைச் சமாதானம் செய்யும் பொருட்டும், பொருள் தேடுதற் பொருட்டும், அரசன் கட்டளைப்படி ஏதாவது ஒரு நிமித்தத்தின் பொருட்டும், பரத்தை காரணமாகவும் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்வான். அவ்வகையில் பிரியும் தலைவன் தலைவியை உடன் அழைத்துச் செல்லான் என்பதை,

"முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை (தொல்.பொருள்.அகத்: 37) எனத் தொல்காப்பியர் கூறுவர். முந்நீர் வழக்கம் என்பதற்கு இளம்பூரணர் "கப்பல் வழியாகக் கடலில் செல்லும் பிரிவு"(62) என்பர். ஆயின் நச்சினார்க்கினியர் "ஓதல், தூது, பொருள் ஆகிய மூன்று நீர்மையால் செல்லும் பிரிவு"(63) என்று பொருள் கூறுவர். இவ்வாறு உரை எதிர்ப்பட்டு இருப்பின் பிரிவில் தலைவி கூற்றாகச் சிலவிடங்கள் அமையும்.

**கிழவன் மகடூஉப் புலம்பல் பெரிதாகலின்**
**அலமரல் பெருகிய காமத்து மிகுதியும்**

பொருள் முதலியவற்றிற்காகப் பிரியும் தலைவனைப் பிரிந்து தலைவி தனித்துறையும் காலம் பெரிதாகலின் ஆண்டு மனச் சுழற்சியோடு பெருகிய வேட்கையின் கண் தலைவி கூற்று நிகழும் இதனை,

"தலைவனைத் தலைவி நீங்கித் தனிமையுறுதல்
பெரிதாகலின் ஆண்டு அலமரல் பெருகிய
காமத்தின் மிகுதியின் கண்ணும்"(64)

என இளம்பூரணரும்,

"அறமும் பொருளுஞ் செய்வதனால் புறந்துறைதலில் தலைவனைத் தலைவி நீங்குங் காலம் பெரிதாகலின் அதற்குச் சுழற்சி மிக்க வேட்கை மிகுதி நிகழ்ந்த விடத்தும்"(65) என நச்சினார்க்கினியரும் உரைப்பர். இக்கூற்றிற்கு இளம்பூரணர் நான்கு இலக்கியச் சான்று

மொழிவர் (குறுந்: 354, நற்: 28, ஐங்: 11, குறள்: 1193).
பரத்தையிற் பிரிந்த தலைவனிடம்,

'நீரின் கண் நெடுநேரம் விளையாடினால்
கண் சிவக்கும் தேனைப் பன்முறை
உண்டால் புளிப்புத் தரும். ஆதலின் தலைவ,
நீ எம்மைப் பிரிய விரும்பினை ஆயின் நீ எம்
தந்தையின் ஊரின் கண்ணே சென்று விடுக'

எனத் தோழி தலைவனுக்குக் கூறுவதனையும்,

'என் கையைக் கொண்டு தன் கண்ணை ஒற்றியும்
தன் கையைக் கொண்டு என் நல்ல
நெற்றியைத் தடவியும் தாய் போல இனிய
சொற்களைக் கூறியும் தலைவர் களவுக் காலத்தில்
தலையளி செய்தார். இப்போது கள்வர் போலக்
கொடியவராய் உள்ளார்'

எனத் தோழி கூறுவதனையும்,

'இல்லற நெறிக்கண் நிற்றலை விட்டு, அறநெறியில்லாப் பரத்தமையை நாடிய தலைவனது ஒழுக்கம் கொடுமையுடையதாயினும், தலைவன் பழிக்கு அஞ்சி அதனை மறைத்தும், அவருடைய மென் தோள்கள் அதனை மறையாமல் உரைக்கும் தன்மை உடையனவாய் உள'

எனத் தலைவி பாங்கிக்குக் கூறியதையும்,

'காதலரால் விரும்பப்படுகின்றவர்க்குப் பிரிவுத் துயர்
இருந்தாலும் நாம் இன்பமாக
வாழ்கின்றோம் என்னும் செருக்கு தக்கதாகும்.'

எனக் கூறுவதனையும் மொழிவர். நச்சினார்க்கினியர் இதற்கு, குறுந்தொகை 290-ஆம் செய்யுளுள்,

'காமநோயைப் பொறுக்க வேண்டும் என்று சொல்பவர் அக்காமத்தின் தன்மையை உணராதவர் ஆவர். யாம் எம் தலைவரைக் காணாததனால் துயர் மிகுந்த நிலையில், மிக்க வெள்ளத்தில் பாறையின் மீது மோதிச் சிதறும் சிறிய நுரையைப் போல மெல்ல மெல்ல இல்லாமல் ஆவன்'

எனத் தலைவி முன்னிலைப் புறமொழியாகத் தோழியிடம் கூறுவதனைக் கூறுவர்.

## இன்பமும் இடும்பையும் ஆகியவிடத்தும்

இன்பமும் துன்பமும் தலைவிபால் ஒருங்கே தோன்றிய நிலையில் தலைவிக்குக் கூற்று நிகழும் என்பர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர்,

"அங்ஙனம் அலமரல் பெருகிய வழித் தலைவனை
எதிர்ப்பட்ட ஞான்று இன்பமும் தனிப்பட்ட
ஞான்று துன்பமும் உளவாகிய இடத்தும்"[66]

என இளம்பூரணர் கருத்தை விரிப்பர். இதற்கு இளம்பூரணர்,

'முன்பு அவருடைய பார்வை இன்பம்
கொடுத்தது; இப்பொழுது அவருடைய சேர்க்கை
பிரிவுக்கு அஞ்சுகின்ற துன்பம் உடையது'

எனும் 1152-ஆம் குறளையும், குறுந்தொகை 157-ஆம் செய்யுளுள்,

'குக்கூ கூ என்று கோழி கூவிற்று
அதைக் கேட்டதும் காதலரைப் பிரிக்கும்
வாள் போன்று அந்நாள் வந்ததே என்று
என்னெஞ்சம் துட் கென்றது'

எனத் தலைவி கூறுவதனையும் காட்டுவர். நச்சினாக்கினியர் மேற்குறித்த குறளைக் காட்டி, அசுணம் என்னும் இசையறி விலங்கைக் கொல்பவர் முதலில் யாழை வாசித்துப் பின்பு கடிய பறையை இயக்கி அதனைக் கொல்வர். அவர் கையில் இன்பமும் துன்பமும் உண்டு. அது போலத் தலைவன் மார்பு இன்பமும் துன்பமும் உடையது என்னும் (நற்றிணை302) தலைவி கூற்றினை மொழிவர்.

## தன் வயிற் சிறப்பினும் அவன்வயிற் பிரிப்பினும் இன்னா தொல் சூள் எடுத்தற் கண்ணும்

இக்கூற்றினை நச்சினார்க்கினியர்,

1. தன் வயிற் சிறைப்பினும்
2. அவன் வயிற் பிரிப்பினும்
3. இன்னா தொல் சூள் எடுத்தற் கண்ணும்

எனப் பிரித்துக் கொள்வர். இதற்கு இளம்பூரணர்,

"தன் மாட்டு நின்ற மிகுதியானும், அவள் மாட்டு நின்ற வேறுபாட்டானும் இன்னாத பழைய சூளுறவைத் தலைவி எடுத்த வழியும்"[67] எனக் கூறுவர். தலைவி மாட்டு மிகுதியாதோவெனின் தலைவியை தலைவன் பணிந்த பொழுது அச்சமும் நாணமும் இன்றி அவனது வணக்கத்தை ஏற்றுக் கொள்ளும் உயர்வுடையளாதலும் தலைவன் தனது தலைமைக்கு மாறாகத் தலைவியைப் பணிந்து தாழ்தலும் ஆராயுங்கால் புலவிக் காலத்திற்கு உரியது என்பர். இதனைத் தொல்காப்பியர்,

'மனைவி உயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய'

(தொல். பொருள். பொருளி: 32)

என்பர். இதற்கு மேற்கோள் இலக்கியமாக இளம்பூரணர், கலித்தொகை (88:18-21) செய்யுளுள், "தேரில் ஏறிவரும் சிறப்பில் மயங்கி உன் தீங்கை எண்ணிப் பாராமல் வந்த மாலையை உடைய பரத்தையரின் மாலையை உன் மாலையாய் எண்ணி அணிந்து வந்தாய். இந்தத் தப்பிற்கு அஞ்சி யாம் ஊடிப் பொருத போரில் கலங்கிக் கற்புக் காலத்தில் கூறும் மிகப் பொய்யான சூள் வருத்தத்தைச் செய்யுமானால், பின் அது எங்கள் மேல் அல்லது யார் மேல் வரும்? அவ்வாறு வாராமல் களவுக் காலத்துச் சூள் போல் கெடுமோ நீ கூறுவாய் என ஊடல் நீங்கிச் சொல்வதனைக் காட்டுவர்.

நச்சினார்க்கினியர் தனித்தனியாகப் பிரித்துக் கொண்டு தன்வயின் சிறைப்பினும் எனப் பாடம் கொண்டும்,

"தலைவனில் தான் புதல்வதற்குச் சிறந்தாளாகி
அத்தலைவன் மாட்டும் அவன் காதலித்த
பரத்தையர் மாட்டு செல்லாமற் புதல்வனைத்
தன்பாற் சிறை செய்தற் கண்ணும்"[68]

எனக்கூறி, தலைவனிடத்தினின்றும் புதல்வனைப் பிரித்தமைக்கு,

'செல்லாக் காலை செல்கென விடுத்தலும்' எனும் கூற்றிற்குக் கூறிய கலிச் செய்யுளை (79: 7-11) புதல்வனைப் பிரிந்தமைக்குக் காட்டுவர். மற்றும் காதற் பரத்தையர் பால் புதல்வன் செல்லாமல்

பிரிந்தமைக்குத் 'தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை மாயப் பரத்தை உள்ளிய வழியும்' எனும் கூற்றிற்கு எடுத்துக் காட்டிய கலித்தொகை (82: 22-33) செய்யுளினையே இதற்கும் காட்டுவர்.

அவன்வயிற் பிரிப்பினும் என்பதற்கு, "தலைவி மைந்தனொடு தனக்குள்ள உறவை விலக்கிய கருத்தில் அவனைத் தலைவனுடன் சார்த்திக் கூறல்"[69] என மொழிந்து மேற்கோள் இலக்கியமாகத் தந்தையரை ஒப்பர் மக்கள் எனும் கூற்றிற்கு எடுத்துக்காட்டிய கலித்தொகை 86: 27-33 ஆம் செய்யுளைக் காட்டுவர்.

'இன்னாத் தொல் சூள் எடுத்தற் கண்ணும்' எனும் கூற்றிற்கு 'இன்னாங்குப் பயக்குஞ் சூளுறவினைத் தலைவன் சூளுறுவலெனக் கூறுமிடத்தும்' என உரைப்பர். மற்றும் தலைவன் வந்த குற்றம் வழிகெட ஒழுகிக், களவிற் சூளுறுவான் வந்த ஓதம் நீக்கி இக்காலத்துக் கடவுளரையும் புதல்வனையும் சூளுறுதலின் இன்னாத சூள் என்றார். "அது களவு போலச் சூளுறுதலின் தொல் சூள் என்றார்"[70] என்பர்.

இதற்கு இலக்கியச் சான்றாக, இளம்பூரணர் இக்கூற்றிற்குக் குறிப்பிடும் கலிச் செய்யுளைக் (88)காட்டுவர்.

சங்க அகத் தொகை நூல்களில் தலைவி கூற்றாக அமைந்த பிரிவுப் பாடல்கள் பல. அவை,

1. தலைவி தலைவன் பிரிவை உணர்ந்த நிலை
2. தலைவன் பிரிந்து சென்றமையை அறிந்த நிலை
3. பிரிவிடை ஆற்றாத நிலை
4. பிரிவிடை ஆற்றாத நிலையில் தோழி வற்புறுத்தும் நிலை
5. குறித்த பருவங்கண்ட நிலை.

என்னும் பொருண்மையில் அமைந்த நிலைகளில் பாடல்கள் தொல்காப்பியர் காலத்தில் பெருகிய நிலையில் இருந்திருக்க வேண்டும். ஆதலால் தான் பொருளியலில், தலைவன் குறித்த பருவம் வரக் கண்டதும் செயலற்ற நிலையில் தலைவி அப்பருவம் கழிந்தது போலக் கூறும் கூற்றினை,

'பொழுது தலைவைத்த கையறு காலை
இறந்த போலக் கிளக்குங்கிளவி

மடனே வருத்தம் மருட்கை மிகுதியொடு

அவை நாற் பொருட்கண் நிகழு மென்ப'

(தொல். பொருள். பொருளி: 41)

எனக் கூறுவர். ஈண்டு, தலைவன் கார்ப்பருவம் குறித்துச் சென்றானாக அப்பருவ காலம் ஆவணியும் புரட்டாசியுமாதலின் ஆவணி முதல் நாள் வந்த அளவில் தலைவி கார்ப்பருவம் கடந்தது போலக் கருதுதல் மடம் காரணமாம்.

இதுகாறும் ஆற்றியிருந்த நிலையில் பருவம் தோன்றியவுடன் ஆற்றாமை மீதூர்தல் 'வருத்தம்' ஆகும். மேகத்தைக் கண்ட மாத்திரத்தில் அது கார்கால மேகமாகாது. சித்திரை வைகாசி மாதங்களில் வம்பாகத் தோன்றிய மேகமாயினும் கார்கால மேகம் எனக் கொள்வது 'மயக்கம்' ஆகும். கார்காலத்தில் தோன்றிய பொருட்கள் தலைவனை நினைப்பூட்டத் தலைவனைக் காணத் துடிக்கும் விருப்பம் மிகுதி ஆதல் ஆகும்.

இவ்வாறு கூறுவதை நோக்கின், அவர் காலத்தில் தலைவி பருவங் கண்டு வருந்திக் கூறும் பாடல்களும் பருவம் கழிந்தது போலக் கூறும் பாடல்களும் பல இருந்திருக்க வேண்டும். இது போலப் பிரிவில் வேறு பல நிலைகளிலும் தலைவி கூற்றுப் பாடல்கள் அவர் காலத்தில் இருந்திருக்க வேண்டும். அவை யாவும் தலைவனைப் பிரிந்து வருந்தும் வருத்தத்தையும் அதன் வழிப் பெருகும் வேட்கையையும் பொருளாகக் கொண்டிருந்தமையின் அவற்றைச் சுருங்கக் கூறும் நோக்கில் அக்கூற்றை அமைத்தார் போலும்.

தொல்காப்பியர் கூறும் தலைவி கூற்றுள் பிரிவு தொடர்பாகத் தாங்கள் கொண்ட கூற்றுகளுள் அகப்பாடல்கள் முழுவதையும் அடக்க 'இளம்பூரணராலும்,' 'நச்சினார்க்கினியராலும்' இயலவில்லை. அடக்க இயலாத பாடல்களில் காணப்படும் கூற்றுகளை இளம்பூரணர் "எஞ்சியோர்க்கு எஞ்சுதல் இலவே"(71) எனும் அகத்திணை

நூற்பாவிலும்-நச்சினார்க்கினியர் கற்பியலில் வரும் "ஆவயிற் வரும் பல்வேறு நிலையினும்"(72) என்பதிலும் அமைத்துக் கொண்டனர்.

களவொழுக்கத்தில் தலைவனுடன் கூடி, உடன் போக்கிற் சென்ற தலைவி, பின்னர் மனையறக் கடமை பூண்டு மனைக் கண் இருந்து, சுரத்திடையே தலைவனொடு சென்ற போது தான் முன்பு கண்ட கருப்பொருட்களையும் அவற்றின் தொழில்களையும் சுட்டித் தலைவன் தன் மேல் அன்பு செய்தற்குத் தகுந்தவற்றைக் கூறுதலே தலைவன் பிரிந்து சென்று செய்யும் வினைக்கண் அஞ்சும் அச்சத்திற்குக் காரணமாகும் என்பதை,

'புணர்ந்துடன் போகிய கிழவோள் மனையிருந்து
இடைச்சுரத்து இறைச்சியும் வினையும் சுட்டி
அன்புறு தக்க கிளத்தல் தானே
கிழவோன் செய்வினைக்கு அச்சமாகும்'

(தொல். பொருள். கற்பு: )

என்பர். இவ்விடம் வினை மேற்கொண்ட தலைவன் தான் வினை முடித்து வருமளவும் தன் மனைவி ஆற்றியிருக்க வல்லளோ என அஞ்சும் அச்சத்தினையும் வினைவயிற் சென்ற தலைவர் நம்பாற் கொண்ட அன்பின் காரணமாக நெடுநாள் நம்மைப் பிரிந்துறைதலாற்றாது வினை முடியாது இடையே திரும்பி வருவாரோ எனத் தலைவி அஞ்சும் அச்சத்தினையும் குறித்து நின்றது.

## தொகுப்புரை

இல்லறம் என்னும் பொருளுடையதே கற்பு என்றும், களவில் ஈடுபட்டு அன்பு கொண்ட தலைவன் தன் மீது காதல் கொண்ட தலைவியைத் தமர் கொடுப்பப் பலரறிய மணந்து வாழும் மனை வாழ்க்கை, உடன்போக்குச் சென்று கொடுப்போர் இன்றியும் மணந்து வாழும் வாழ்க்கை என இரு கூறுகளைக் கொண்டமை கற்பு என்றும் ஆய்வில் விளக்கப்பெற்றுள்ளது.

கற்பில் மணவினைக்குப் பின்னர் தலைவி கூற்றுகள் மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு ஆகிய ஐந்து கூறுகளில் அடங்கும் என்பது புலப்படுத்தப்பட்டுள்ளன.

மகிழ்ச்சி என்னும் பொருளுடைய மலிவில் தலைவி கூற்றுகளாகத் தொல்காப்பியர் குறிப்பிடும், அவனறி வாற்ற அறியுமாகலின் ஏற்றற் கண்ணும், உரிமை கொடுத்த கிழவோன் பாங்கின் பெருமையில் திரியா அன்பின் கண்ணும் என அமையும் இடங்கள் எடுத்துக் காட்டுப்பெற்றுள்ளன.

புலவி, ஊடல், உணர்வு ஆகிய மூன்றும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையன என்பதும் புதல்வனின் நெய்யாடல் விழாவில் கலந்து கொள்ள வந்த தலைவனோடு உரையாடுவதும், பரத்தையரை நாடிச் சென்று வந்த தலைவனிடம் பேசுவதும், பரத்தையரிடம் தங்கி ஒழுக்கமுடைய தலைவனிடம் நீ என் தங்கையராகிய பரத்தையரிடம் செல் என்று கூறுவதும், செல்லாக் காலை செல் என விடுத்த நிலையிலும் காமக்கிழத்தி தலைவியின் மகனைத் தழுவி விளையாடும் போதும், தலைவன் வரவறியாது தலைவி தோழியிடம் பேசுவதும், தந்தையை ஒப்பர் மக்கள் என்பதால் மகவைப் பழித்துக் கூறுவதும், தலைவனோடு வேறுபட்டு பிணங்கும் போதும், தன் கொடிய ஒழுக்கத்தைப் பொறுருத்துக் கொள்ளவேண்டும் என்ற தலைவினிடம் பேசும் போதும் என அமையும் தலைவி கூற்றுகள் வெளிப்படுத்தப் பெற்றுள்ளன.

பிரிவின்கண் நிகழும் தலைவி கூற்றுகளாக இன்பமும் இடும்பையும் ஒருங்கே தோன்றிய நிலை தன்வயிற் சிறப்பு அவன்வயிற் பிரிப்பு, இன்னா தொல் சூள் எடுத்தற்கண் ஆகியனவும், தலைவி தலைவன் பிரிவை உணர்ந்த நிலை பிரிவிடை ஆற்றாத நிலை,

பிரிவிடை ஆற்றாத நிலையில் தோழி வற்புறுத்தும் நிலை குறித்த பருவங்கண்ட நிலை முதலான பொருண்மைகளில் அமைந்த பிரிவுக் காலத்துத் தலைவி கூற்றுப் பாடல்களும் ஆய்வில் மதிப்பிடப்பெற்றுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. தொல். பொருள். இளம். உரை, கழக வெளியீடு, பொருளி.நூற்: 243,ப.357.
2. சி.கணேசையர்(உ.கு.ஆ) தொல்.பொருள் நச்சி.உரை. பொருளி நூற்: 243, ப.753.
3. தொல். பொருள்.இளம் உரை கழக வெளியீடு: நூற்: 141,ப.250 சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல். பொருள். நச்சி. உரை கற்பு: நூற்: 141, ப.543.
4. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.148.
5. மேலது, ப.151.
6. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.229.
7. தொல். பொருள்.இளம் உரை கழக வெளியீடு :ப.226.
8. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு: ப.578.
9. மேலது.
10. மேலது.
11. மேலது, ப.579.
12. க.வெள்ளைவாரணன், தொல்.கற்பியல், உரைவளம், ப.77.
13. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.கற்பு: ப.579.
14. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை: ப.579.
15. தொல். பொருள்.இளம் உரை கழக வெளியீடு:ப.270.
16. தொல். பொருள்.இளம் உரை கழக வெளியீடு:306.
17. குறள் 1129 உரை.
18. தொல். பொருள்.இளம் உரை கழக வெளியீடு:ப.272.
19. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை: ப.581.
20. க.வெள்ளைவாரணன், தொல்.கற்பியல், உரைவளம், ப.78.
21. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.கற்பு: ப.581.
22. மேலது.
23. மேலது.
24. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல். பொருள். நச்சி. உரை கற்பு, நூற்:147-42,ப.609.

25. தொல். பொருள்.இளம் உரை கழக வெளியீடு :ப.273.

26. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு,ப.583.

27. மேலது, ப.592.

28. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.273.

29. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு,ப.584.

30. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.274.

31. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு,ப.585.

32. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.274.

33. மேலது, ப.275.

34. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்,பொருள்,நச்சிஉரை
கற்பு, நூற்:147-21.

35. மேலது, நச்சி உரை, ப.586.

36. மேலது.

37. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.275.

38. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு,ப.588.

39. மேலது.

40. கலித்: 86-33-34.

41. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.275.

42. மேலது. ப.276.

43. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு,ப.589.

44. கலித்: 96.

45. கலித்: 93.

46. கலித்: 97.

47. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.276.

48. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு,
பக்.591-592.

49. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.276.

50. மேலது, ப.277.

51. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு,ப.593.

52. மேலது.

53. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.278.

54. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு,ப.597.

55. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.279.
56. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சிஉரை, கற்பு,ப.597.
57. மேலது, ப.598.
58. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.281.
59. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சிஉரை, கற்பு,ப.606.
60. நற்: 280.
61. கலித்:72:13-16.
62. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு: ப.35.
63. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சிஉரை, அகத், பக்.83-84.
64. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.270.
65. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சிஉரை, கற்பு,ப.580.
66. மேலது.
67. தொல்.பொருள்.இளம் உரை, கழக வெளியீடு, ப.278.
68. சி.கணேசையர் (உ.கு.ஆ) தொல்.பொருள்.நச்சி.உரை கற்பு,ப.594.
69. மேலது, ப.595.
70. மேலது, ப.596.
71. தொல்.பொருள், நூற்: 45.
72. தொல்.பொருள், நூற்: 145: 41

### களவுத் துறைகள்

தலைவியின் களவுப் பாடல்களைக் களவிற்குரிய துறைகளாகப் பாகுபாடு செய்யும் போது அவை பதின்மூன்று என்ற எண்ணிக்கையைப் பெறுகின்றன. இதனான், காதலுக்குத் திருமணமின்றேல் சமுதாயத்துக்கு வாழ்வில்லை. ஆதலின் அகத்திணை கண்ட தமிழ்ச் சான்றோர் வரைவுத் துறைகளாய் இருப்பதற்கும் திருமணக் கொள்கையே ஆகும்"[9] எனும் வ.சுப.மாணிக்கனாரின் கருத்து நினைக்கத்தக்கது.

1. இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு,
2. அறத்தொடு நிற்றல்,
3. இயற்பட மொழிதல்,
4. பகற்குறி இற்செறிப்பு,
5. இரவுக்குறி,
6. சிறைப்புறமாகத் தலைவன் இருக்கத் தலைவி கூறல்,
7. ஒருவழித்தணத்தல்,
8. காமம் மிக்க கழிபடர் கிளவி,
9. களவில் செலவுக்குறிப்பறிந்த தலைவி கூறல்,
10. வரைதல் வேட்கையும் வரைவிடைப் பிரிவும்
11. களவில் தலைவி வன்பொறை எதிரழிதல்,
12. வரைவு மலிவு,
13. உடன்போக்கு உணர்த்திய தோழிக்குக் கூறல்

ஆகியன களவுத்துறைகளாகப் பாகுபாடு செய்யப்பெற்றுள்ளன.

### துறைக் குறிப்புகள்

அகவொழுக்க நிகழ்ச்சிகளை வெளிப்படுத்தும் கூற்றுக் குறிப்புகளே துறைக் குறிப்புகள் என வழங்கப் பெறுகின்றன. "மக்கள் விலங்கு முதலியோர் வந்து நீருண்ணும் நீர்த்துறை போல மரபுவழிப் பொருள்களை வகைப்படுத்தி உரைப்பது துறையாம். நீர்ப்பயன் கொள்ளும் துறை போல இதுவும் பொருட் பயன் கொள்ளத் துணைபுரிவதாகும்"[10] என்பர்.

துறையாசிரியர்களால் அகப்பாடல்களுக்குத் துறைக்குறிப்புகள் குறிக்கப்பெற்றன. பாடல்களை இயற்றிய புலவர்கள் தாம் அறிந்தவற்றை உணர்ச்சிப் படிவமாக வெளிப்படுத்தினரேயன்றி

இத்தகைய குறிப்புகளைத் தரவில்லை. சில அகப்பாடல்களுக்கு வகுக்கப்பட்டுள்ள துறைக்குறிப்புகள் தெளிவில்லாமல் இருக்கின்றன. துறைக் குறிப்புகளை ஊகித்தறியும் அளவிற்குச் சில பாடல்கள் அமைந்துள்ளன."[11] அவ்வகையில் துறைக்குறிப்பினைப் பாடல்களுள் பொருத்தி ஆய்வது தனி ஆய்விற்குரியதாக உளது.

## துறைக் குறிப்பும் பாடலும்

துறைக்குறிப்பின்றிச் சில பாடல்களின் பொருள்களை உணர்ந்து கொள்ள முடியாது. சான்றாகக் குறுந்தொகை 92,227 ஆகிய இரண்டு பாடல்களைக் காட்டலாம்.

'ஞாயிறு பட்ட அகல்வாய்' எனத் தொடங்கும் குறுந்தொகை 92ஆம் பாடலுக்கு மு.வரதராசன் கூறும் கருத்து ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. "இப்பாட்டு என்ன கருத்துடையது என்பதே எளிதில் விளங்காதவாறு திரிபாக அமைந்துள்ளது. சொற்கள் பொருள் தருகின்றன ஆயினும் கருத்து விளங்கவில்லை. பிரிவாற்றாத காதலி ஒருத்தி மாலைப் பொழுதைக் கண்டு வருந்திக் கூறுவது என்று தெளிந்தபின் பாட்டைப் படித்தால் அதைப் பாடிய புலவரின் கற்பனை உணர்ச்சியை நாம் பெற முடியும்"[12] இக்கருத்தின் மூலம் தெளிவான துறைக் குறிப்புகளின்றிப் பாடல்களின் பொருளை உணர்ந்து கொள்ள இயலாது என்பது தெளிவாகின்றது.

## ஒரு பாடலும் இரண்டு மூன்றுதுறைகளும்

ஒரு பாடலுக்கு இரண்டு மூன்று துறைகள் அமைந்த நிலை, பல பாடல்களில் காணப்பெறுகின்றன. ஆயின் தலைவி கூற்றில் இரு துறைகளில் அமைந்த "இருபத்தாறு பாடல்கள் மட்டும் உள."[13] இப்பாடல்களை நோக்கின் அவற்றுள் கூற்று மயக்கம், களன் மயக்கம் ஆகிய இரண்டும் அமைந்து காணப்பெறுவது கருதத்தக்கதாகும்.

## கூற்று மயக்கம்

ஒரு பாடல் இரு கூற்றாளருக்கு அமைந்துவரின் அது கூற்று மயக்கம் எனப்பெறும். இது ஒற்றைக் காட்சி நாடகமாக (One Scene

play) அமைந்த சங்கப் பாடல்களுக்கு மட்டும் உரியது. தலைவி கூற்றில் "இருபது பாடல்களில் கூற்று மயக்கம் அமைந்துள."(14) அவற்றுள் நற்றிணை 240 ஆம் பாடல் தலைவன் தலைவி ஆகிய இருவருக்கும், நற்றிணை 225 ஆம் பாடல் பரத்தை, தலைவி ஆகிய இருவருக்கும் எஞ்சிய பதினெட்டுப் பாடல்கள் தலைவி, தோழி ஆகிய இருவருக்கும் உரியதாகக் கூற்று நிலையினைத் துறை ஆசிரியர்கள் குறிப்பர்.

இதற்குக் காரணம் யாதெனின், நம் என்று தோழியும், தலைவியும் தமக்குள் வேறுபாடின்றிக் கூறுவதால் தோழி கூற்றா? தலைவி கூற்றா? என ஐயுறும் நிலையில் பாடல்கள் அமைந்திருக்கின்றன. "நம் எனும் உளப்பாட்டுத் தன்மைநிலை தோழி, தலைவன், தேர்ப்பாகன் ஆகியோரிடமும் காணப்பெறுகிறது."(15) அது அக்காலத்தில் மரபாக அமைந்திருக்கின்றது.

## களன் மயக்கம்

ஒரு கூற்றாளருக்குரிய அகப்பாடல்களில் இரு காட்சிப் பின் புலங்கள் உடையதாய் துறையாசிரியர்கள் கூறியிருப்பது களன் மயக்கம் எனப்பெறும். தலைவி கூற்றில் இது குறித்து "ஆறு பாடல்கள் அமைந்துள."(16) இவற்றில் கூற்று தலைவிக்குரியதாக இருப்பின் களன் மட்டும் இரு நிலைகளில் அமைந்துளது. சான்றாக அகநானூறு 22-ஆம் பாடற்குரிய துறைக்குறிப்பானது,

"வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்துத் தலைமகன்
ஆற்றானாகத் தோழி தலைமகனை இயற்பழிப்பத்
தலைமகள் இயற்பட மொழிந்தது"(17) என்றும்,

"தலைமகன் இரவுக்குறி வந்து சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியதூஉம் ஆம்"(18) என்றும் இருநிலைகளில் அமைந்துள.

மேற்குறித்த சிந்தனைகளைக் கருத்தில் கொண்டு துறையாசிரியர்களின் துறைக்குறிப்பை அடிப்படையாக வைத்துக்கொண்டு தலைவியின் களவுக் கூற்றுகள் எடுத்துரைக்கப் பெறுகின்றன.

## 1. இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு

"சங்க இலக்கியத்தில் நாற்பது பாக்கள் இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என்ற மூன்று வகைக்கும் உரியன."[19] இவற்றில் தலைவி கூற்றில் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு ஆகிய இரண்டு வகை குறித்து "ஐந்து பாடல்கள் மொழிகின்றன."[20] அவை தலைவனொடு கொண்ட முன்னம் பெற்ற உறவினை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள.

### 1.1. தலைவி கூற்றின் வழி

வரைவிடை ஆற்றாத தலைவி தலைவனொடு தான் முன்பு தங்கிய இடத்தினை,

'. . . . . . . . . . . . . . . . துறுகல்

பைதல் ஒருதலைச் சேக்கும் நாடன்' (குறுந். 13: 2-3)

என்றும், தலைவனொடு இனிமையாக இருந்து விளையாடிய கடற்கரைச் சோலையையும், விளையாட்டின் இறுதியில் தலைவன் தேர்ப்பூட்டிப் புறப்பட, வழியனுப்பியதையும்,

'இன மணி ஒலிப்ப பொழுதுபடப் பூட்டி

மெய்ம் மலி காமத்து யாம் தொழுது ஒழிய

தேரும் செல் புறம் மறையும்' (நற். 187: 4-6)

என இற்செறிக்கப்பட்ட நிலையில் கூறுவர்.

இரவுக்குறியில் தலைவன் வாராது காமம் மிகுந்த நிலையில் தலைவி வீட்டின் முன்பக்கத்தில் உள்ள மரக்கிளை முறியப் பிடித்துக் காத்து நிற்கும் தலைவியின் நிலைமை முன்பு தலைவனைக் கொங்கைகள் உள்ள மார்பில் அழுந்தத் தழுவலை விட இனிதாய் உளது என உரைப்பதன் வழி, தலைவனுக்கும் தலைவிக்கும் முன்னர் ஏற்பட்ட புணர்ச்சியொழுக்கம் ஓதப்பெறுகிறது. இதனைத் தலைவி கூற்றாக,

'வனைந்து வரல் இளமுலை ஞெமுங்க பல்ஊழ்

விளங்கு தொடி முன்கை வனைந்து புறம்சுற்ற

நின்மார்பு அடைதலின் இனிது ஆகின்றே'(அகம்.58:7-9) என்பதன் வழியும், தலைவன் நீர் வேண்டித் தலைவியின் இல்லில் சென்று நீர் கொடுக்க வந்த தலைவியின் கையைப் பற்றியதை,

'வளைமுன்கை பற்றி நலிய' (கலி. 51:10)

எனக் கூறுவதன் வழியும், தலைவனொடு முன்பு அருவியிலாடியதை நினைத்து இற்செறித்த நிலையில்,

'துணிநீ ரருவி நம்மோ டாடல்' (ஐங். 224: 3)

என மொழிவதன் வழியும் அறியலாம். இவையாவும் தலைவனுக்கும் தலைவிக்கும் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு ஆகிய சூழல்களில் ஏற்பட்ட உறவினை வெளிப்படுத்தி நிற்கின்றன.

**1.2. தலைவன் கூற்று வழி**

தலைவன் கூற்றுப் பாடல்களில் இச்சூழல்களை ஆய்ந்தோமெனின் தலைவி செய்த (குறிப்பு மொழிகள்) முக மெய்ப்பாடுகளும், அல்ல கூற்றும் காணப் பெறுகின்றன.

'பொருஇல் ஆயமொடு அருவி ஆடி
நீர் அலைச் சிவந்த பேரமர் மழைக்கண்
குறியா நோக்கமொடு முறுவல் நல்கி' (நற். 44: 1-3)

எனத் தலைவி குறிப்பிட்ட நோக்கத்தொடு புன்னகை செய்ததை அறிய முடிகிறது. மேலும்,

'சொல் இனி மடந்தை என்றனென் அதன்எதிர்
முள்எயிற்று முறுவலும் திறந்தன
பல் இதழ் உண்கணும் பரந்தவால் பனியே' (நற். 155: 8-10)

எனக் கூறும் போது தலைவியின், முள்ளைப் போன்ற கூர்மையான பற்களினின்று நகையும் உண்டாயின. ஈர் இமைகளை உடைய மைதீட்டிய கண்களும் நீர்த்துளிகளைச் சிதறின என்ற வழி, தலைவியின் முக மெய்ப்பாடுகள் உணர்த்தப் பெறுகின்றன. தலைவி சொல் தடுமாறிப் பேசும் நிலையினை,

'சொல்லின் சொல் எதிர் கொள்ளாய் யாழநின்'
(நற். 39:1)

'சில்மொழிந் துவர்வாய் நகைக்கு மகிழ்ந்தாயே'
(நற். 190:9)

'மழலை அம்குறுமகள் மிழலை அம்தீக்குரல்
கிளியும் தாம் அறிபவ்வே'

(நற். 209: 5-6)

'. . . . . மடந்தை நின் கூர்எயிறு உண்கு என
யான் தன் மொழிதலின் மொழி எதிர் வந்து
தன் செய் குறிநிலை இனியகூறி'

(நற். 204: 6-8)

ஆகிய பாடலடிகள் கொண்டு உணரலாம். பொதுவாக நோக்குமிடத்து, தலைவியின் கூற்றுவழி, தலைவனோடு கொண்ட நட்பினை மற்றொரு சூழலில் தலைவி கூற்றாக மொழிகின்றாள். ஆயின் அச்சூழல்களில் தலைவி நிகழ்த்திய குறிப்பு மொழிகளையும் அல்லகூற்று மொழிகளையும் தலைவன் கூற்றுவழிப் பாடல்களின் வழியாகத்தான் உணரமுடிகின்றது.

## 2. அறத்தொடு நிற்றல்

அறத்தொடு நிற்றல் என்பது "களவையும் காந்தருவத்தையும் இனங்கண்டு அறியக் கூடிய துறையென்று களவியற் பகுதிக்குரியதாய் உள்ளது".[21] மற்றும் "பெண்ணுக்குரிய உயர் பண்பான கற்பைக் குறிக்கும். கற்பென்னும் கைகோளில் நின்று களவினைத் தமர்க்கு அறிவித்தல் இதன் பொருளாகும். ஈண்டு அறிவித்தல் என்பது நோக்கமன்று. தலைவி கற்பு நெறிப்பட்டுவிட்டாள் என்பதனை முதன்மையாக வலியுறுத்துவதே நோக்கமாகக் காணப்பெறும்."[22] இருப்பின் "களவுச் செய்திகளைத் தலைவி கூறுவதற்கு முன்னமேயே தலைவன் தோழியிடம் கூறியிருக்கிறான்"[23] என்பது நோக்கத்தக்கது. இத்துறையில் "ஐம்பத்து ஒன்று"[24] செய்யுட்கள் சங்க இலக்கியத்துள் உள. அவற்றுள் தலைவி அறத்தொடு நின்ற செய்யுட்கள் "பத்து"[25]ஆகும். அவை, தலைவி தோழிக்கு உரைப்பனவாகவும் நெஞ்சொடு கூறுவனவாகவும் அமைந்துள்ளன.

தலைவியுடன் ஒரு தலைவன் உறவு கொண்டதைத் தலைவி "நீ ஆடும் சிற்றிலையை நானும் புனையட்டுமா, கூந்தல் புனையவா, முலைமேல் தொய்யில் எழுதட்டுமா"(26) எனக் கேட்டவன், என் கூந்தலை அள்ளியெடுத்து நான் அணிந்த மாலையை முகர்ந்தான். என் கையைத் தாங்கி என் கண் மறையுமாறு வைத்துக் கொண்டு உலைவாய் உயிர்ப்பது போல நெட்டுயிர்ப்புச் செய்தான். கையால் தன் பிடியைக் களிறு மையல் கொண்டு தழுவுவது போல என் மேனி முழுவதும் தடவி அவன் வசமாக்கிய நிலையினை,

'நரந்தம்நாறு இருங்கூந்தல் எஞ்சாது நனிப்பற்றிப்
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை ஒருகாழ்
விரல்முறை சுற்றி மோக்கலும் மோந்தனன்
நறாஅ அவிழந் தன்ன என்மெல்விரற் போது கொண்டு
செறாஅச் செங்கண் புதைய வைத்துப்
பறாஅக் குருகின் உயிர்த்தலும் உயிர்த்தனன்
. . . . .   . . . . . .   . . . . . .   . . . . .
தொய்யலம் தடக்கையின் வீழ்பிடி அளிக்கும்
மையல் யானையின் மருட்டலும் மருட்டினன்'

(கலித்.54: 5-14)

எனக் கூறுவள். ஈண்டு "தழையைக் கையுறையாகக் கொடுக்க, பிற தழையும் மலரும் பார்த்து அறியாதவர் போன்று தோழியை வினவ"(27) மேனி வேறுபாட்டையும், செயல் மாற்றத்தையும் கண்ட தாய் அணங்கு தீண்டியது போலும் ஆராய முற்படுகின்றாள்."(28) அத்துடன் "நொது மலர் வரைவும் என்னை நோகின்றது"(29) எனவும், "என் கண் தேடித்தந்த காம நெருப்பு என் எலும்பையும் வருத்துகின்றது; ஏனெனின் தலைவனை முயங்குதல்"(30) இன்மையின் எனவும் கூறுவள். மேலும்,

"அவனைத் தேடி ஆடுகளம் தோறும் அலைவதால்"(31) நானும் அவனும் ஓர் ஆடுகள இனமானோம். தலைவனைக் கண்ட மகளிர் பலருள் யான் மட்டுமே உறங்காது உள்ளேன். ஆதலால் என் நெஞ்சத்தை அவன் கவர்ந்து போயிருக்க வேண்டும். இந்நிலை

நீடிக்குமானால் "நான் இறந்துபடுதல் உறுதி."[32] ஆதலின் "நானும் அவனும் ஓர் ஆடுகள இனமானோம்."[33] எனவே, தோழி நீ அறத்தொடு நிற்பாயாக என வரும் சூழல்களில் தலைவி அறத்தொடு நிற்கும் நிலையைக் காண முடிகின்றது.

### 3. இயற்பட மொழிதல்

இயற்பட மொழிதல் எனும் துறை களவு, கற்பு ஆகிய இரு கைகோளிற்கும் அமைந்து வருவதாகும். களவில் வரைவு நீட்டிக்கும் தலைவனையும், கற்பில் புறத்தொழுகும் தலைவனையும், தலைவி, தோழியர் அவன் இயல்புகளை இயற்படவும் இயற்பழித்தும் மொழிந்து அவனைச் சிந்திக்கத் தூண்டுகின்றனர். இவற்றுள் இயற்பட மொழிதல் தோழிக்கும் உரியதாகச் சங்கப் பாடல்கள் புனைகின்றன. அவ்வகையில், தலைவி களவில் இயற்பட மொழிதலாக அமைந்த செய்யுட்கள் "ஏழாகும்."[34]

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன், இரவுக்குறியில் சிறைப்புறமாக நிற்க, தலைவன் விரைவில் வரைவு செய்ய வேண்டும் எனும் நோக்குடன் தோழி தலைவனின் இயல்பைப் பழிக்க, அதற்குத் தலைவி, "என் அழகு தொலைய, தோள் நலம் கெட,"[35] தலைவன் பிரிந்தான். "இவை யாவும் முருகனால் ஏற்பட்டது என்று தாய் வெறியாட்டு எடுப்பதற்குக் காரணம் தலைவன் எனத் தோழி பழிக்க இது யாரால் உண்டானது எனும் ஐயம் கொள்ளாதபடி,"[36] வரைதற்குரிய பொருள் நிரம்பப் பெற்று வரைந்து கொண்டு இல்லறம் நடத்துவான். அவன் கல்லைக் காட்டிலும் வலிமையானவன் என்பதை,

'. . . .    . . . . . . .   மான்மறி
சுரைபொழி தீம்பால் ஆர மாந்திப்
பெருவரை நீழல் உகளும் நாடன்
கல்லினும் வலியன் தோழி'

(குறுந். 187: 1-4)

எனக் கூறுவள்.

அவ்வகையில் மணம் செய்யும் தலைவன் "முதல் நாள் புணர்ச்சி போல இன்றும் புணர்வு இன்பம் பெறுவான்."[37] அப்படிப் புணர்பவன் "அருவியானது வேங்கையைப் பாதுகாப்பது போலத் தன்னைச் சார்ந்து என்னைக் காப்பான்." இதனை

'அருவி வேங்கைப் பெருமலை நாடற்கு
யான்எவன் செய்கோ என்றியான்அது
நகை என உணரேன் ஆயின்
என் ஆகுவை கொல் நன்னுதல் நீயே'

(குறுந். 96)

எனக் கூறி, அத்தகையவனொடு "நான் கொண்ட நட்பு பூமி, வானம், கடல் ஆகிய உலகில் உள்ள அனைத்தையும் விடச் சிறந்தது."[38] அதனால் "தலைவன் செய்த கொடுமைகளை வள்ளையாகப் பாடுவோம் என்பதை விடுத்து அவன் புகழைப் பாடுவோம்"[39] எனத் தலைவனின் இயல்பைத் தலைவி உணர்த்தி வரைவுக்கு வழி வகுக்கின்ற திறத்தை இவ்வகைக் கூற்றுப் பாடல்களில் காணலாம்.

### 4. பகற்குறி இற்செறிப்பு

பகல், இரவுக் குறிகள் "இல்லறம் ஏற்பதற்கு முன்னர், பயிற்சிப் பள்ளி போல் இயங்கும் களவொழுக்கத்தினைத் தக்க வகையில் நீளச் செய்யும் போக்கில் தான் அமைக்கப் பெறுகின்றன"[40] என்பர்.

தலைவி கூற்றில் அமைந்த பகற்குறி இற்செறிப்புச் செய்யுட்களை நோக்கின், தலைவி தலைவன் பிரிவை நினைத்தும், தமரால் இற்செறிக்கப்பட்டுத் தோழியொடும், தன் நெஞ்சொடும் பேசுவதாக "ஒன்பது"[41] செய்யுட்கள் அமைந்துள.

தலைவன் பகற்குறி வந்து திரும்பினான். அவன் செல்லுதலை நோக்கித் தலைவி, "ஞாயிறு மறைய இருள் வரத் தொடங்கியது. நாம் தலைவனொடு ஆடிய பொழிலும் மறைந்து இனி இவ்வூர் எப்படியிருக்குமோ?."[42] ஏனெனின் என் வளை நெகிழவும்,"[43] "மேனி பசப்பவும், தோள் நெகிழவும்,"[44] "பிரியேன் எனச் சூள் செய்தவன்

பிழைத்து விட்டான், பிழைத்தவனைத் தெய்வம் வருத்தும் காரணமாக அவனைப் பாதுகாக்க வேண்டித் தெய்வத்திடம் பரவும் நிலையினை"[45] "அன்னை அறியின் பொருளைச் சொரிந்த கலக்கம் அடைவாள். மற்றும் வேலன் வந்து ஆடுவானாயின் நான் நாணம் அடைவேன்."[46]

ஆதலின் "தலைவன் மணந்து கொள்ளாது போயின் என் செய்வது"[47] எனப் புலம்பி வருந்திய நிலையில் முற்றுகைப்பட்ட வீரன் போல் தலைவி காப்பு மிகுதியாய் இருந்ததனை,

'நல் எயிலுடையோர் உடையம் என்னும்
பெருந்தகை மறவன் போல' (நற். 287: 3-4)

எனக் கூறுவள். காரணம் "தலைவியின் உடல் நிலை வேறுபட்டமை கண்ட தமர் அவளைப் புறம் போகாது இற்செறிந்து ஓம்பினர்."[48] இதனால் "மனம் புண்பட்ட தலைவி தோழியிடம் மகன்றிற் பறவைகள் போன்று பிரிந்து வாழ இயலாத நீங்காத காதலொடு தலைவனைப் பிரிந்துறைதலைவிட இறத்தல் மேல்."[49] ஏனெனில், தலைவனொடு அளவளாவியதனால் உண்டான வேறுபாடு அவனை முன்பு கண்டு மகிழ்ந்த இன்பத்தைப் போக்கி விட்டது என்பதை,

'. . . .   . . . . . .   துறைவனொடு ஒருநாள்
நக்குவிளை யாடலும் கடிந்தன்று
ஐதே கம்மமெய் தோய் நட்பே'

(குறுந். 401: 4-6)

எனக் கூறுவள். மேலும் "என் நெஞ்சமானது தலைவனையே நினைந்து அவன்பாற் செல்லத் துடிக்கின்றது."[50] இருப்பின் "தலைவனைக் காணுங்கால் அவனுள் மாறுபட வேண்டும் என்ற எண்ணம் அவனைக் கண்டவுடன் அவன் மீது விருப்பம் கொள்கிறது"[51] என நெஞ்சைக் கடிந்து மொழிகின்றாள். அவ்வகையில் தோழியிடம் கூறும் பாடல்களில், தலைவனோடு கொண்ட உறவு துன்பத்தைத் தருகிறது. ஆயின் என் நெஞ்சமானது தலைவனையே நினைந்து சுழலுகின்றது என்பதைப் பகற்குறி இற்செறிப்பால் அறியலாம்.

## 5. இரவுக்குறி

தலைவி கூற்றில் அமைந்த இரவுக்குறிச் செய்யுட்கள் "ஒன்பது.[52] அதில் தலைவி தலைவனொடும், தோழியொடும் கூற்று உரைக்கின்றாள். அவை,

அ. இரவுக்குறி மறுத்தல்

ஆ. இரவுக்குறி நேர்தல்

இ. அல்லகுறிப் படுதல்

என மூன்று பகுப்பாகப் பகுத்து விளக்கப் பெறுகிறது.

### அ. இரவுக்குறி மறுத்தல்

தலைவன் இரவு வந்து ஒழுகுவதனால் "என்மேனி அழிகின்ற துன்ப நிலையைத் தலைவனுக்கு எடுத்துக்கூறி, இம் மெலிவிற்குக் காரணம், இருள் நெறியில்"[53] தலைவன் "பாம்பு வாழும் மலையில் இடி முழங்கும் நேரத்தில் பெரிய வெள்ளத்திற்கு வழியில்லாமல் குறுக்கிடும் மலைச்சாரல் வழியே சிறிய பாதை அமைத்து வருவான்."[54] அத்துடன் "கழியில் வெள்ளம் மிகும் போது உயர்ந்தும் அது தாழ்ந்து செல்லும் போது தாழ்ந்தும் தாழை நிற்றல் போல,"[55] என் நெஞ்சம் காம மிகுதியால் அவர்பால் சென்றும், மிகாத போது அவர் வரும் வழியின் ஏதம் கருதி வருந்தியும் நிற்கின்றது என்பதை,

'. . . . . . . . . . . . . பல்வரிப்
பாம்புபை அவிந்தது போலக் கூம்பி
கொண்டலின் தொலைந்த ஒண்செங்காந்தள்
கல்மிசைக் கவியும் நாடற்க என்
நல்மா மேனி அழிபடர் நிலையே'

(குறுந். 185)

எனத் தலைவனுக்கு ஏதம் வரும் என்று அஞ்சி இரவுக்குறி மறுக்கின்றாள்.

### ஆ. இரவுக்குறி நேர்தல்

இரவுக்குறியில் "தலைவனுடன் கூடி மகிழ்ந்த"[56] தலைவி தன் பிரிவாற்றாமையும் தன் துன்பத்திற்கு உறுதுணையான தோழியின்

மாண்பினைக் கூறுகையில், தலைவ, நீ இரவில் வருவதால் உண்டாகும் மகிழ்ச்சியைவிட, தோழி இரவில் என் ஆற்றாமை கண்டு இப்போதே தலைவர் வருவார் என்று தேற்ற, அப்போதே நீயும் வருவாய் ஆதலின் நான் தோழியிடம் நீ இரவுக்குறி நேர்ந்தது நன்று எனக் கூறியதும் அவள் மகிழ்வாள். அவளது மகிழ்ச்சியே நின் வருகையைவிடப் பெரிதும் இனிதாயிற்று. இருப்பின் "நீ வாராது இருந்தால் நான் இறந்துபட்டிருப்பேன்"(57) எனக் கூறுவள்.

## இ. அல்லகுறி

தலைவன் இன்றிரவு யான் வந்து இன்ன ஓசையை உண்டு செய்வேன். அது உணர்ந்து நீ வருக என்று போயினன். ஆயின், அவ்வரவின்கண் அத்தகைய ஓசை பறவையால் உண்டாயிற்று. அதனைத் தலைவன் செய்ததாக எண்ணித் தலைவி குறியிடம் சென்று, தலைவனைக் காணாது, "அவன் வரவை எதிர்பார்த்து வீட்டின் முன்பக்கத்தில் உள்ள கிளை முறியப் பிடித்துக் காத்து நிற்கும் நிலைமையில் அவள் கொங்கைகள் அவன் மார்பில் அழுந்தத் தழுவுதலைவிட இனியதாய் உளது"(58)என்பள். இருப்பின், பின் ஒரு நாள் அவ்வோசை உண்டான போது தலைவன் வந்துள்ளான் எனத் தோழி கூற அவள் தோழியிடம், 'மெய்யோ' எனக் கேட்டு, மெய்யெனின் நீ வாழ்வாயாக! எனக்கூறி, அவள் அல்லகுறிபட்ட செய்தியை,

'மைப்பட்டன்ன மாமுக முசுக்கலை
ஆற்றப் பாயாத் தப்பல் ஏற்ற
கோட்டொடு போகி யாங்கு'

(குறுந். 121: 2-4)

எனக் கூறுவள். இங்ஙனம் தலைவனுடைய இரவுக்குறி வருகையை நினைந்தும் ஏதத்திற்கு அஞ்சியும் ஆற்றாமையால் அவன் வருகையை நோக்கியும் மிக்க காமத்தால் அல்லகுறிப்பட்டும் தலைவி தன் மொழியால் கூறியமை உணர்த்தப் பெறுகிறது.

## 6. சிறைப்புறம்

தலைவன் புணர்வை நாடிச் சிறைப்புறமாக இருக்க, தலைவி கூறும் கூற்றுகள் அவளது மனநிலையை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன. அவை, தலைவி கூற்றாகச் சங்க இலக்கியத்தில் "ஐம்பத்தைந்து"[(59)] செய்யுட்களில் அமைந்துள. இப்பாடல்களின்வழி தலைவியின் புணர்வு நோக்கம், வரைவு நோக்கம், பிரிவாற்றாமை ஆகியன அறியப்படுகின்றன. மேலும், தலைவியின் மன நிலைக்கு ஏற்பத் தலைவனுடன் அவள் கொள்ளும் உறவிலும் தம் உணர்வினை வெளிப்படுத்தும் முறையை உணர முடிகிறது.

### 6.1. புணர்வு நோக்கம்

தலைவனின் வரவினை எதிர்நோக்கிய மனநிலையில் தலைவி அவனது வரவிற்காகவும் புணர்விற்காகவும் ஏங்கிய நிலையில் தலைவி,

தன் கண்கள் துயிலாமல் நாழிகைக் கணக்கர் போன்று வருந்தி நிற்பள். இதனை,

'. . . . .   . . . . .   . . . . .   என்கண்
துஞ்சா வாழி தோழி காவலர்
கணக்கு ஆய்வகையின் வருந்தி'

(குறுந். 261: 5-7)

என்பள். இருப்பின் "துறைவனை நீ காணின் என் நிலை கூறி, அவனை இடித்துரையாதே."[(60)] ஏனெனின், காப்பு மிகுதிக்கண் இரவில் வந்த தலைவனைக் "காண இயலாமல் நம்மைப் பெரிதும் துன்பத்திற்கு ஆளாக்கியது இரவில் பெய்த மழை."[(61)] மற்றும் ஊர் துஞ்சாமை, அன்னை துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல் போன்ற புறத்தடைகளை மீறித் தலைவன் முன்பொருமுறைக் காவலர் அறியாமல் வந்து தன்னைத் தழுவிச் சென்ற நிலையினை,

'காவலர் அறிதல் ஓம்பிப் பையென
விழாக் கதவம் அசையினன் புகுதந்து
உயங்கு படர் அகலம் முயங்கி தோள் மணந்து
இன்சொல் அளைஇ பெயர்ந்தனன் தோழி'   (அகம். 102: 12-15)

என மொழிவள். அத்தகையவன் "இன்று வாராமையால் என் நெற்றியில் பசலை உண்டாயிற்று. "[62] ஆதலின் "தாய் தந்தையர் தம் தொழில் நாடிச் சென்ற இவ்வேளையில் தலைவர் வருவாராயின், அவரோடு அளாவுதற்கு இதுதான் சரியான சமயம். இதனைத் தலைவனுக்கு அறிவுறுத்தினால் மிகவும் நன்மை பயக்கும்"[63] எனத் தலைவி கூறுவதன் மூலம் சிறைப்புறமாகத் தலைவன் இருக்கத் தலைவியின் புணர்வு வேட்கை வெளிப்படையாகத் தோழியிடம் உணர்த்தப் பெறுகிறது.

## 6.2. வரைவு நோக்கம்

தலைவன் சிறைப்புறமாக இருக்கையில் தலைவி அவனுக்கு வரைவு நோக்கத்தைத் தூண்டுவதற்குப் பல காரணிகளை அமைத்துக் கூறுகின்றாள். அவை,

1. வழியின் அச்சம்
2. உடல் மெலிவு
3. அலர்
4. இற்செறிப்பு
5. வெறியாட்டு
6. தலைவனைப் பழித்தல் (வரைய முயலாமை)
7. கற்பின் வேட்கையைத் தூண்டுதல்
8. பிரிவாற்றாமை

என்பவைகளாகும்.

### 6.2.1. வழியின் அச்சம்

இரவில் தலைவன் வரும் "நெறிகள் அரியவை; ஆறு முதலியவை உடையவை; இவ்வழியின் அருமையை எண்ணாமல் வரும் அவர் தவறு உடையவர் அல்லர். அவரை வரும்படியாகச் சொன்ன நீயும் தவறுடையவள் அல்லை. யானே தவறுடையேன்."[64] இச் செயலால் "என் கண்கள் கண்ணீரை வடிக்கவும், நெஞ்சம் கவலையால் வருந்தவும் ஆயிற்று."[65] இருப்பின், நம் அன்னை தினை

காக்கும் பொருட்டு, எம்மைச் செல்லச் சொன்னமையால், இனி ஈண்டு இரவில் வாராது ஆண்டு பகலில் வருக என்பதை,

'வளைவாய்ச் சிறுகிளி விளைதினைக் கடீஇயர்
செல்க என்றோளே அன்னை என நீ
சொல்லின் எவனோ தோழி
. . . . . .   . . . . .   . . . . . .   . . . . . .
ஆர் இருள் நடுநாள் வருதி
சாரல் நாட வாரலோ எனவே'

(குறுந். 141: 1-3, 7-8)

என வழியின் அச்சம் உரைத்து, வரைவு நோக்கைத் தலைவனுக்கு உணர்த்துவள்.

## 6.2.2. உடல் மெலிவு

தலைவன் சிறைப்புறத்தே நிற்கத் தலைவி தன் தோள் மெலிவைத் தோழிக்குக் கூறித் தலைவன் வரைதல் வேண்டும் என்பதை, 'நம் தலைவனைக் கண்டன என் கண்கள்; அவன் இன்னுரையைக் கேட்டன என் செவிகள்; இங்ஙனம் கண்டும் கேட்டும் அறியாத என் தோள்கள் நெகிழ்ந்து வாடுவது வியப்பிற்குரியது' என மொழிவள். இதனை,

'புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கன்
கண்டனமன் எம் கண்ணே அவன்சொல்
கேட்டனமன் எம் செவியே மற்று அவன்
மணப்பின் மாண்நலம் எய்தித்
தணப்பின் நெகிழ்ப்ப எம் தடமென் தோளே'

(குறுந். 299: 4-8)

என்பள். ஆயின் "தலைவன் வரவில்லை. நம் தோள்கள் பூரித்துப் பெரிதும் பொலிவுற்றன. காரணம் வரைதற்கு வேண்டுவன ஈட்டித் தலைவன் கொண்டு வந்துள்ளான்"[(66)] என்று மகிழ்ந்து கூறுவதும் நோக்குதற்குரியது.

### 6.2.3. அலர்

களவில் தலைவன் ஈண்டு வந்து செல்வதை ஆயத்தார் யாவரும் அறிந்தனர். அதனால் அலர் பெருகியது என்பதைத் தலைவி "நம் தலைவனுடைய தேர் இரவில் வந்து சென்றதை ஆயமகளிர் அனைவரும் கண்டனர். இங்ஙனமாகலின், அந்நிகழ்வு ஊரில் உள்ளோர் அலர் மொழியாய் ஆயிற்று."(67) அது கேட்டு அன்னை என்னை நோக்கி, நீ அத்தன்மை உடையவளோ என்று வினவினாள். அது கேட்ட யான் இது கொடுமையென்று தலைவி தன்னுள் சொல்லிக் கொள்வதை,

'. . . .    . . . .    . . . .    நென்னல்
ஓங்கு திரை வெண்மணல் உடைக்குந் துறைவற்கு
ஊரார் பெண்டு என மொழிய என்னை
அது கேட்டு அன்னாய் என்றனள் அன்னை
பைபய வெம்மை என்றனன் யானே' (ஐங். 113) என்ற செய்யுள்

சுட்டும். இதனால் "தலைவன் என்னை நெருங்காதபடி இருக்கச் செய்தனர்."(68) அங்ஙனமாகவும், "நம் தலைவனாலும் நான் விரும்பப்படாதவளாகி விட்டேன்."(69) இங்ஙனம் அலர் எழுதல் கண்டும் அவன் வரையாது ஒழுகுதற்குக் காரணம் என்ன? எனும் வினா எழுவதன் மூலம் தலைவனுக்கு வரைவு உணர்த்தப்பெறுகிறது என்பதை,

'புன்னை அம் சேரி இவ்ஊர்
கொன்அலர் தூற்றும் தன்கொடுமையானே'

(குறுந். 320: 7-8)

என்று தலைவி கூற்றுவழி அறியலாம்.

### 6.2.4 இற்செறிப்பு

"இற்செறிப்பு என்னும் குறியீட்டுச் சொல் பெண்களை வீட்டுக்குள் கட்டுப்படுத்திய நிலையைக் காட்டுவதாகக் கூறுவர்."(70) உடல் மெலிவு, ஊரலர் காரணமாகத் தான் இற்செறிக்கப்பட்ட செய்தியைத் தலைவி "நம் கடற்கரையில் ஒரு தேர் வந்து மீண்டது என ஊரில் அலர் கூற அது கேட்ட என் அன்னை பெரிதும் கடிந்து வருந்தினாள்"(71) என்றும்,

தலைவனின் வருகையை மறைத்தற் பொருட்டு, "அதோ வருகின்றான், இதோ வருகின்றான் என ஆரவாரம் செய்யும் தாய்க்கு, வந்தது ஆளன்று; குரங்கு என்று பொய் பல கூற நேர்ந்தது"[72] என்றும் கூறுவள். ஆயின் அன்னை, தன் செயலில் அய்யம் கொண்டு பூம்பொழில்களிடத்து விளையாடுதலும், சுனை நீராடலும், அருவியாடலும் ஆகிய ஆடல்களை மறக்கச் செய்ததை,

'துனிநீர் அருவி நம்மோடு ஆடல்
எளிய மன்னால் அவர்க்கு இனிய
அரிய ஆகுதல் மருண்டனென் யானே'

(ஐங். 224: 3-5)

எனச் செப்பி, யாம் "கற்புக் கடம் பூண்டமையையும் பொருட்படுத்தாராய் இற்செறித்தனர். ஆதலின் தலைவன் நட்பினைப் பிரியாது வாழ்தற்குரிய நோன்பு செய்யாது சிறியவர்கள் ஆனோம். இனி, உயிர் வாழும் சிறுமையும் இல்லாமை போயிற்று"[73] எனக் கூறுவதன் வழி தலைவனுக்கு வரைவு நோக்கம் அறிவுறுத்தப் பெறுகிறது.

### 6.2.5. வெறியாட்டு

வெறியாட்டுச் சடங்கு என்பது "முருக வழிபாட்டைத் தலைவி தோழியாகிய இருவரும் கற்புக்கு இழுக்கென நினைத்ததும் தலைவனுடன் நேராகக் கூறுவது நாணிழுக்கு என நினைத்ததும் இதற்குக் காரணம் ஆகலாம். அகநிலை வெறியாட்டு முருக வழிபாட்டைச் சார்ந்து இருத்தலானும், களவில் மட்டும் இடம் பெறலானும் இது குறிஞ்சித் திணைக்குச் சிறப்பாக அமைகிறது என்பர்."[74] இவ்வெறியாட்டில் தலைவன் வரும் வழியின் குற்றத்தை எண்ணி, அச்சப்பட்டுத் தலைவி வேறுபட்டதை அறிந்த தாய், "அவள் வேறுபாட்டை முருகன் அணங்கியது என்று கருதி வெறியாட்டு எடுக்க,"[75] "இது நன்றோ? எனத் தலைவி கேட்டு,"[76] "இன்று இரவு மட்டும் அவன் வாராதிருப்பின் நன்று"[77] என்று தான் எண்ணியதையும் வெறியெடுக்கும் வேலனைப் பார்த்து "உம் இறைவன்

யானை அம்புடன் காட்டில் விலங்கு சென்ற அடிச்சுவடு ஒற்றி வேட்டையாடச் செல்வது உண்டோ?” என்பதை,

‘. . . . . . . . . . . . . . . . . வெறிஇன
அன்னை தந்த முதுவாய் வேலன்
எம் இறை அணங்கலின் வந்தன்று இந்நோய்
தணி மருந்து அறிவல் என்னும் ஆயின்
வினவின் எவனோ மற்றே கனல் சின
மையல் வேழ மெய் உளம்போக
ஊட்டியன்ன ஊன்புரள் அம்பொடு
காட்டுமான் அடி வழிஒற்றி
வேட்டம் சொல்லுமோ நும்இறை . . . .’

(அகம். 388: 18-26)

என வினவினால் என்ன? எனத் தன் மனக்கிடக்கையும் தலைவன் உணரும் வகையில் கூறுவதன் மூலம், வரைவு நோக்கம் உந்தப்படுகிறது.

### 6.2.6. தலைவனைப் பழித்தல்

களவாய் இருந்த நட்பு வரைவு மூலம் விரிந்து மணக்கச் செய்யாத மனிதன் என்ன மனிதன். துன்புறுத்தும் காம நோயைச் சொல்வது ஆண்களுக்கு முடியும்; தன் மார்பால் வருந்துகிற பெண்களைப் பற்றி அறிந்து கொள்ள முடியாத தலைவன் என்ன தலைவன் எனும் பொருளில்,

‘நோய் அலைக் கலங்கிய மதன்அழி பொழிதல்
காமம் செப்பல் ஆண்மகற்கு அமையும்
யானே பெண்மை தட்ப நுண்ணிதின் தாங்கி
. . . . . . . . . . . . . . . . . . .
மார்பு அணங்குறுநரை அறியாதோனே’

(நற். 94: 1-3,9)

என்றும் “நம் இன்னா நிலையை உணர்ந்து பிற நெறிகளை மேற்கொண்டு வரைவொடு வராதவன் உண்மையில் அன்பு பெரிதும் இல்லாத வன்கண்ணன் ஆவன்”(78) என்றும் கூறுவள். மேலும்.

இத்தகைய தன்மையுடையவன் "கள்வன் ஆவன்"[79] எனத் தலைவனைப் பழித்துக் கூறும் வழி வரைவு நோக்கம் ஊட்டப் பெறுகிறது.

### 6.2.7. கற்பின் வேட்கையைத் தூண்டுதல்

அறனில்லாத தலைவனைக் கண்ட நிலையில் அவனை ஊடுவேன்; வாயின் நேராது மறுப்பேன் எனக் கூறும் தலைவி, அவன் எதிர் சென்றவுடன் சால்புடைய கற்பு மகளிர் தம்மைக் கணவர் இகழுமிடத்துத் தாம் அவரை ஏத்தி வணங்கும் தன்மையராய் இருப்பதை,

'அறனிலாளற் கண்ட பொழுதில்
சினவுவென் தகைக்குவென் சென்றெனென்
பின் நினைந்து இரங்கிப் பெயர் தந்தேனே'

(ஐங். 118: 2-4)

என்னும் நன்னெறியை நினைத்துத் தலைவன் பொருள் ஈட்டி வந்து என்னை மணந்து மகிழ்வான்"[80] என்றும், "தலைவன் தம் இயல்புக்கு ஒவ்வார் எனினும் அவரொடு பழகி அவருடைய இயல்புகளைப் பெற்று வாழ வேண்டும்"[81] என்ற என் விருப்பத்தை உணர்ந்தவன் ஆதலின், இத்தனை அருங்கடியையும் பொருட்படுத்தாமல் இதோ வந்து விட்டான்"[82] என்றும், அவன் குறியிடந்தோறும் 'நம்மைக் கூடித் தண்ணளி புரிந்தவன்; அந்நன்றி மறப்பதற்கு உரியதன்று. ஆதலால் எம்பெருமானைப் பழியாதே' எனும் தன்மையினை,

'. . . .   . . . .   . . . . நலனே
இன்னது ஆகுதல் கொடிதே புன்னை
அணிமலர் துறைதொறும் விரிக்கும்
மணிநீர்ச் சேர்ப்பனை மறவா தோர்க்கே'

(ஐங்.117)

எனவும் கூறும் வழிக் கற்பின் திறன் தலைவனுக்கு உணர்த்தப் பெறுகிறது.

### 6.2.8. பிரிவாற்றாமை

பகல், இரவுக் குறி இடையீடு, ஊரலர் ஆகியவற்றால் தலைவியைச் சந்திக்க இயலாது பிரிந்து மீண்டும் தலைவன் வந்த நிலையில் தலைவி அப்பிரிவின் ஆற்றாமையைக் கூறுகையில்,

1. தோள் மெலிவு, வளை நெகிழ்வு, பசலை ஆகியவற்றை முதன்மை செய்தல்.
2. பொழுதினை முதன்மை செய்தல்
3. தலைவன் வஞ்சினம் பொய்த்தமை கூறல்
4. தலைவன் இருக்குமிடம் செல்லத் துணிந்தமை

ஆகியவற்றை மொழிகின்றாள்.

#### 6.2.8.1. தோள் மெலிவு, வளை நெகிழ்வு, பசலை ஆகியவற்றை முதன்மை செய்தல்.

தலைவன் பிரிவால் "அவன் பொருட்டு என் வளையல்கள் நெகிழ்ந்தன; தோள்கள் மெலிந்தன; என் நாணமும் அழிந்து ஒழிந்தது."(83) அது மட்டுமல்லாது, மகளிர் பலருடைய நலத்தினுஞ் சிறந்த "என் பெண்மை நலன் தலைவனொடு சென்றொழிந்தது."(84) இத்தகைய தலைவன் பிரிவால் தன் தந்தை நாடனொடு உள்ள உறவை அறிவான் போல் பொன்னாலாகிய தோள் வளையைத் தகுதிப்படச் செய்து தந்தார் என்பாள். இதனை,

'அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாஅது
மருந்து ஆய்ந்து கொடுத்த அறவோன் போல
. . . . .      . . . . . .      . . . . . .      . . . . .
போக்கு இல் பொலந்தொடி செறீஇயோனே'

(நற்: 136. 2-3,9)

என்பள். இருந்தாலும், அவனுடன் கொண்ட உறவினை மறக்க இயலாமல், "நீல மணி போன்ற நிறம் உடைய கண்கள் பொன்னிறப் பசலை உற்றன."(85) "சித்திரப்பாவை போன்ற அழகும் அழிந்தொழிந்தது."(86) எது எப்படி இருந்தாலும் அவனுடைய செல்வ மிக்க இல்லத்தில் மகப்பெற்று தலைவனின் அன்பு பாராட்ட இல்லறம் நடத்துதலை விரும்பிய தன்மையினை,

'. . . . .   . . . . .   . . . . .   மடப்பிடி
மழை தவழ் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்று
கழைதின் யாக்கை விழைகளிறு தைவர
வாழைஅம் சிலம்பில் துஞ்சும்
சாரல் நாடன் சாயல் மார்பே'

(அகம். 328: 11-15)

எனக்கூறுவதோடு, படுக்கையில் கிடந்து வருந்தினாலும் அவற்றைக் கவனியாமல் தலைவனைக் கண்டவுடன் மகிழ்ச்சியொடு எழுவேன் என்றும் கூறிப் பிரிவின் ஆற்றாமையை உணர்த்தித் தலைவனை வரையத் தூண்டுவள்.

### 6.2.8.2. பொழுதினை முதன்மை செய்தல்

தலைவன் பகற்குறி வந்து திரும்பிச் செல்லுதலை ஆற்ற இயலாத தலைவி, "ஞாயிறு மறைய இருள் வரத் தொடங்கும் மாலை வேளையில் தலைவனொடு ஆடிய பொழில் மறையத் தொடங்கியது."(88) தலைவி பகற்பொழுதினை எப்படியோ கழித்து விடுவாள். ஆயின் கொடியோன் வரும் முன்னர் தன் வரவினை அறிவிக்கப் பணியாளன் முற்பட இருந்து பின்வருவது போன்று மாலையும் காலையும் வருத்தமடையச் செய்கிறது. இதனை,

'. . . . .   . . . . .   . . . .   நாமழ
நீல இருங்கழி நீலங் கூம்பும்
மாலை வந்தன்று மன்ற
காலை அன்ன காலை முந்துறுத்தே'

(ஐங். 116)

எனக் கூறுவள். அது மட்டுமின்றி. இம்மாலைப் பொழுதானது "கொலைக் களத்து ஏதிலர் போல வருகிறது."(89) "தலைவனின் இப்பிரிவுத் துன்பம் பல நாட்கள் நுகரும் பெருந்துன்பம் போன்று மிகவும் நீடியதாக என்னை வருத்துகின்றது"(90) எனப் பொழுதினை முதன்மை செய்து தலைவி வருந்துவள்.

### 6.2.8.3. தலைவன் வஞ்சினம் பொய்த்தமை கூறல்

தலைவன் பிரிவால் தலைவனொடு அவள் கொண்ட உறவினை எண்ணி அவர்கள் இருவரும் முதல் நாள் சந்தித்த அருவியிடத்து அழுத நிலையில் அன்னை அவளைத் தேற்றினாள். அவ்வேளையில் தலைவி, காந்தளை ஊதிய வண்டு தேனசையால் ஒலித்துப் பறக்கும் நாடனாக இருந்தும் அப்பண்பை அறியாதவன் தன்மையினை,

'காந்தள் ஊதிய மணிநிறத் தும்பி
தீம் தொடை நரம்பின் இமிரும்
வான் தோய் வெற்பன் மார்பு அணங்கு எனவே'

(நற். 17: 10-12)

எனக்கூறி, "தன்னோடிருந்து அளவளாவுந் துணையும் நம் நோய் உணர்வான் போன்று விரைவின் வரைதற்கு முயல்வான் போலும். பேரன்புடையவன் போன்று பொய்மொழிகள் பலவும் பேசி நம்மை மறந்து ஏதிலான் போன்று ஆகிவிடுகின்றான்"(92) எனவும், நம் நிலையை நன்குணர்ந்திருந்தும் "நமக்கு உதவாத குன்ற நாடன் பெரிதும் தீமை உடையவன்"(93) எனவும் அவனைப் பழிக்கின்றாள். இவ்வாறு தலைவன் கூறிய உறுதி மொழிகள் பொய்த்தமையைத் தலைவி எடுத்துரைப்பள்.

### 6.2.8.4. தலைவன் இருக்குமிடம் செல்லத் துணிந்தமையும் மறுப்பும்

இடைவிட்டொழுகுந் தலைவன் சிறைப்புறத்தானமை அறிந்த தலைவி, அவன் கேட்குமாற்றால் "யாம் நம் தலைவனை எதிர்ப்பட்டுக் காணும் வாய்ப்பு இல்லை. ஆதலின், அவனிருக்குமிடம் சென்று நம் குறையைக் கூறுவோம்."(94) ஏனெனின் "என் மேனி பசலை பாய்ந்து என் உள்ளம் தலைவரின்பால் சென்றது. எனவே, எனது அறிவு தலைவன் இருக்குமிடம் செல்க எனத் தூண்டுகிறது."(95) அப்படியாயின் நாம் நள்ளிரவில் தலைவன் நாட்டுக்குச் செல்வதற்கு அவன் நாட்டுச் சிறு வழிகள் அரியவை அல்ல என்பதை,

'சிறுபுறம் புதையவாரி குரல் பிழியூஉ
நெறிகெட விலங்கிய நீயிர் இச்சுரம்
அறிதலும் அறிதிரோ என்னுநர்ப் பெறினே'

(அகம்.8: 16-18)

என மொழிகுவள். மேலும், "சென்றோம் என்றால் தலைவன் முகமன் கூறுபவன் அல்லன். ஆதலின் செல்லாமையே நன்று"[96] எனத் தலைவி கூறுவதன் வழி, ஒரு நிலையில் போகத் தூண்டும் அறிவு, நாண் காரணமாக அதனை மறுத்துப் பேசுவதை அறியலாம்.

## 7. ஒருவழித்தணத்தல்

களவு ஒழுக்கத்தில் "பகலும் இரவுமாகத் தலைவன் குறியிடம் வந்து, தலைவியிடம் கூட்டம் நிகழ்த்தி வந்தமையால் அவன் தன் மறைவொழுக்கம் வெளிப்பட்டு, அலராக, அதறிந்து தலைவன் தோழியின் விருப்பத்திற்கிணங்கச் சிலகாலம் அவ்வலர் அடங்குமாறு கூட்டம் நீங்கி, வேறிடத்துச் சென்று உறைவான். "[97] இவ்வகையில் தலைவன் தலைவி காணாத நிலையில் நீங்கி நிற்றல் ஒருவழித்தணத்தல் ஆகும். இத் துறையில் "எட்டு"[98] செய்யுட்கள் உள. அவை, தலைவி தோழியோடும், தலைவனொடும், நெஞ்சொடும் கூற்று நிகழ்த்துவதாக அமைந்து காணப் பெறுகின்றன.

தலைவன் ஒருவழித்தணந்துழி ஆற்றுவிக்கும் தோழியிடம் தலைவி, "தலைவன் வரைவதற்கு ஆவன செய்யாது தன் மனைக்கட் தங்கினான்" என்பதை,

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
கருங்கோட்டுப் புன்னைத் தங்கும் துறைவன்"

(ஐங். 161: 1-2)

எனும் அடிகள் மூலம் வெளிப்படுத்துவள். ஆதலின் அவன் அளியினைப் பெறாமல் "என்னுடைய வளையல்கள் தாமே கழன்று வீழ்ந்துவிட்டன."[99] "நுதல் பசலை பாய்ந்து அழிகின்றது, அவன்

செயல் கண்டு நெஞ்சம் நோய்கண் வீழ்கின்றது."[100] அலருக்கு அஞ்சித் தலைவன் வாரா நின்றான் என்பதை,

'பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழித் துவலை ஒலியின் துஞ்சும்
துறைவன்'

(ஐங். 163: 1-3)

எனும் அடிகள் மெய்ப்பிக்கும். இதனால் "தலைவன் மாலைப் பொழுது வந்தும் அவன் தேர் வாராமையால்,"[101] "நாரை பெடையை முயங்க அழைக்கும் பண்பைக் கூட அவன் பெறவில்லை"[102]என ஆற்றாது உரைப்பள்.

தோழி தலைவியை ஆற்றுவிக்கும் பொருட்டு "நமக்குக் கொடுமை செய்தவன் வெட்கமின்றி அங்கேயே இருக்கின்றான்."[103] "அப்படியிருந்தும், அவன் மலையில் அருவி வீழ்கின்றது. கோங்கு மலர்ந்து சிதறுகின்றன. மாலை சூடிய மதயானைகள் போல மலைகள் தோன்றுகின்றன. அவ்விடத்து மந்திபோல் தேன்கூடுகள் காணப்படுகின்றன எனத் தலைவனைப் பழித்துக் கூற,"[104]அதற்குத் தலைவி தோழியிடம் "தலைவன் துலாக்கோல் போல் சொல் தவறாத நேர்மையாளன்; அறம் நிறைந்த நெஞ்சினன்; வேண்டியவருக்குத் தேர் கொடுக்கும் வள்ளல்; மலை நீரினும் மென்மை உடையவன்; என் நெஞ்சினைத் தன் அன்பால் பிணித்துக் கொண்டான்; பிறரஞ்சும் கொடுந்தொழிலைச் செய்யாதவன்; ஆதலின் காமநோயால் நம்மை வருந்தவிடாது மணந்து கொள்வான்"[105] எனக் கூறுவதனைத் "தலைவன் சிறைப்புறமாய் நின்று கேட்டுத் தோழியை விலக்கி, தலைவன் முன்னம் இடைவிடாது கூடிய கூட்டத்தால் தோற்றப் பொலிவைப் பெற்றாய் என்று சொல்லி இடைக்காலத்தில் வாராதிருத்தலால் உண்டான வருத்தத்தைப் போக்கினான்."[106]

இருப்பின், தலைவி, "இவனால் தோற்றப் பொலிவு அடைந்தேன் என்று இவன் சொல்லும் சொல்லைப் பார் என்று மனதுட் கூறி, பின் தலைவனிடம் நீ என் தோள் மேல் தொய்யில் எழுதி, கனவு போல் தங்கியதால் தோற்றப் பொலிவு உண்டானது என்றும், என் முலையால்

நின் மார்பிடத்து இடைவிடாது உழுவதைப் பெறவில்லை என்றும் கூறத் தலைவன் புணர்வதற்கு முகம் மொழிந்தான். அதுகேட்ட தலைவி, என் உறுப்புகளில் தோற்றப் பொலிவு உண்டாயுள்ளன எனச் சொல்லாமல் என் தோள்களில் உன்னால் எழுதப் பெற்ற கரும்பிற்குத் தோற்றப் பொலிவு உண்டு என்று கூறு, நான் ஏற்றுக்கொள்கிறேன். இல்லையெனில் நீல மலர் போன்ற என் கண்களும் மற்ற உறுப்புகளும் பெரும் பசப்புப் பெறும்"[107] எனத் தலைவனுக்கு வரைவினை விரைவில் செய்யுமாறு மொழிகின்றாள்.

## 8. காமம் மிக்க கழிபடர் கிளவி

தலைவன் ஒருவழித்தணத்தல் தொடர்ந்த நிலையில் "தலைவனைக் காணப் பெறாத தலைவி, காமநோய் உளம் நிறைந்து வருந்த, அத்துன்பத்தை வாய்விட்டுப் புலம்பினால் குறையும் என்று எண்ணித் தோழிக்கும், தன் நெஞ்சிற்கும், கண்ணெதிரே உள்ள பொருட்களை நோக்கியும் கூறுவது காமம்மிக்க கழிபடர் கிளவியாகும்."[108] இவற்றில் தலைவி கூற்றாக, பதினொன்று பாடல்கள் அமைத்துக் கொள்ளப்பெற்று, அவற்றில் குருகு முதலிய புள்ளினை நோக்கிக் கூறுவதாக "ஐந்து"[109] பாடல்களும், வேட்கை மிகுந்த நிலையில் திங்கள், பொழுது, கடல், நண்டு, தும்பி, ஆறு கண்டு தன் நெஞ்சொடு கூறுவதாக "ஆறு"[110] பாக்களும் அமைந்துள.

## 8.1. புள்ளிடத்துத் தலைவி கூறல்

தலைவி குருகிடம் 'குருகே மாலைக் காலம் எனக்குப் பெரிய வருத்தம் செய்தது; அதை நீ அறிந்தால் அன்பு கொள்வாய்' என்பதை,

'கருங்கால் வெண்குருகு எனவே கேண்மதி
பெரும் புலம்பின்றே சிறுபுன் மாலை
அதுநீ அறியின் அன்புமார் உடையை'

(நற். 54: 4-6)

எனும் வழி உணர்த்தி, ஈண்டுத் தலைவனிடம் தன் குறையை அத் தன்மையதென்று உரைப்பாயாக என்பள். மற்றொரு குருகிடம் தலைவி, குருகே எம் ஊர் வந்து எம் துறையில் உள்ள கெளிற்று மீனைத்

தின்று விட்டுத் திரும்பும் நீ என் பருவநிலையைத் தலைவற்குச் சொல்லாது உளாய். எனவே நீ நன்றி உடையை இல்லை என்பதை,

'. . . . . . . . . . . . . வெள்ளாங்குருகே
எம்ஊர் வந்து எம்உண்துறைத் துழைஇ
சினைக் கெளிற்று ஆர்கையை அவர்ஊர்ப் பெயர்தி
. . . . . . . . . . . . . . . . . . .
இழைநெகிழ் பருவரல் செப்பாதோயே'

(நற். 70: 3-5,9)

எனக் கூறுவள். மற்றும் கிளியிடம், "கிளியே தினையை உண்டு உன் முறையை முடித்துப் பிறகு என் குறையைக் கவனி. நீ உன் உறவினர் பக்கம் சென்றால் ஆங்கு என் தலைவனைப் பார்த்துக் குறவள் மடமகள் தினைப் புனம் காவல் செய்ய மீண்டும் வந்தாள் என்று தெரிவித்துவிடு"(111) எனத் தன் காமம் மிகுந்த நிலையில் கூற்று செய்வாள். ஆயின் மற்றொரு குறுந்தொகைப் பாடலில் "தலைவனொடு பாயில் கொண்டிருந்த தலைவியைப் பொழுது புலர்ந்த நிலையில் சேவல் எழுப்பியது. இதனால் தலைவி வெகுண்டு சேவலே நீ பூனைக்கு இரையாகிக் கொடிய துயரைச் சேர்வாயாக"(112) எனக் கடிகின்றாள். இதற்குத் துறை ஆசிரியர்கள் தம் துறைக் குறிப்பில் "பொருள் முற்றி வந்த தலைமகனை உடைய கிழத்தி காமம் மிக்க கழிபடர் கிளவியால் கூறியது"(113) என்பர். மருதத் திணையும், சூழலும் கருதி இச்செய்யுள் கற்பின்பாற்படும் எனக் கூறுவர்.

### 8.2 தலைவி கடலை நோக்கிக் கூறல்

தலைவி கடலிடம், கடலே நீயும் என்போல் நள்ளிரவின் கண்ணும் உறக்கமின்றிக் கதறி நிற்கின்றாய். நீ யாராலே இங்ஙனம் வருத்தமடைந்தாய் எனத் தலைவன் பிரிவால் வருந்துவதை,

'யார் அணங்குற்றனை கடலே . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .
நள்ளென் கங்குலும் கேட்கும் நின்குரலே' (குறுந்.163)

எனத் தலைவி இரங்கி மொழிவாள்.

## 8.3 தலைவி நண்டை நோக்கிக் கூறல்

தலைவியினது காமத் துன்பத்தைக் கடற்சோலை, கழி, புன்னைமரம் கூறாத நிலையில் நண்டையே துணையாகக் கொண்டு தலைவி, நண்டே நீ தலைவனிடம் போய், ஐயா நீ இரவுக்குறியில் வந்த பலநாளும் உன் துன்பத்தைப் போக்கியவள், தன் துன்பத்தைப் போக்கிக் கொள்ள முடியாமல் உள்ளாள் எனச் சொல்வாயாக என்பதை,

'. . . . . . . . . . துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால் அலவ . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . நள்ளென் யாமத்து
நின்உறு விழுமம் களைந்தோள்
தன்உறு விழுமம் நீந்துமோ எனவே'

(அகநா. 170 7-8, 12-14)

என்பள்.

## 8.4 தலைவி ஆற்றை நோக்கிக் கூறல்

தலைவி ஆற்றை நோக்கி, "தலைவனின் மலையினின்று இழிந்து வரும் ஆறே! யானோ இங்கு தோள் மெலிந்து பசலை பாயும் துன்பம் அடைந்துள்ளேன். இங்ஙனம் யாம் துன்பம் அடையவும் அருளாத உன் தலைவர் கொடுமையை உலகம் என்னவென்று சொல்லுமோ? என்று நான் உன்னுடன் பிணங்குவேன் என அஞ்சி, மலரைப் போர்த்தியபடி உன்னை எம் ஊர் வழி விடுத்துளர். ஆதலின் அவர் அன்பு சிறிதும் இல்லாது துறக்கும் வன்மை உடையவர் என்பது தெளிவு. இதனால் நீ இன்று மட்டும் என்னுடன் சேர்ந்திருந்து செல்வாயாக"[(114)] எனத் தலைவன் பிரிவையும் தன் காம மிகுதியையும் கூறுவள்.

## 8.5 வேட்கை மிகுந்த நிலையில் கூறல்

காம வேட்கை பெருக ஆற்றாத தலைவி, "நிலவு பரந்து ஒளி செய்கிறது, ஊர் விழவயருகின்றது, கானம் வண்டுமிமிருகின்றது."[(115)] "கடலும் பொங்கும் அலையொடு ஒலித்து ஒலி மிகுந்த கரையை

உடைக்கிறது, கானலும் முள்ளையுடைய இலையைக் கொண்டு காற்றில் மணம் வீசி பனையில் மோதுகின்றது."[116] "மாலையில் பறவைகள் குஞ்சுக்களுக்குரிய இரையுடன் விரைகின்றது."[117] "அப்பறவைகளுள் அன்றிலானது என் பக்கத்து வந்து எலும்பு உருகக் கத்துகிறது. இவற்றின் மேலாக விரலால் வாசிக்கப்படும் நல்ல யாழ் யாமம் வரை என்னைத் துன்பம் செய்கிறது"[118]என்றும், ஆதலின், "யான் கண் துயிலேன், அதனால் என்னொடு இவ்வுலகம் போர் செய்யும் அல்லது உலகமொடு என் நெஞ்சு போர் செய்யும்"[119] என்று கூறி "இக் காமத்தைப் போக்கும் தலைவன் அருகில் இல்லையே என்று புலம்புகின்றாள்."[120]

## 9. களவில் செலவுக் குறிப்பறிந்து தலைவி கூறல்

களவில் "தலைவன் பிரிந்து செல்லும் போது அவனைப் பிரியவிடாமல் தோழி தடுப்பது செலவழுங்குவித்தல் எனப்பெறும்."[121] தலைவன் களவு வாழ்வில் வரைவு காரணமாகவும், கற்பு வாழ்வில் பொருள், போர் காரணமாகவும் பிரிவது மரபு. எனினும் செலவழுங்குவித்தலைத் தொல்காப்பியர் கற்பியலில் மட்டும் பெய்துரைப்பர்"[122] என்பர்.

"களவில் தலைவன், தலைவி, தோழியரிடம் கூறிப் பிரிவதில்லை. கற்பில் பரத்தையர் பிரிவு தவிரப் பிற பிரிவுகளின் போது தலைவன் குறிப்பாகவே பிரிவை உணர்த்தும் மரபு காணப் பெறுகிறது."[123] மற்றும் களவில் தலைவன் கொள்ளும் பொருள்வயிற் பிரிவு வரைவின் பொருட்டு மேற்கொள்வது. தலைவன் தலைவியை மணம் புரிதற்கு "பொருள் கொடை தரும் மரபும் காணப் பெறுகிறது."[124]

வரைவின் காரணமாக தலைவனைப் பிரிந்து தலைவி தன்னை ஆற்றிக் கொண்டு "ஞாயிற்றின் போக்குடன் ஒன்றுபடும் நெருஞ்சி மலருடன்"[125] ஒப்பிடுதலை உணர முடிகின்றது.

## 9.1 வினைவயிற் பிரிவு

தலைவி களவில் செலவழுங்கியதாக "இரு பாடல்கள்"[126] காணப்பெறுகின்றன. களவில் தலைவன் வேந்தரின் வினையை முடிக்கச் செல்வதால் மணந்து கொள்வதற்கு, இது தக்க நேரமில்லை எனப் பிரிந்து போதலும், தக்கது என்று அவர் பிரிந்து செல்லினும் செல்க எனப் பிரிவிற்கு உடன்பட்டதை,

'நுதலும் தோளும் திதலை அல்குலும்
வண்ணமும் வனப்பும் வரியும் வாட
வருந்துவள் இவள் எனத் திருந்துபு நோக்கி
வரைவு நன்று என்னாது அகலினும்'

(அகநா. 119: 12-14)

எனக் கூறுவதனை நோக்குமிடத்து, தலைவன் குறித்த காலத்தில் திரும்ப வேண்டும் என்பதும் தலைவியின் நினைப்பால் அவன் வினை முடியாமல் திரும்பி விடக்கூடாது என்பதும் தலைவியின் எதிர்பார்ப்பாக உள்ளன. தலைவியின் இம்மனநிலை, வரைவுநோக்கு, களவில் செலவழுங்குவித்தலைத் தவிர்த்திருக்க வாய்ப்பாக அமைகிறது.

## 9.2 பொருள்வயிற் பிரிவு

தலைவன் பொருள் ஈட்டி வருவதற்குப் பிரிந்து போனான் என அறிவுறுத்திய தோழியிடம், தலைவி தலைவர் நம் புணர்ச்சியை நீக்கிப் பொருள் வலித்த நெஞ்சமொடு சுரத்தில் சென்று பாக்கத்தில் விருந்து அயரத் தங்கியிருந்து சென்றனர். அவர் இன்னாமையால் நம் இல்லத்தின் முன்பக்கம் தனிமை அடையும் போலும். இருப்பின் தலைவர் நம் உயர்வு வருந்திச் சென்றார். ஆதலால் நான் ஆற்றியிருப்பேன் என்பள். இதனை,

'தோள் புலம்பு அகலத் துஞ்சி நம்மொடு
நாள் பல நீடிய கரந்து உறை புணர்ச்சி
நாண் உடைமையின் நீங்கி சேய் நாட்டு
அரும் பொருள் வலித்த செஞ்சமொடு ஏகி
நம் உயர்வு உள்ளினர் காதலர்'

(அகநா. 187: 1-5)

என மொழிவதன் வழி உணரமுடிகின்றது.

## 10. வரைதல் வேட்கையும் வரைவிடைப் பிரிவும்

களவில் தலைவன் வரைவிடை வைத்துப் பிரியும் போதும் கற்பில் பிரிவிடை வைத்துச் செல்லும் போதும் தலைவி பிரிவுத் துயரால் ஆற்றாது புலம்புகிறாள். இவ்விரு வகைப் பிரிவுகளிலும் தலைவி கொள்ளும் துயரில் நுண்ணிய வேறுபாடுகள் உள.

"வரைவிடை வைத்துப் பிரியும் தலைவன் சொல்லாது பிரிதலும், பிரிவிடை வைத்துச் செல்லும் தலைவன் திரும்பும் பருவத்தைச் சொல்லிப் பிரிதலும் மரபாக உள்ளன." [127]

தலைவியின் வரைதல் வேட்கையும் தலைவனின் வரைவிடைப் பிரிவும் "வைகறை திறன் சேர்ந்தாள் ஆக்கம் போல் அழகு பெறுதல் என்று இவ்வாறு வாழ்க்கை உண்மைகளையே உவமையாக்கித் தலைவியின் நிலை கூறப்படுகிறது. எனவே, கவின் தீராமல் காக்க எனத் தலைவன் வரைய வேண்டும் முறை அமைகிறது" [128] என்பர். இவற்றில் தலைவி கூற்றுச் செய்யுட்கள் எழுபத்திரண்டு ஆகும். அவை,

10.1 வரைவிடை ஆற்றாத தலைவி கூறல்

10.2 வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறல்

10.3 வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கூறல்

எனப் பாகுபாடு செய்யப் பெறுகிறது.

### 10.1 வரைவிடை ஆற்றாத தலைவி கூறல்

வரைவு விருப்பின் காரணமாகத் தலைவி ஆற்றாது கூறுவதாக அமைந்த பாடல்கள் "இருபத்தெட்டு"[129] ஆகும். இவற்றில் தலைவி, தலைவன் நம்மை நினைந்து வருவது களவின்பம் நுகர்வதற்கே அன்றி வரைந்து கொண்டு இல்லறம் நடத்துதல் அவன் கருத்தன்று என்பதை,

'எக்கர் ஞாழல் இணர்படு பொதும்பர்த்
தனிக் குருகு உறங்கும் துறைவற்கு
இனிப் பசந்தன்று என் மாமைக் கவினே' (ஐங். 144)

என மொழிந்து, இதனால் அவன் நன்க்கு, "துன்ப நினைவுகளையே தோற்றுவித்துப் போய்விடுகின்றான்."[130] என்பதை உணர்த்துகின்றாள்.

களவு மணம் என்பது பிறர் அறியாமல் நடைபெற்றதால், "அதற்குச் சாட்சி என்பது நாரை மட்டும் தான்."(131) அதன் காரணமாகத் தலைவன் என் பெண்மை நலம் நுகர்வதற்கு எளிதாயின தன்மையினை,

'கான யானை கைவிடு பசுங்கழை
மீன் எறி தூண்டிலின் நிவக்கும்
கானக நாடனொடு ஆண்டு ஒழிந்தன்றே'

(குறுந். 54: 3-5)

என மொழிவள். இச்செயல் பிறரால் அறியப்பட்டும் "வரைதற்குரிய முயற்சியை அவன் செய்தானல்லன்."(132) இப்பொழுதெல்லாம் நான் "தலைவனொடு முயங்கினதாகக் கனவு தான் காண்கின்றேன்" (133) எனும் நிலையை

'. . . .    . . . .    . . . .   வாவல்
. . . .    . . . .    . . . .    . . . .
நெல்லி அம்புளிச் சுவைக் கனவியா அங்கு
அது கழிந்தன்றே தோழி'

(நற். 87: 1, 4-5)

எனக் கூறுவள். அக்களவின் முயங்கிய இன்பமெல்லாம் விழித்தவுடன் மயங்கிப் போயிற்று என்பள். மற்றும் கலித்தொகை 128ஆம் செய்யுளுள் தோழியிடம் கண்ட கனவு நிலை உணர்த்தப் பெறுகிறது.

"மாலைப் பொழுதில் பிற தலைவர்கள் வந்த போதும் தலைவன் வாராமையால் பொழுதானது என்னை எளியள், தமியள் பெண்ணென்று பாராமல் துன்பம்"(134) செய்கிறது. மை தீட்டப் பெற்ற கண்கள் "உறக்கமின்றி,"(135) "பசலை நிறம்"(136) பெற்று நீர் வடிகின்றது."(137)என் "தோளும் கூந்தலும் பழைய அழகை இழந்து"(138) நிற்கின்றன. "நெஞ்சமானது தீயிலிட்ட நிணமென உருகுகிறது."(139) இவ் உடல் வேறுபாடுகளாலும் தலைவன், "தலையளி"(140) செய்யாமையாலும், "என்னை உடனிருந்து காக்காமையாலும் ஊரில் அலர் எழுந்து என்னைப் பெரிதும் வருத்துகின்றது."(141) நான் ஊர் அலர்க்கு அஞ்சிக் காமத்தை வெளிப்படுத்தாமல் உள்ளேன் என்பதை,

'கௌவை அஞ்சின் காமம் எய்க்கும்

என் அறவிடினே உள்ளது நாணே' (குறுந். 112: 1-2)

எனக் கூறுவள். "அலரின் காரணமாகத் தேரில் வந்து மீண்ட தலைவன் மீண்டும் வருவானோ"[142] என்ற எண்ணம் தோன்றினாலும் "அவனுடன் உடன் வருவதாகச் சொல்லியும் பொய் கூறி விடுத்துச் சென்றான்."[143] அத்தகையவனை "தெய்வம் வருத்தும் எனும் காரணத்தால் என் உடல் வேறுபாட்டிற்கு அவன் காரணமல்ல"[143] எனக்கூறும் மனமுடையவளாக இருந்தும் "அவன் வருதற்குரிய அடையாளம் ஒன்றும் காணவில்லை."[144]

எந்நிலையிலாவது "தலைவன் வந்து அருள் செய்வான் என்று கருதியே நான் உயிர் தாங்கி நிற்கின்றேன்."[145] இத்தகைய செயலால் "தலைவனுடன் நான் கொண்ட கேண்மை, துன்பத்தை நிலை நிறுத்தி இன்பமாகிய வரைவு முற்றுப் பெற வழியில்லாமல் ஆயிற்று"[146] மற்றும், தலைவன் இல்லாமையால் இவ்வூர் நமக்கு இனி உறையும் பதியன்று என்பதை,

'உறைபதி அன்று இத்துறை கெழுசிறுகுடி'

(குறுந். 145: 1)

என்பள். எனவே, தலைவன் இருக்குமிடத்திற்கு தாமே போக வேண்டும் என்ற உணர்வு ஏற்படுகின்றது. இதனை,

'அளிதோ தானே நாணே

ஆங்கு அவர் வதிவயின் நீங்கப் படினே'

(குறுந். 395: 7-8)

என உரைப்பள். ஏனெனில், "என் துயர் நிலையை எடுத்துரைக்க யாரும் இல்லை என்ற காரணத்தால்"[147] எனக் கூறுவதன் வழி வரைவிடை ஆற்றாத நிலையில் தலைவி வருந்தி மொழியும் திறம் புலப்படும்.

## 10.2 வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறல்

தலைவன் வரைவிடை வைத்துப் பிரிய தலைவி ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறுவதாக அமைந்த பாடல் "இருபத்தைந்தாகும்."[148]

இவற்றில் தலைவி, தலைவனது சூளினைப் பற்றுக் கோடாகக் கருதி, அவன் பிரிய வருந்தியிருக்கின்றேன் என்பதை,

'. . . . . . . . . . . . . . . . அவன்
தாவா வஞ்சினம் உரைத்தது
நோயோ தோழி நின் வயினானே' (குறுந். 36: 5-6)

என்பள். மற்றும், "அவன் வரும் வழியின் ஏதம் கருதி அஞ்சி"[149] "இரவில் துயிலாது இருக்கின்றேன்."[150] ஆதலின் "தலைவனை நான் நினைத்திருத்தலை அன்றி அவன் நேரில் வந்தான் அல்லன்."[151] இதனால் "நான் துயில் மறக்கின்றேன்."[152] அவனுடைய பிரிவினால் "நான் வருத்தமடைந்து"[153] "உடல் மெலியவும்"[154] "பசலை நோய் உறவும்"[155] அவனொடு நான் கொண்ட நட்பு பகையானது. இதனை,

'. . . . . . . . . . . . . . . . சேர்ப்பனோடு
செய்தனெ மென்ற ஓர்பகை தரு நட்பே'

(குறுந். 304: 7-8)

எனக் கூறுவள். மற்றும் இச்செய்தியை குறுந்தொகை 134-ஆம் செய்யுளும் வழிமொழியும். அப்படி இருக்க, "என்னுடைய நெஞ்சமானது அவன் இருக்குமிடம் நாடிச் சென்று,"[156] "வினை முடிக்கும் வரை இருந்து வரலாம் என்று இருக்கிறது."[157] அவ்வாறு இருந்த நெஞ்சம் மீண்டும் வந்து நான் அயலாட்டி என்று தீர்மானித்து என்னைத் தேடிச் சென்றதோ தெரியவில்லை என்பாள். இதனை,

'தொல்நலன் இழந்த என் பொன்நிறம் நோக்கி
ஏதிலாட்டி இவள் எனப்
போயின்று கொல்லோ . . . . . .'

(நற்.56: 8-10)

என்பள். தலைவன் பிரிவால் தான் இவ்வகையில் பெரிதும் துன்புற நொதுமலர் வரைவு வருத்துவதனை,

'கடும்புனல் அடைகரை நெடுங்கயத்து இட்ட
மீன் வலை மாப் பட்டா அங்கு
இது மற்று எவனோ நொது மலர்தலையே'

(குறுந்.171: 2-4)

எனக் கூறுவது, "காதல் நெறி மெத்தெனச் செல்வதன்று பெற்றோர் வேற்று மணமகனைத் தேர்ந்தெடுக்கும் போது காதற் பெண்மக்கள் கட்டாயம் மறுக்கின்றனர். தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்று அடக்கம் மிக்க நன்மகள் கூட அயலவனை அல்லவனை மணக்க ஒருபோதும் ஒப்புவதில்லை என சேக்ஸ்பியர் கண்ட காதலும் மணமும் எனும் நூலில் குறிப்பது"[158] கருதத்தக்கது. "கார்கால மயில்கள் கூவுதல்"[159] மேலும் என் துன்பத்தைப் பெரிதாக்கி விடுகிறது. நான் துன்புறும் காம நோயை அறியாமல் "தாய் முதலியோர் உறங்குவதால் ஆற்றாமையால் நான் அவற்றில் முட்டியும் கோலால் தாக்கிக் கொண்டும், ஆ, ஒ என்று ஒலி உண்டாக்கும் தன்மைக்கு ஆளாவதால்"[160] "நாம் இழக்கும் பொருள் நமது இனிய உயிர் அன்றி வேறு ஒன்றும் இல்லை."[161]

இவற்றிற்கு எல்லாம் காரணம் "யான் செய்தது என்று சொல்லி என்பாற் கொண்ட அன்பின் மிகுதியால் நீ அழாதே, என் உள்ளத்தில் அவர் அன்பு என்றும் தங்கியிருக்கும். அவன் நட்பை நான் மிகவும் அறிவேன்."[162] மேலும் "நல்லுாழின் காரணமாக என்னைக் கண்டு இன்புற்ற அவன் என்னை வரைந்து கொள்வான் என்று துணிவோடு" கூறுவதனை,

'கயம் நெடு யானை கவளம் மாந்தும்
மலை கெழு நாடன் கேண்மை
தலைபோகாமை நற்கு அறிந்தனென் யானே"

(குறுந்: 170: 3-5)

எனும் அடிகள் மெய்ப்பிக்கும். மற்றும், "சூரியனை நோக்கி இருக்கும் நெருஞ்சி மலரைப் போலவும்,"[163] அவனுடைய "உயர்ந்த மலையை,[164] "அவன் தேற்ற உரையை நோக்கியும்"[165] ஆற்றியிருக்கின்றேன்; அதை விடுத்து "என் தனிமைத் துன்பம் குறித்தன்று; தலைவன் தனிமையில் துன்புறுவர் என்று என் நெஞ்சம் வருந்தினாலும்"[166] வருந்துமே தவிர, அவன் கொடுமையை நான் மறைத்துப் பிறர் அறியாதவாறு ஆற்றுவேன் என்பதை,

'வாள்போல் வாயகொழு மடல் தாழை
மாலை வேல்நாட்டு வேலி ஆகும்
மெல்லம் புலம்பன் கொடுமை
பல்லோர் அறியப் பரந்து வெளிப்படினே'

(குறுந். 245: 3-6)

என மொழிவள்.

### 10.3 வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கூறல்

வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி கூறுவதாக அமைந்த பாடல்கள் "பதினைந்து"[167] ஆகும். இதில் தோழி தலைவியை நீ ஆற்றியிருக்க வேண்டும். தலைவன் விரைவில் வந்து உம்மை வரைவான் ஆதலின் நீ உடல் மெலிவது எதற்கு அவன் "நினைவை நீ சிறிது மறத்தல் வேண்டும். தலைவன் என்றும் உன் மேல் விருப்பமுடையவன், நீ நோவது என வினவத் என வினவ தலைவி அதற்கான காரணங்களை எடுத்து மொழிகின்றாள். இருவகைக் குறியிலும் தலைவன் வந்து அளிசெய்து"[168] தாய் பாதுகாத்த அழகிய என் பெண்மையைத் தலைவன் கொள்ளை கொண்டான் என்பதை,

'அன்னை ஓம்பிய ஆய்நலம்
என்னை கொண்டான் யாம் இன்னமால் இனியே'

(குறுந். 223: 6-7)

என்பள். அதனால், "காமம் எள்ளளவில் நில்லாது மிகுந்து தோள் வளை நெகிழ,"[169] "கண்கள் வடிவிழக்க கூந்தலை உடைய பசப்பொழிந்தது."[170] "இதனால் ஊரில் அலர் ஏற்பட்டு"[171] "அலர் தூற்றுவது எப்படி என்று விளங்கிற்று."[172] இவ்வேறுபாட்டால் "தாய் அஞ்சுவதற்கு ஏதுவாயிற்று."[173] இருப்பின் இந்நோய் பிறிதொன்றால் ஆனது எனக் கூறுவர் செயல் 'பண்பற்றது' என்பள். இதனை,

'. . . . .   . . . . ..   . . . . . என்கண்
பிணி பிறிதாகக் கூறுவர்
பழி பிறிதாகல் பண்புமார் அன்றே'

(நற். 117: 8-10)

எனும் அடிகள் சுட்டும். "இதனை உணர்ந்து தலைவன் எப்பொழுது வருவான் அல்லது வாராது ஒழிவானோ?."[174] அது மட்டுமன்று; "நொதுமலர் வரைவு,"[175] "தலைவன் நெடுங்குன்றம்,"[176] "வாடைக் காற்று"[177] என்னை மேலும் துன்பத்துள் மூழ்கச் செய்கிறது. அவற்றில் இருந்து மீளக் கனவு வழிச் செய்யும் என்றால் 'அதுவும் பொய்க் கனவாகி உடல் நலிவடைகிறது.' இதனை,

'பொய்வலாளன் மெய்உற மரீ இய
வாய்த் தகைப் பொய்க் கனா மருட்ட ஏற்று எழுந்து
அமளி தை வந்தனனே'

(குறுந். 30: 2-4)

எனக் கூறுவள். தலைவனால் உண்டான காமம் அவன் "பொருள் ஈட்டி,"[178] "விரைவில் வரைந்து கொண்டு இடையீடின்றி உடனுறையும் நிலை பெறவில்லை எனின் இல்லறப் பயனை அடைதல் கடிது."[179] எனவே, தலைவன் "ஈண்டு நம்மை நினைத்து ஒரு தலையாக வருதல் செய்யவேண்டும்"[180] இல்லையெனில் நம் நிலையை விளக்கமாக எடுத்துக் கூறி அவனை வரைவுக்கு உடன்படுத்த வேண்டும் என்பதனை,

'நெடுமென் பணைத் தோள் சாஅய் தொடி நெகிழ்ந்து
இன்னள் ஆகுதல் நம்மின் ஆகுமெனச்
சொல்லின எவன் ஆம் தோழி'

(குறுந். 185: 2-4)

எனச் செப்புவள்.

## 11. களவின் வன்பொறை

வன்புறை என்பது "கடினமாகச் சொல்லும் சொற்கள் எனப் பொருள்படும்."[(181)] வன்பொறை என்றும் குறிக்கப் பெறுகிறது.

தலைவியின் களவுக் கூற்றுகளில் "ஏழு"[(182)] பாக்களில் வன்பொறை அமைத்துக் கூறும் பாங்கு, தலைவன் வரைவு நீடித்த நிலையில் தலைவியின் வன்புறை என்ற நிலையில் அமைகிறது.

தலைவன் வரைவு நீடித்த நிலையில் தலைவியின் வன்பொறையானது "நம்முடைய ஊர் ஆரவாரமிக்க புதுவருவாயை உடையதாயினும், தலைவன் நம்மை விட்டுப் பிரியின் பொலிவிழந்தாற் போலக் காணப்படுகிறது."[(183)] "ஞாயிறு மறையும் வேளையில் நாரைக் கூட்டம் விசும்பிலே பறந்து சென்றன. பகற்பொழுது கழிந்தது; முல்லை அரும்பு மலரும் மெல்லிய மாலைக் காலமும் வந்தது."[(184)]

"பூ உதிரும் கொடி போல ஆன இரவில் வௌவால் பறக்கும். ஆந்தைச் சேவல் கூவும், பனை மடலில் அன்றில் பறவை ஒலிக்கும்"[(185)] இவ்வேளையில் என் காமமோ கங்கை ஆற்றுக் கடும்புனல் கரை கடந்து ஓடுவது போல ஓடுகிறது. என்பதனை,

'கங்கை அம்பேர் யாற்றுக் கரை இறந்து இழிதரும்
சிறைஅடு கடும்புனல் அன்ன என்
நிறைஅடு காமம் நீந்து மாறே'

(நற். 369: 7-9)

என்பள். அதனால் "நாணத்தைப் பேணுவது அரியதாய் இருக்கின்றது."[(186)] இத்துன்பங்களால் "உடல் மெலிந்து என் அணிகலன்கள் எல்லாம் தம்முள் தாம் மோதி ஒலிக்கின்றன. பீலி

இழந்த மயில் போல அழகு கெட்டு வாடுகிறேன்."[187] அவன் "சொல்லில் பிறந்த நோயின் கொடுமையோ வில்லால் எய்வதினும் பெரும் புண்ணாக என்னை நோகச் செய்கின்றது."[188] "நகைத்து உறவாடியது முதலாக அவர் தகைமையோடு நம்மை நலியச் செய்யும் இந்த நோய் பகைமையினும் கொடிது."[189] "நீயில்லாமல் நானில்லேன் எனும் அவர் சாயலை நினைந்த தன்மையினை,

'நீயலேன் என்று என்னை அன்பினால் பிணித்துத் தம்

சாயலின் சுடுதல்' (கலி. 137: 18-19)

எனக் கூறி, "கனலும் இந்நோய் அந்தத் தீயினும் கொடியது"[190] எனவும் மொழிபள்.

அப்படிப்பட்ட "நம் காதலர் நமக்கு இனிய உயிரை மீட்டுத் தரும் மருத்துவராய் இருந்தும் அவர் எனக்கு உறவாடித் தந்துவிட்டுப் போன நோயினை எவ்வாறு ஆற்றுவேன்."[191] இந்நிலையில் "தலைவனொடு கொண்ட நட்பினை ஊர்ப் பெண்டிர் அலராக ஒலிக்கின்றனர்"[192] எனக் கூறுவள்.

தலைவன் முயங்குகையில் எழிலும் முயங்காவிடத்துப் பசலையும் உண்டாவதால் இன்பத்தையும் துன்பத்தையும் தன்பாற் கொண்டிருக்கும் தன்மையினை,

'இன்பமும் துன்பமும் உடைத்தே

தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே'

(நற். 304: 9-10)

என உரைத்து மேலும்,

தலைவனை விரும்புதல் "பழி எனில் சாதலே இனியது, சாதல் கூடாதெனின் மார்பை அடைதல் இனிது"[193] என்றும், "ஆதலின் தலைவன் சான்றோர் பலருடன் கூடி வந்து வரைந்து கோடலே நன்று"[194] எனவும் மொழிகின்றாள். இங்ஙனம் வரைவு நீட்டித்த நிலையில், தோழியிடம் கூற்று நிகழ்த்துவதன் வாயிலாகத் தலைவனை விரைந்து வரைவினை முடிக்கத் தூண்டும் எண்ணம் தலைவி கூற்றில் காணப் பெறுகிறது.

## 12. வரைவு மலிவு

வரைவு மலிவு எனும் துறையில் தலைவி தோழியொடு உரையாடுவதாக 'ஒன்பது பாக்கள்' அமைந்துள. இத்துறை இரண்டு நிலையில் அமைந்துள்ளது. அவை,

12.1 வரைவு மலிவு குறித்த ஐயம்

12.2 ஐயம் நீங்கிய நிலை (வரைவு மலிவு)

### 12. 1. வரைவு மலிவு குறித்த ஐயம்

களவில் தலைவன் கொடுத்த மாலையைத் தலைவி சூடிக் கொண்ட நிலையில் செவிலி தலையில் வெண்ணெய் தடவ, தலைவியின் கூந்தலை விரித்த போது, மாலை கீழே வீழ்ந்தது. அதனால் தலைவி நடுங்கினாள். இந்நிகழ்வைத் தலைவி தோழிக்குச் சொல்ல, அதற்குத் தோழி நீ அஞ்ச வேண்டாம்; அவனுக்கே உன்னை மணம் செய்ய உள்ளனர் என்றாள். இதனை,

'அஞ்சல் அவன்கண்ணி நீபுனைந்தா யாயின் நமரும்
அவன்கண் அடைசூழ்ந்தார் நின்னை அகன்கண்
வரைப்பில் மணல்தாழப் பெய்து திரைப்பில்
வதுவையும் ஈங்கே அயர்ப' (கலி. 115: 9-10)

என்றவிடத்துத் தலைவி, "காமக் குறிப்பில்லாத பேதை மகளிர் பலர் கூடி, இவள் கணவன், இவள் மனைவி என்று தம்முட் கூறிக் கொண்டு சிறுவீடு கட்டி அட்டும் உண்டும் ஆடும் குரவைக் கூத்தாடுதலை நிலைநிறுத்துதற்கு இடமான தலைவன் அணி செய்தும், நம் சுற்றத்தார் செய்யும் மன்றற் சிறப்பொடு விரவி நாடெங்கும் பரவி ஊரின் உண்டாகிய அம்பலையும் அலரையும் அழித்தும் வருவானாயின் வாழ்வதற்கு இனிதாகும்."(197) அதைவிடுத்து, "யான் துயரத்தாலே நைந்து இறந்துபடும் எல்லை வரை வாளாவிருந்து அவ்வெல்லைக்கண் வரைவதற்கு வரமுயலவில்லையெனில் யான் இறந்துபடுதல் ஒருதலை ஆயிற்று"(198) என மொழிபள்.

### 12.2. ஐயம் நீங்கிய நிலை

வரைதற்குப் பொருள் ஈட்டப் பிரிந்த தலைவன் வரைவுடன் வருவான் என்ற உறுதியை உணர்ந்த தலைவி தோழியிடம் "தலைவன்

அலர் தூற்றிய நொதுமலர் மனச் சுழற்சி எய்தவும் நம் சுற்றத்தார் மகிழ்ச்சி பொங்கித் தன்னை எதிர் கொண்டு அழைக்கவும், நம்மில்லத்தே இன்னியங்கள் முழங்கவும் வரைவொடு புகுந்தான்."[199] இதனால் அவன் பிரிய நெகிழ்ந்த வளையல்கள் அவன் மீண்டும் வந்த போது கையின்கட்கிடந்து விம்முவனவாயின. இதனை,

'துறைவன் பிரிந்தென நெகிழ்ந்தென

வீங்கின மாதோ தோழியென் வளையே' (ஐங்: 192: 3-4)

என்பள். ஆதலில் "நம் தலைவன் நட்பும் களவாகி நாளடைவில் முதிர்ந்து இப்பொழுது பல்லோரறியும் வரைவாகிக் கற்பொழுக்கமாகி அன்பும் அறனும் கமழும் தன்மையால்,"[200] தலைவனொடு இடையீடின்றி வாழும் வாழ்க்கையில், "பெரிய காமப்பகை இனி எப்போதும் இன்பமே செய்யும் நண்பு பெற்றது."[201] ஆகையின் "யான் இழந்த மானம் பெற்றும்"[202] விளங்குவேன் என்பள். அம்முறையில் தலைவன் வரைவோடு வருவது குறித்த ஐயம் அடைந்த தலைவி பின் தலைவன் வரைவோடு வந்ததை மகிழ்ந்து கூறுகின்றாள்.

### 13. உடன்போக்கு உணர்த்திய தோழிக்குத் தலைவி கூறல்

இற்செறிப்பு, ஊரலர், வெறியாட்டு, நொதுமலர் வரைவு ஆகிய இன்னாச் சூழல்களைக் கடத்தற்கு இரண்டு வழிகள் உள. ஒன்று அறத்தொடு நிற்றல்; மற்றொன்று உடன்போதல். ஒன்று நிகழின் மற்றொன்று நிகழாது. "உடன்போக்கு, (Elopment) திருமணமாகக் கருதப்பட்டது. இனக்குழு வாழ்க்கையில் உடன்போக்கு இயல்பாகும். அதனைக் குற்றமாகக் கருதவில்லை. முதுவர், பணியர், இருளர், "செஞ்சு சோழர்"[203] ஆகிய பழங்குடி மக்களிடம் உடன்போக்கு மணம் நிலவுகிறது என்பர் நா.வானமாமலை."[204] இருப்பின் "உடன்போக்கினை அருகிய வழக்கென்றும்"[205] "பெருகிய வழக்கென்றும்"[206] கூறுவார் உளர். "இவ்வுடன்போக்கும் போயபின் நற்றாய் இரங்கலுமான பாடல்கள் சங்க இலக்கியத்தில் நூற்று இருபத்திரண்டு அமைந்துள்ளன."[207] அவற்றுள், தலைவிக்குரிய உடன்போக்குப்

பாடல்கள் "நான்கு."[208] அவை மூன்று நிலைகளில் அமைந்துள்ள. அவை,

1. உடன்போக்கு உணர்த்திய தோழிக்குத் தலைவி கூறல்
2. உடன்போக்கு கொண்ட தலைவி கூறல் (கற்பு)
3. உடன் போய் மீண்ட தலைமகள் கூறல் (கற்பு)

என மூன்று நிலைகளில் அமைந்துள்ளன.

உடன்போக்கு உணர்த்திய தோழியிடம் தலைவி ஒரு நிலையில் யான் தலைவனுடன் செல்வதால் நாண் அழியும் என்பதனை,

'அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீடு உழந்தன்று மன்னே இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறை
தீம்புனல் நெரிதர வீந்து உக்கா அங்கு
தாங்கும் அளவைத் தாங்கி
காமம் தெரிதரக் கைந்நில்லாதே' (குறுந். 149)

என்று கூறி, உடன்போக்கினை மறுக்கின்றாள். மற்றொரு நிலையில் தலைவன் உடன்போக்கு மறுத்ததை "தலைவன் அருளி, அரிய சுரம் கொடியவை, நின் எயிறு உண்ணுமாறு ஒரு நாள் மழை பெய்க. பின்னொரு நாள் உன்னுடன் செல்வோம். அதுவரை ஆற்றியிருப்பாயாக எனச் சொல்லி உடன்போக்கினை மறுத்தார்"[209] என மொழிவள். மற்றும் நெற்றி பசந்து மேனி மெலிந்து ஊரார் கூறும் அலர் மொழிக்கு அஞ்சி தாய் தெய்வத்தைப் பரவுதல் ஆகிய நிலைக்கு அஞ்சித் தலைவனுடன் செல்ல உடன்பட்டேன் எனவும் மொழிகின்றாள். இவ்வாறு தலைவி ஒரு நிலையில் நாண் காரணமாக உடன்போக்கை மறுத்தும் அலரச்சம், தெய்வம் பரவுதல் முதலியன காரணமாக உடன்போக்குச் செல்லத் துணிந்தமையும் தலைவி கூற்று வாயிலாக அறியப்படுகிறது.

## தொகுப்புரை

சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள 1864 அகப்பாடல்களுள் 554 தலைவி கூற்றுப்பாடல்கள் குறித்து ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, அறத்தொடு நிற்றல், இயற்பட மொழிதல், பகற்குறி இற்செறிப்பு,

இரவுக்குறி முதலாக உடன்போக்கு உணர்த்திய தோழிக்குக் கூறல் ஈறாக பதின்மூன்று துறைகள் களவுத் துறைகளாகப் பாகுபாடு செய்யப்பெற்றுள்ளன.

அகவொழுக்கத்தின் நிகழ்வுகளை வெளிப்படுத்தும் கூற்றுக் குறிப்புகள் துறைக்குறிப்புகளாகும் என்பதும் களன் மயக்கம் என அமையும் ஒரே பாடலுக்கான இரண்டு மூன்று துறைகளும் ஆய்வில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு ஆகிய இரண்டு வகையானும் அமையும் தலைவி கூற்றுப் பாடல்களும் அறத்தொடு நிற்றல் துறையில் அமையும் களவுக் கூற்றுப் பாடல்களும் ஆய்வில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

வரைவு நீட்டிக்கும் தலைவனை தலைவி இயற்பட மொழியும் பாடல்கள் ஏழென்பதும், பகற்குறி இற்செறிப்புத் துறையில் தலைவி கூற்றுப் பாடல்கள் ஒன்பதென்பதும் ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளன.

தலைவி கூற்றில் அமையும் இரவுக்குறிச் செய்யுட்கள் ஒன்பதும் இரவுக்குறி மறுத்தல், இரவுக்குறி நேர்தல், அல்லகுறிபடுதல் என மூன்றாகப் பகுத்து விளக்கப்பட்டுள்ளன.

சிறைப்புறமிருக்கும் துறையில் தலைவி கூற்று அவளுடைய மனநிலையை அடிப்படையாகக் கொண்டு அமையும் என்பதும், அக்கூற்றுப் பாடல்கள் ஐம்பத்தைந்து என்பதும் அவற்றின் வழி அறியப்படும் தலைவியின் புணர்வு நோக்கம், வரைவு நோக்கம், பிரிவாற்றாமை ஆகியன எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

தலைவி காணாத நிலையில் தலைவன் நீங்கி நிற்கும் ஒருவழித்தணத்தல் துறையாக விளங்கும் தலைவி கூற்றுப் பாடல்கள் ஏழும் காம நோய் வருத்தும் நிலையில் காமமிக்கக் கழிபடர் துறையாக அமையும் தலைவி கூற்றுப் பாடல்கள் பதினொன்றும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

களவில் செலவுக் குறிப்பறிந்த நிலையில் தலைவி கூற்றுப் பாடல்கள் வினைவயிற் பிரிவு, பொருள்வயிற் பிரிவு ஆகிய இரு துறைகளில் விளக்கப்பெற்றுள்ளன. வரைவிடை ஆற்றாத தலைவி கூற்றுப் பாடல்கள் இருப்பத்தெட்டும் தலைவி வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறும் இருபத்தைந்தும், வரைவிடை

வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி கூறும் பதினைந்து பாடல்களும் ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளன.

வரைவு நீட்டித்த நிலையில் தலைவனை நோக்கிக் கடினமான சொற்களைக் கூறுவதாக அமையும் வன்பொறைத் துறையில் வரும் ஏழு பாடல்களும், வரைவு மலிவில் வரைவு மலிவு குறித்த அய்யம், அய்யம் நீங்கிய நிலையென இரு நிலைகளில் அமையும்.

இற்செறிப்பு, ஊரலர் முதலான இன்னாத சூழல்களைக் கடக்கும் வழிகளில் ஒன்றாக உடன்போக்குக் கூறும் தோழிக்குத் தலைவி கூற்றாக அமையும் பாடல்கள் நான்கு என்பதும், தலைவி உடன்போக்கு மறுத்ததையும் தலைவன் உடன்போக்கு மறுத்ததையும் தோழியிடம் கூறுவதாக அமையும் இருநிலையும் நாண் காரணமாக உடன்போக்கு மறுத்ததும் அலரச்சம், தெய்வம் பரவுதல் காரணமாக உடன்போக்குச் செல்லத் துணிந்ததும் ஆன இருநிலையும் ஆய்வில் கருத்தில் கொள்ளப்பெற்றன.

# சான்றெண் விளக்கம்

1. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.58.
2. இராம.பெரியகருப்பன், வையை, மலர் 5, ப.32.
3. இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.108.
4. க.இரத்தினம், சங்க அகப்பாடல்களில் கூற்று, ப.77.
5. ந.சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், ப.272.
6. சரளா இராசகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, ப.57.
7. கல்யாணி, சங்க இலக்கியத்தில் தலைவி, ப.25.
8. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.55.
9. மேலது, ப.68.
10. மு.சண்முகம் பிள்ளை, அகப்பொருள் மரபும், திருக்குறளும், ப.20.
11. இரெ.குமரன், சங்க இலக்கிய அகப்பாடல்களில் கருத்துப் புலப்பாட்டு உத்திகள், ப.75.
12. மு.வரதராசன், இலக்கியத்திறன், ப.307.
13. நற்: 225,240,322.

    குறுந்: 91,104,110,169.

    அகநா: 22, 33, 37, 72, 98, 101, 119, 122, 175, 180, 187, 227, 264, 252, 293, 305, 329, 352, 388
14. நற்: 225,240,322.

    குறுந்: 91,110,169.

    அகநா: 32, 37, 70, 98, 101, 119, 150, 157, 227, 264, 282, 293, 305, 388
15. தொல், பொருள், இளம்: 217.
16. குறுந்: 104

    அகநா: 22, 122, 175, 329, 352
17. வேங்கடசாமி நாட்டார், வேங்கடாசலம் பிள்ளை (உ.ஆ) அகநானூறு, ப.59.
18. மேலது.
19. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.58.
20. நற்: 180, குறுந்: 13, ஐங்: 224, கலி: 51, அகநா: 58.
21. ஈ.கோ. பாஸ்கரதாஸ், அகப்பொருள் பாடல்களில் தோழி, ப.25.

22. ஆ.இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.119.

23. ம.ரா.போ.குருசாமி, சங்க காலம், ப.109.

24. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.81.

25. நற்:244, குறுந்: 31, 305, 385, ஐங்: 201, கலி: 54, 76, 111, அகநா:52, 82.

26. கலி: 111: 8, 12-13, 16-17.

27. ஐங்: 201.

28. நற்: 244: 2-6,

29. குறுந்: 385: 2-7.

30. குறுந்: 31: 1-3.

31. குறுந்: 31: 4-6.

32. அகநா: 82.

33. குறுந்: 31: 4-6.

34. நற்:14, குறுந்: 3, 96, 187, 313, அகநா:22, 332.

35. நற்:14: 1-2.

36. அகநா: 22: 6-11.

37. அகநா: 372: -15,

38. குறுந்: 3.

39. கலி: 42: 8-10.

40. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.66.

41. நற்: 187, 287, குறுந்: 57, 87, 306, 401, கலி: 108, 123, அகநா:292.

42. நற்: 187: 1-7.

43. அகநா: 292: -7, குறுந்: 87: 5.

44. குறுந்: 87: -4.

45. குறுந்: 87: 1-3.

46. அகநா: 292: 1-6.

47. அகநா: 292: -15.

48. குறுந்: 401: 1-3.

49. குறுந்: 57.

50. கலி: 123.

51. குறுந்: 306: 1-3, 6.

52. நற்: 104, 255, குறுந்: 121, 150, ,185, 320, அகநா:58, 298, 318.

53. குறுந்: 185: 2, 7-8.

54. நற்: 104, 9-12, நற்: 255.

55. குறுந்: 340: 5-7.

56. குறுந்: 150: 3.

57. அகநா:298 - 11-22.

58. குறுந்: 121.

59. நற்: 17, 31, 51, 94, 136, 144, 236, 275, 388.

குறுந்: 125, 141, 158, 161, 219, 239, 246, 261, 269, 299, 311, 318, 320, 322, 326, 327, 360.

ஐங்: 111, 113, 114, 115, 116, 117, 119, 120, 204, 215, 221, 222, 224, 272, 278.

அகநா: 8, 72, 102, 122, 128, 138, 252, 260, 290, 328, 348, 378, 388, 389.

60. குறுந்: 296: 6-8.

61. குறுந்: 161: 158:(மழையைக் கடிதல்)

62. அகநா: 102, 18-19, ஐங்: 222.

63. குறுந்: 269.

64. அகநா: 72.

65. நற்: 144: 1-4. (உள்ளுறை)

66. ஐங்: 120.

67. குறுந்: 311, அகநா: 102.

68. அகநா: 378, - , நற்: 31: 3-5 (உள்ளுறை).

69. ஐங்: 204: -5.

70. ச.மெய்யப்பன், சங்க இலக்கியத்தில் பெண்கள், ப.5.

71. குறுந்: 246: 1-5, நற்: 236: 1-6.

72. ஐங்: 272.

73. ஐங்: 111 அகநா: -252.

74. எம்.ஏ.சுசிலா, சங்க இலக்கியத்தில் வெறியாட்டு, பத்தாவது கருத்தரங்க ஆய்வுக்கோவை, (இ.ப.த.ம) ப.312.

75. நற்: 51: 5-6.

76. அகநா: 138: .

77. குறுந்: 360.

78. ஐங்: 119.

79. குறுந்: 318 - 8.

80. நற்: 388: 3-15. (உள்ளுறை)

81. குறுந்: 322: 4-5.

82. ஐங்: 115.

83. குறுந்: 239: 1-2, 125: -1.

84. குறுந்: 125.

85. அகநா: 290: 15-16.

86. ஐங்: 221: - 2.

87. நற்: 275: 7-9.

88. நற்: 187.

89. ஐங்: 215: - 5-6.

90. குறுந்: 326.

91. நற்: 17: 1-7.

92. ஐங்: 278, அகநா: -260, 378.

93. குறுந்: 327: 3-4.

94. ஐங்: 114: (உள்ளுறை).

95. குறுந்: 219, அகநா: 215 (நெஞ்சம் அவன்பால் சென்றது எனல்).

96. அகநா: 8: 16-18.

97. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.169.

98. நற்: 338, 382, ஐங்: 161, 162, ,163, கலி:42, 64. அகநா. 325.

99. ஐங்: 163: - 3-4.

100. ஐங்: 161: - 3-4.

101. நற்: 382: - 1-4.

102. நற்: 338: - 9-12.

103. ஐங்: 162: (உள்ளுறை)

104. கலி: 42: 10-12, 16-18, 22-24.

105. கலி: 42: 13-15, 19-21, 25-30.

106. கலி: 64: 25-31.

107. கலி: 64: 5-24.

108. ந.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, ப.59.

109. நற்: 54, 70, 102, 277 குறுந்: 107.

110. நற்: 335, 348, குறுந்: 92, 163, அகநா:170,398.

111. நற்: 102.

112. குறுந்: 107.

113. மு.சண்முகம்பிள்ளை, குறுந்தொகை(ப.ஆ), ப.102.

114. அகநா: 398.

115. நற்: 348 - 1-7.

116. நற்: 335 - 1-7.

117. குறுந்: 92 - 4-5.

118. நற்: 335: - 8-10.

119. நற்: 348: - 8-10.

120. நற்: 335: - 11.

121. ஆ.இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.83.

122. மேலது, ப.84.

123. மேலது.

124. அகநா: 90: 9-14.

125. குறுந்: 315.

126. அகநா: 147, 187.

127. ஆ.இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.122.

128. இராம. பெரியகருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய வகைகள், ப.167.

129. நற்: 87, 219, 249, 272, 304, 327.

குறுந்: 11, 13, 25, 38, 54, 97, 105, 112, 118, 133, 145, 266, 310, 395, 399.

ஐங்: 141, 142, 144, 183, 295. அகநா: 345, கலி: 128.

130. ஐங்: 150 - (உள்ளுறை).

131. குறுந்: 25 - 3-5.

132. குறுந்: 97 - 3-4.

133. குறுந்: 115 - 2-5.

134. ஐங்: 183 - 2-6.

135. குறுந்: 11 - 2-3.

136. குறுந்: 13-5, 399.

137. குறுந்: 38 - 4-5, ஐங்: 142.

138. நற்: 219 - 1-2.

139. ஐங்: 141, பொ.வே. சோமசுந்தரனார், ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.178, ஐங்: 395.

140. நற்: 272 - 6-7.

141. குறுந்: 38 - 1-3 (உள்ளுறை).

142. நற்: 249 - 10-11.

143. அகநா: 345 - 1-11.

144. குறுந்: 87.

145. குறுந்: 266.

146. குறுந்: 105- 1-5.

147. குறுந்: 310- 5-7.

148. நற்: 56, 309, 357. குறுந்: 4, 5, 6, 28, 36, 134, 153, 170, 171, 172, 205, 226, 240, 245, 249, 301, 302, 304, 315, 334, 377 ஐங்.112.

149. குறுந்: 153- 1-3.

150. குறுந்: 301- 8.

151. குறுந்: 302- 7-8, 4.

152. குறுந்: 315 - 5-6.

153. குறுந்: 304 - 7.

154. குறுந்: 226- 1-4, 377.

155. குறுந்: 25 -7.

156. நற்: 357- 5-6 (இறைச்சி)

157. நற்: 56- 5.

158. Shakespears treatment of love and marriage p.19,
மேற்கோள்: வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.77.

159. குறுந்: 391 - 7-8.

160. குறுந்: 28.

161. குறுந்: 334 - 4-6.

162. நற்: 309.

163. குறுந்: 315 - 3-4.

164. ஐங்: 112.

165. குறுந்: 240 5-7, 249.

166. குறுந்: 172 - 3-4.

167. நற்: 117, 133, 332, 347.
குறுந்: 30, 152, 160, 208, 223, 316, 371.
ஐங்: 209, 262, 274 கலி. 131.

168. ஐங்: 222 - 1-2.

169. குறுந்: 371 - 1-4, நற்: 133 - 1.

170. நற்: 133 - 1-2.

171. நற்: 347 - 1-3 (இறைச்சி) ஐங்: 274.

172. நற்: 133 - 6-8.

173. குறுந்: 316 - 2-3.

174. ஐங்: 274 - 3-5.

175. குறுந்: 205 - 2-4.

176. ஐங்: 209 -5.

177. குறுந்: 160 - 5.

178. நற்: 332 - 6-8.

179. ஐங்: 262 - 1-2.

180. குறுந்: 185 - 3-4.

181. அ.நடராச பிள்ளை, திணைமாலை நூற்றைம்பது, மூலமும் பழையவுரையும் (உ.ஆ), ப.140.

182. நற்: 35, 116, 218, 304, 327, 369, கலி: 137.

183. நற்: 38 - 1-6.

184. நற்: 369 - 1-4.

185. நற்: 218 - 2-4.

186. கலி: 137 -1.

187. கலி: 137 - 5-7.

188. கலி: 137 - 9-12.

189. கலி: 137 - 15-17.

190. கலி: 137 - 21-22.

191. கலி: 137 - 24-27.

192. நற்: 116 - 11-12.

193. நற்: 327 - 1-4.

194. நற்: 304 - 1-4 (உள்ளுறை).

195. குறுந்: 257, 368, ஐங்: 146, 181, 192, 213, 253, 263, கலி: 115.

196. ஐங்: 181.

197. ஐங்: 253 (உள்ளுறை).

198. ஐங்: 213 2-5 (உள்ளுறை).

199. ஐங்: 192 1-3 (உள்ளுறை).

200. ஐங்: 146 1-2 (உள்ளுறை).

201. குறுந்: 257.

202. குறுந்: 365, - 6-8, ஐங்: 263 - 1-3.

203. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.132.

204. நா.வானமாமலை, ஆராய்ச்சி மலர் 6, இதழ் 2, ப.91.

205. எஸ்.இராமகிருஷ்ணன், இந்தியப் பண்பாடும், தமிழரும், ப.294.

206. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.136.

207. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.86.

208. குறுந்: 149, அகநா: 95, 325, ஐங்: 256 (களவுப் பகுதிக்குரியன)

ஐங்: 203, 312, 384, 385, 392, 397 (கற்புப் பகுதிக்குரியன)

209. அகநா: 325, ஐங்: 286.

210. அகநா: 95: - 1-3, 11-15, 325: 4-5.

சங்க இலக்கிய அகப்பாடல்களில் தலைவியின் காதல் வாழ்வு, இயற்கைப் புணர்ச்சியாய்த் தோற்றம் பெற்று, பாங்கிமதி உடன்பாடாய் வளர்ந்து, பகற் இரவுக்குறியாய் முதிர்ந்து, வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல், உடன் போக நினைத்தலாய்த் திருப்பம் பெற்று, வரைவாய் முடியும். வரைவும் வரைவிற்குப் பின் தொடங்கும் தலைவியின் கற்பு வாழ்விலும் தலைவி நிகழ்த்தும் சொல்லாடல் சங்க இலக்கிய அகப்பாடல்களில் பதிவு செய்யப் பெற்ற விதத்தை ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

## கற்புத் துறைகள்

கற்பு வாழ்வில் தலைவி கூற்றுப் பாடல்களாக 355*[1] பாடல்கள் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப் பெற்றுள்ளன. அவை பதினெட்டுத் துறைகளாகப் பகுக்கப்பெற்று விளக்கப் பெறுகின்றன. அத்துறைகள்:

1. உடன்போக்குக் கொண்ட தலைவி கூறல்
2. இல்வாழ்க்கை / கடிநகர் புகுந்த தோழிக்குக் கூறல்
3. கற்பில் செலவுக் குறிப்பறிந்த தலைவி கூறல்
4. பிரிவிடை ஆற்றாத தலைவி கூறல்
5. பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறல்
6. பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கூறல்
7. தலைவி பருவங்கண்டு அழிதல்
8. பருவங்கண்டு ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறல்
9. பருவங்கண்டு அழிந்த தலைவியை வற்புறுத்தும் தோழிக்குக் கூறல்
10. தலைவி வன்பொறை எதிரழிதல்
11. பிரிவிடை வற்புறுத்தும் பாணர்க்குக் கூறல்
12. தலைவி தோழிக்கு வாயில் மறுத்தது
13. தலைவி தலைவனுக்கு வாயில் மறுத்தது
14. தலைவி வாயில்களுக்கு வாயில் மறுத்தது
15. தலைவி தோழிக்கு வாயில் நேர்தல்
16. தலைவி தலைவனுக்கு வாயில் நேர்தல்
17. தலைவி வாயில்களுக்கு வாயில் நேர்தல்
18. தலைவி தலைவனொடு ஊடுதல்

ஆகியவையாகும்.

உடன்போக்குக் குறித்த தலைவி கூற்றுப் பாடல்களை மூன்றாகப் பகுக்கலாம். அஃற்றில் உடன்போக்கு உணர்த்திய தோழிக்குக் தலைவி கூறல் என்பது களவிற்குரியது. இது முன் இயலின் இறுதியில் விளக்கப் பெற்றது. எஞ்சியுள்ள இரு பாக்கள் கற்பிற்குரியன.

## 1. அ. உடன்போக்குக் கொண்ட தலைவி கூறல்

இத்துறையில் ஆறு செய்யுட்கள் அமைக்கப் பெற்றுள.[2] உடன்போக்கு மேற்கொண்ட தலைவி ஆண்டு எதிர்வரும் அந்தணரை நோக்கி, "தான் தலைவனொடு இனிதே செல்கின்ற செய்தியை என் தோழிமார்க்கு உணர்த்தி அருள்க" என்பதை,

'சேட்புல முன்னிய அசைநடை அந்தணீர்
நும்ஒன்று இரந்தனன் மொழிவல் எம்ஊர்
ஆய் நயந்தெடுத்த ஆய்நலம் கவின
ஆர்இடை இறந்தனள் என்மின்
நேர்இறை முன்கை என் ஆயத்தோர்க்கே' (ஐங்: 384)

என்றும், இடைச்சுரத்தில் கண்டோரை நோக்கிக் கூறும்போது, "தன் உடன் போக்கினைத் தாய்க்கு உணர்த்தும்படி"[3] வேண்டுவதும் ஆகிய இரண்டு நிலையில் அமைந்து காணப்பெறுகிறது.

## 1. ஆ. உடன் போய் மீண்ட தலைமகள் கூறல்

"தமரும் ஆயத்தாரும் பிரிவால் வருந்தும் வருத்தம் நீங்குதற் பொருட்டும், வதுவை நன்மணம் தன் மனையிலேயே நிகழ்தற்குக் கருதியும் தலைவனை அழைத்துக் கொண்டு தன்னூர்க்கு வருபவள் வழியில் தன்னூர்க்குச் செல்கின்றவர்களிடம் தன் வருகையைத் தன் சுற்றத்தார்க்கு அறிவிக்கும்படி கூறுவதனை,

'சுரன்அணி வாரா நின்றனள் என்பது
முன்னுற விரைந்த நீர் உரைமின்
இன்நகை முறுவல் என் ஆயத்தோர்க்கே' (ஐங்: 397: 3-5)

என மொழிந்து இல்லிற் புகுந்த நிலையில், "பாலைப் பரப்பில் வழி நடை வருத்தத்தால் தலைவன் வாட்டம் அடைந்திருத்தலைச் சுட்டி,

தோழி வருந்த அது கேட்ட தலைவி, தோழியைக் கடிந்து இதனை எம் பெருமான் கேட்டால் வருந்துவர். அவர் வருந்தினால் நாமும் வருந்துவோம் என்று தோழியின் வாயை அடக்கிய நிலையில் மீண்டும் தோழி,"[4] "நீவிர் பாலையிற் சென்ற பின்னர் நும் தமையன்மார் தொடர்ந்து வந்தனரே, அவ் வேளையில் என்ன செய்தீர் என வினவத் தலைவி தமக்கு உதவிய மலையை வாழ்த்திய செய்தியைக் கூறினள்"[5] அதற்குத் தோழி தலைவன் நாட்டு நீர் இனியவல்ல; நீ எங்ஙனம் நுகர்ந்தாய் என்றமைக்குத் தலைவனொடு இருந்து விருந்தோம்பி நல்லறஞ் செய்து எஞ்சியது உண்ணலின் தந்தை மனையிற் தன் உடலாக்கம் ஒன்றே கருதி வாழ்ந்தேன் எனவம் பாலினும் கலிழி நீர் இனிதாயினதை,

'. . . . . .   . . . . . .   . . . . .  நம் படப்பைத்
தேன் மயங்கு பாலினும் இனிய அவர் நாட்டு
உவலைக் கூவற் கீழ
மான் உண்டு எஞ்சிய கலிழிநீரே'   (ஐங்: 203)

எனவும் தலைவி மொழியும் மனப்பாங்குக் காணக்கிடக்கின்றது.

## 2. இல்வாழ்க்கை/ கடிநகர் புகுந்த தோழிக்குக் கூறல்

தோழி கடிநகர் புகுந்த நிலையில் தலைவி கூறுவதாக ஆறு செய்யுட்கள் அமைந்துள."[6] ஆற்றினாய் என்ற தோழிக்குத் தலைவி ஆற்றினமைக்குக் காரணங் கூறுவது இரண்டு நிலைகளில் காணப்பெறுகிறது.அவை,

1. தோழி கடிநகர் புகுந்த நிலையில் முன்பு தலைவி ஆற்றினமை
2. தலைவன் பரத்தமையிற் பிரிந்த நிலையில் தலைவி ஆற்றினமை என்பனவாகும்.

தோழி கடிநகர் புகுந்த நிலையில் முன்பு தலைவி ஆற்றினமையாக நான்கு பாடல்கள் அமைந்துள. தலைவன் தலைவியை வரைந்து கொண்டு இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்ற தோழி, தலைவியை நோக்கி நீ வரைந்து கொள்ளுந் துணையும் நன்கு ஆற்றியிருந்தது எவ்வாறு என்று வினவ, அதற்குத் தலைவி தலைவர் வரைவொடு வருவார் என்று அயன் மனைக் கிழத்தி அறிவுறுத்தியதை,

'அமிழ்தம் உண்க நம் அயல் இலாட்டி

. . . .  . . . . .  . . . . .  . . . . .

மலைகெழு நாடனை வரும் என்றோளே' (குறுந்: 201: 1,7)

எனக்கூறி, மேலும் 'தலைவன் களவில் வெண்ணிலா ஒளியிலே என் தோள்களைத் தழுவினான். அதனால் இக்காலத்தும் அம்மேனியின் முல்லை மணம் கமழ்வதை'

'. . . .  . . . . .  . . . .  நாடன்

தொல்லைத் திங்கள்நெடு வெண்ணிலவின்

மணந்தனன் மன் எம் தோளே

இன்றும் முல்லை முகை நாறும்மே' (குறுந்: 193: 3-6)

எனக் கூறுவள். "தலைவன் மலையிலிருந்து அருவியால் கொணரப் பெற்ற காந்தள் மலரைத் தழுவியும்,"(8) "தலைவன் நாட்டுக் கடல்திரை நம்மூர்க்கு வந்து பெயர்தலால் அதனையும்"(9) பற்றுக் கோடாகக் கொண்டு யான் வரையுந் துணையும் ஆற்றியிருந்தேன். அதுமட்டுமன்று; "தலைவன் நல்ல குடிப்பிறப்பினன்; கூடியவரைப் பிரியான்; தீயன சொல்லான் அன்பு உடையவன் என்று நல்லவற்றைக் கூறி அவனுடன் நீ கூட்டினை. ஆதலால் நீ நல்லவள். அவன் அதியமான் அஞ்சியின் பாணன் பண்ணை விடவும் புதியதாய் இயற்றிய திறத்தை விடவும் மணம் புணர்ந்த நாளை விடவும் இனியனாக உள்ளான்"(10) என இல்வாழ்க்கையின் இன்பம் கூறுவள்.

### 3. கற்பில் செலவுக் குறிப்பறிந்து தலைவி கூறல்

செலவழுங்குவித்தல் துறையின் முழு நிலையை மு.வரதராசன் அவர்களின் 'ஓவச் செய்தி' எனும் நூல் திறம்பட மொழிகின்றது. "சங்க இலக்கியம் நிலையாமைத் தத்துவத்தைக் கூறினும் செலவழுங்குவிக்கும் உத்தியாக அதனைப் பயன்படுத்தும் பாங்கு பாலைக் கலியிலேயே மிகுதி. ஏனைய சங்க இலக்கியங்களில் நற்றிணைப் பாடல் ஒன்றில் மட்டும் அவ்வுத்தி அமைகிறது."(11) "கற்பில் செலவழுங்குவித்தலில் தலைவியைப் பிரிந்து தலைவன் உறைவது அரிது எனக் கூறும் குறிப்பு இடம்பெறவில்லை. தலைவனின் பொருள், போர் பிரிவின் காரணமாகத்

தலைவி நிலை அழிவதைச் சுட்டியே செலவழுங்க முயல்கிறாள். இதன் அடிப்படையில் சங்க இலக்கியத்தில் இருபத்திரண்டு பாக்கள்"[12] தலைவி கூற்றில் உள.

அவற்றில் தலைவன் பொருளின் காரணமாகவும், வினையின் காரணமாகவும் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான் எனும் துறைக் குறிப்புகளும் இவை இரண்டும் தவிர்த்து தலைவன் செலவுக்குறிப்பறிந்து தலைவி கூறியது எனப் பொதுவான துறைக் குறிப்பும் அமைந்து காணப் பெறுகிறது.

### 3. அ. பொருள்வயிற் பிரிவு

பெருமை நோக்கமும் மனத்திட்பமும் தலைவனுக்குரிய பண்புகள்; ஆதலின் அவன் இன்பியல் வாழ்க்கை துறந்து கடமைகளைச் செய்து குடும்பம் நடத்துவதற்குப் பொருள் இன்றியமையாததாகின்றது. தலைவன் பிரிவு வகைகளில் நாடு காவற் பிரிவு, பகைவயிற் பிரிவு, தூதிற் பிரிவு, ஓதற் பிரிவு, பரத்தையிற் பிரிவு எனப் பிரிவு பல வகைகள் இருப்பினும் களவிற்கும் பொதுவாய் அமைந்த பொருள் வயிற் பிரிவு எனும் துறை சங்கப் புலவர்களின் நெஞ்சை அள்ளிய துறைகளுள் ஒன்று.

தலைவன் பிரிவான் என்பதை அறிந்த தோழி தலைவியிடம் கூற அவள் தலைவனை முதலில் நம்பிக்கையொடு புகழ்கின்றாள். "தலைவன் வாய்மையுடையவன்; இனிமையுடையவன்; என் தோள்களைப் பிரியாதவன்; அவனுடன் நான் கொண்ட நட்பு தாமரையின் தாதினை வண்டு ஊதி மலை மேல் சந்தன மரத்தில் தேனைச் சேர்த்து வைக்கும் தன்மையுடையது. அத்தகையவர் நம்மைப் பிரிந்து நெற்றியில் பசலை படர்தலைக் கண்டு அஞ்சுவர்; ஆதலின் அவர் நம்மைப் பிரிந்து சிறுமை அடைய மாட்டார்"[13] என்பதில் தலைவியின் மனத் திட்பம் காணப்பெறுகிறது.

பின் தலைவன் பிரிவை உணர்த்திய தோழியிடம், "பிரிந்து வாழும் வல்லமை உடையவர்க்குச் சொல்வதேயன்றி என்னிடம் சொல்வதேன்"[14] எனக் கூறி, "தலைவன் செலவைத் தடுப்பது உன் கடமையாக இருக்க அதைச் செய்யாமல் அயலாரைப் போல அவர்

பிரிவை உணர்த்தி வந்தது தகுதியன்று"[15] எனத் தோழியைக் கடிந்து, "பிரிவை உணர்ந்த போதே உடல் வேறுபடுகின்றது. தலைவன் பிரிந்தால் என் உயிர் பிரிந்துவிடும். பிரிந்தவர் வந்து கூடவும் கூடியிருந்தோர் பிரிதல் சூழ்தலைக் காட்டிலும் அரிய கொடுமை பிறிது உண்டோ"[16] எனத் தலைவி வினவி, தலைவன் செலவை எவ்வாறு தடுப்போம் என்கிறாள்.

"தலைவன் நம்மைப் பிரிந்து பாலை வழியில் பொருளை நினைந்து செல்வானாயின் இப்பொருளே, பொருளாக மதிப்பவரல்லாமல் இவ்வுலகில் அருளைப் பொருளாக மதிப்பவர் யாரும் இலர் போலும்."[17]இத்தகைய அருளும் அன்பும் இன்றி நம்மைப் பிரியக் கருதினால் நாம் என் செய்வோம். அத்தகையவர் அறிஞர் ஆயினும் ஆருக பிரிவாற்றாது யாம் பேதையம் ஆவோம் "[18]என்கிறாள் தலைவி.

தலைவன் பிரிவால் ஆழ்ந்து வருந்தும் நம்மை "இன்னாதவற்றைக் கூறுகின்றோம். ஊரார் சொல்வதென்ன; தலைவன் காட்டில் தனியே செல்ல அவனைப் பிரிந்து நாம் வருந்துவது இயல்பாகவும் இருக்க ஊரார் நம்மைப் பழி சொல்வதன் காரணம் என்ன?. "[19] வாடைக் காற்றுடன் பனி மிகுந்து நள்ளிரவில் ஈர் உடம்பிற்கு ஓர் உயிர் என வாழும் காதலர் வருந்துவர்; ஆயின் அருள் இல்லாத நம் தலைவர் பொருள் ஈட்டச் சென்றதனால் "அன்றிலின் குரலால் உள்ளத்தில் தீ உண்டாக மெல்லென ஊதும் குழலோசையைக் கேட்டு நான் எவ்வாறு ஆற்றியிருப்பேன்."[20] தோழி, நீயோ "பனிப் பருவம் பிரிவதற்கு உகந்தது அன்று; ஆதலால் பிரியாதீர் என்ற அறிவுரையையும் அறிவுறுத்தியிருக்க வேண்டும்; நீயும் அதனைச் செய்யவில்லை."[21] ஆதலின் தலைவனுடன் புணர்ச்சி இப்போது இல்லை. "பசலையானது என் நலத்தை உண்ண வேண்டி நெஞ்சை வருத்தி எழுகின்றது. முன்பு தலைவன் அருகில் இருப்பினும் மாலைப் பொழுது கண்டு அஞ்சும் நான் அவன் பிரிவை எங்ஙனம் ஆற்றுவேன்."[22] அன்பிற்குரிய நீயோ "என் தோள் மெலிதல் தவறுடையது என்கிறாய்; கடத்தற்கரிய பாலை நிலத்தில் தலைவர்

செல்வார் என்று யான் என்னுடைய இத்தோளை மெலிவு செய்தல் எங்ஙனம் தவறுடையதாகும்."[23]

"அன்புடையவன் ஆற்றலில் பெரியவன் எனும் தகுதியுடைய தலைவன் குயில்கள் கிளைகளில் உட்கார்ந்து கொண்டு கணவனோடு சேர்ந்தவர்கள் பிரியாதீர்கள்; பிரிந்தால் சேர்ந்து கொள்ளுங்கள் என்று சொல்லும் வேனில் காலத்தில் நம்மைப் பிரியமாட்டேன் என்று உறுதி சொன்னவர் அருஞ்சுரத்தின் வழியே போக எண்ணினார் பற்றி யான் என்ன சொல்வேன்."[24] "பிரிந்தவர் இரங்கும் கார்காலத்தில் வினையை நினைந்த உள்ளத்தோடு சென்றவரை நினைந்து இனி ஆவது என்ன இருக்கின்றது."[25]

தலைவன் பிரிந்து சென்றான் என்று கூறிய "ஆர்வலர் பலராவர்."[26] "இவர்கள் எல்லாம் என்னைத் துன்பத்துள் வீழ்த்துவாரேயன்றி அவரது வருகையை உணர்த்தி எனது கண்ணீரைத் துடைப்பாரை யான் பெற்றிலேன்"[27] என்று தலைவி புலம்பும் நிலை உணரமுடிகின்றது. ஆகையான் தலைவனுக்கு "சில வாழ்நாள் இயல்பையும் இளமையின் அருமையையும்,"[28] இளவேனிற் பருவத்து இயல்பையும், கைவளை நெகிழ்வையும்"[29] எடுத்துக் காட்டி, "பொருளை விரும்பி அருள் இல்லாது போகுதல் உனக்குப் பொருந்துவதன்று என்று சொல்லி ஊடி வவோம்."[30] அல்லது "காட்டின் இயல்பைக் கூறி நம்மை விடுத்துச் சென்ற அவரிடம் நீவிர் செல்லும் வழியில் உண்டாகக் கூடிய துன்பத்தில் உதவக் கூடிய இன்பத்தில் பங்கு கொள்வது போல் துன்பத்திலும் துணையாகப் பங்கு பெறுமாறு என்னை அழைத்துச் செல்க எனக் கூறுவோம் எனும் மனநிலையும், தலைவனைப் பொருள் தேடச் செல்ல விடுத்தது நன்று என்ற மனநிலையும் காணப் பெறுகிறது."[31]

### 3. ஆ. வினைவயிற் பிரிவு

தலைவன் வினைவயிற் பிரிய நினைந்ததும் பிரிந்ததுமாக அமைந்த பாடல்களில் தலைவன் சுரம் போதலைத் துணிந்தாய் அவன் செய்த குறிப்பைத் தலைவி அறிந்தாள். "அவன் வேலின் இலைப்

பகுதியைத் துடைத்தான்; படையை மயிலின் பீலி சூட்டி அழகு செய்தான். முன்பைக் காட்டிலும் என்னைப் பல பாராட்டுவதும், கண்ணும், தோளும், நுதலும், கூந்தலும் தைவரலும், இறுகத் தழுவலும், உறுப்புகளைப் பலகாலும் நோக்கி நிற்றலும், நோக்கி மீளலும், வாளா உரையாடலும் முதலியன உண்டு."[32] அவன் பிரியும் நாள் வந்தது; பிரிந்தான்; நாட்கள் பல ஆயின. ஆதலால் தலைவி வருந்தித் துன்பத்திற்கு ஆளாகி "வெள்ளி வீதி என்பவள் காட்டில் தன் கணவனைத் தேடிச் சென்றாள். அவளைப் போல நானும் செல்லுதலை விரும்பினேன்"[33] எனத் தலைவி தோழியை நோக்கிச் சொன்னாள்.

## 4. பிரிவிடை ஆற்றாத தலைவி கூறல்

பிரிவிடை ஆற்றாத தலைவி கூற்றாக "அறுபத்தைந்து"[34] செய்யுட்கள் அமைந்துள. அவற்றினை,

1. தலைவன் பொருளை முதன்மையாக உணர்கின்றான் என ஆற்றாது கூறல்.
2. அறத்தின் தன்மையை உணர்ந்து ஆற்றாது கூறல்
3. நெஞ்சம் இடையறாது தலைவனை நினைக்கிறது என ஆற்றாது கூறல்
4. மராவினது மணம், உயிரினங்களின் செயல் கண்டும் தலைவன் மீளாத நிலையில் தலைவி ஆற்றாது கூறல்
5. மாலை கண்டு ஆற்றாது கூறல்
6. பொழுது கண்டு ஆற்றாது கூறல்

எனப் பகுக்கப் பெற்று விளக்கப் பெறுகிறது.

### 4. 1. தலைவன் பொருளை முதன்மையாக உணர்கின்றான் என ஆற்றாது கூறல்.

தலைவன் பொருளை முதன்மையாக உணர்கின்றான் எனத் தலைவி ஆற்றாது கூறுவதாக "எட்டுச் செய்யுட்கள்"[35] அமைந்துள.

இயற்கைப்புணர்ச்சிப் பொழுதில் தலைமகன் தலைவியைத் தெளிவகப்படுத்த நின்னைப் பிரியேன் என்று உறுதி மொழிந்தான். மேலும் தலைவன் உலகில் யாரிடத்தும் நிலைத்திருக்கும்

தன்மையில்லாத புல்லிய பொருளால் உண்டான வேட்கையை நிறைவேற்றிக் கொள்ளும் பொருட்டுத் தலைவன் பிரிந்ததை,

'. . . . .    . . . . .    . . . . மன்ற
நின்றது இல் பொருட்பிணி முற்றிய
என்றூழ் நீடிய சுரன் இறந்தோரே' (ஐங்: 336: 2-4)

எனக் குறிப்பிடுவள். "தலைவியைக் காதலிப்பதிலும் மிகுதியாய்ப் பொருளைக் காதலிப்பவன்."(36) 'அறத்தினும் பொருள் அரியது போலும்' என்ற கருத்தினை,

'பிரியல் ஆடவர்க்கு இயல்பு எனின்
அரிது மன்றம்ம அறத்தினும் பொருளே' (நற்: 243: 10-11)

என மொழிவள்.

"பொருளைப் பெரிதாக எண்ணிப் பிரிந்தவன் அருளில்லாதவன்."(37) ஏனெனின், "வளை நெகிழ,"(38) "பசலை படர,"(39) "வாடைக் காற்று"(40) வருத்த அருளத்தக்கவள் என்ன ஆயினள் என்று எண்ணாமல் 'பொருள் ஈட்டச் சென்றவனின் பொருள் வேங்கட மலையினும் இமய மலை போன்றதோ? இல்லையெனில் பாடலிபுரத்தில் திரண்டிருந்து பின் கங்கை நீரில் மறைந்து போன பெருநிதியமோ?' என்பதை,

'பனிஊர் அழற்கொடி கடுப்பத் தோன்றும்
இமயச் செவ்வரை மானும் கொல்லோ
பல்புகழ் நிறைந்த வேல் போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇ கங்கை
நீர்முதல் கரந்த நிதியம் கொல்லோ' (அகம்: 265: 2-6)

எனச் செப்புவள். ஆதலின் "அவர் மீண்டு விரைந்து வருவார் என்பது பேதைமை."(41) இதனால் "யான் உயிர் வாழ்வது அரிது"(42) என ஆற்றாது கூறுகின்றாள். இவை தலைவன் பொருளை முதன்மையாக உணர்வதாகத் தலைவி கூற்றில் அமையும் பாக்களாகும்.

### 4. 2. அறத்தின் தன்மையை உணர்ந்து ஆற்றாது கூறல்

அறத்தின் தன்மையை உணர்ந்து ஆற்றாது கூறுவதாக "பத்துச் செய்யுட்கள்"[(43)] அமைந்துள. அவற்றில் பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை. எல்லாம் பொருளின்பாற்படும் எனக் கருதித் தலைவன் தலைவியை விடுத்துப் பொருள் ஈட்டச் சென்ற பின், அவன் சென்ற பாலை நில வழியின் கொடுமையைத் தலைவி, பேய்த் தேரை நீர் என விரும்பிச் செல்லும் மான் கூட்டமும், வெப்பத்தால் வெண்ணெய் சிதறியது போல் நிறைந்திருக்கும் ஓமை மரங்களும் நிறைந்த சுரத்தினை,

'பெருநீர் ஒப்பின் பேஎய் வெண்தேர்
மரன்இல் நீள் இடை மான்நசை யுறூஉம்
சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற
பிறவா வெண்ணெய் உருப்பு இடந்தன்ன
உவர் எழு களரி ஓமை அம் காட்டு' (நற்: 84: 3)

எனச் சுரத்தின் தன்மையை மொழிவள். மேலும், "குருதி வடிப்பவரின் கண்ணைப் பறித்துக் குஞ்சுகளுக்கு உணவாகக் கொடுக்கும் கழுகுகளும்,"[(44)] "எருதுகள் வருந்தி வண்டியை இழுக்க வாரிச் சுழற்றி அடிக்கும் துாசிகளும்,"[(45)] "தீ பரவி அழிந்த இடங்களும், ஞாயிறு ஒளி காயும் பெரிய மலைகளும்,"[(46)] "உடைய அக் கொடிய நெறியைத் தலைவர் எவ்வாறு கடப்பார்."[(47)] "கடந்தவர் எவ்வாறு அவ்வழியில் மீள்வார்"[(48)] என நான் வருந்த "தலைவனைப் பழிப்பவர் சிலர் அதனினும் இவள் பிரிவாற்றாது வருந்தினள் என என்னையே பெண்டீர் பழிக்கின்றனர்."[(49)] இதனை,

'கண்உமிழ் கழுகின் கானம் நீந்தி
சென்றார் என்பு இலர்' (அகம்: 31: 11-12)

எனத் தலைவனுக்காகத் தலைவி இரங்கி மொழிகின்றாள். "யாம் வெறுக்கும் செயல் செய்யவில்லை; இவை விடுத்துச் சுரத்தில் சென்றவரை நல்லர், அருள் உடையர் என்று என் பேதைமையால் நம்பினேன்; என் நம்பிக்கையை அழித்து விட்ட வன்கண்மை உடையவன்,"[(50)] தலைவன் எனப் பழிக்கும் நிலையும் காணப்

பெறுகிறது. பொதுவாக இவ்வகைப் பாக்களில் சுரத்தின் தன்மை அறிந்து ஆற்றாத தலைவியின் மனநிலை வெளிப்படக் காணலாம்.

### 4.3. நெஞ்சம் இடையறாது தலைவனை நினைக்கிறது என ஆற்றாது கூறல்

இவ்வகையில் "ஆறு பாடல்கள்"[51] உள. இவ்வகைப் பாடல்களில் தலைவி நெஞ்சம் இடையறாது தலைவனை நினைந்து ஆற்றாது கூறியமைக்குரிய சான்று அடிகளின் தொடர்ச்சியாக விளக்கப் பெறுகிறது. தலைவனது பிரிவாற்றாது வருந்திய தலைவியிடம், தோழி ஆற்றியிருத்தல் சிறந்தது எனும்போது தலைவி, "மனம் ஒன்றை விட்டு ஒன்று பற்றி உழலாமல் ஆர்வத்தோடு ஒரு பொருளை ஊன்றி நினைக்குமாயின் தன்னால் நினைக்கப்பட்ட பொருள் தன்வயப்பட்டுத் தன்னுடையதாம் என்பது ஒரு மன இயல்பு."[52] அதற்கேற்ப என் நெஞ்சமானது "குருவிகள் காலையில் போய் மாலையில் நெற்கதிர்களுடன் திரும்புவது போல் தலைவன் வருவான் என்று நினைத்து,"[53] "எனக்குக் கைத்தர மறுத்து என்ன சொல்லினும் அவனையே நினைந்து நினைந்து வருந்தி"[54] "அறியாமையால் நெல்லி மரம் விளங்கும் பாலையில் அவனைப் பின் தொடர்ந்து,"[55] "மேகம் பெய்த பின் தென்திசை சென்று தங்குவது போல் அவன்பாற் சென்று தங்கிற்று."[56] அந்நிலையில் "அவன் அருள் செய்யாமையால் என்னிடம் திரும்பி வருவதினும் வராதிருப்பதற்குக்"[57] காரணம் 'பகை வேந்தன் அலைக்கழிப்பால் ஊர் மக்கள் பெயர்ந்து போய், பாழ் ஊரைத் தனிமனிதன் காத்திருப்பது போல் என் உடம்பு இருக்கிறது எனக் கூறுபவள்,

'. . . . . . . . . ஈண்டு ஒழிந்து
உண்டல் அளித்து என்உடம்பே விறல்போர்
வெஞ்சின வேந்தன் பகை அலைக் கலங்கி
வாழ்வோர் போகிய பேர்ஊர்ப்
பாழ் காத்திருந்த தனி மகன் போன்றே' (நற்: 153: 6-10)

என மொழிந்து தலைவன் சென்ற வழியில் நானும் செல்லத் துணிந்தேன் என்பதை,

'வழிநடைச் சேறல் வலித்திசின் யானே' (அகம்: 303: 20)

என நெஞ்சம் தலைவன்பாற் கொண்ட ஈடுபாட்டினால் தலைவி கூறியனள். தலைவி மேற்குறித்தவாறு தலைவன்பால் செல்ல நினைக்கும் நெஞ்சை நினைந்து ஆற்றாது புலம்புகின்றாள்.

### 4. 4. மராவினது மணம் உயிரினங்களின் செயல் கண்டு தலைவன் மீளாது தலைவி ஆற்றாது கூறல்

இவ்வகையில் தலைவி ஆற்றாது கூறுவதாக "ஆறு பாடல்கள்"[58] உள. தலைவன் பிரிந்து போகுமிடத்துக் குறிஞ்சி நிலத்து மகளிர் நறுமணமிக்க மராவினது மலரை விரும்பிச் சூடும் இயல்பினர் ஆகலின் அம் மணமே பெரிதும் கமழும் அவர்தம் கூந்தலாகிய பாயலில் வைகி, அவரைத் தழுவி இன்பம் நுகர்ந்த தலைவன்மார்க்கு மராமலர் கமழ்ந்த இடமெல்லாம் தம் ஆருயிர்க் காதலிமார் நினைவு மீக்கூர்ந்து மயங்குவர். ஆயின் தலைவன் மயங்காது சென்றதனை,

'கருங்கால் மராஅத்து வைகுசினை வான்பூ
அருஞ்சுரஞ் செல்லுநர் ஒழிந்தோர் உள்ள
இனிய கமழும் வெற்பின்
இன்னாது என்ப அவர் சென்ற ஆறே' (ஐங்: 331: 2-5)

என்பள் தலைவி. இருப்பின் அவர் உறையுமிடத்து "புறா பெடையை விளித்துப் புணரும் இயல்பினையும்,"[59] "மான் முதலிய விலங்கினங்கள் ஒன்றை ஒன்று காதலித்து மகிழ்ந்திருத்தலையும்,"[60] "தொழுவத்தில் ஆனேறு பசுக்களை நாடிச் செல்லுதலையும்,"[61] கண்டு அவற்றின் பாற்படும் அன்புதானுமின்றி "வன்நெஞ்சனாய்,"[62] "கொடியன்"[63] உறைகின்றான் எனத் தலைவி ஆற்றாது உரைப்பள்.

### 4. 5. மாலை கண்டு ஆற்றாது கூறியது

தலைவி மாலை கண்டு ஆற்றாது கூறியதாக "ஆறு பாடல்கள்"[64] உள. அவற்றில் தலைவி, மாலைப் பொழுது வந்தது

கண்டு ஆற்றாத தலைவி 'ஞாயிறு மலையில் மறைய, பறவையினம் தன் குஞ்சுகளோடு சேர, ஆண்மான் பெண்மானைத் தழுவ, முல்லை மலர, செங்காந்தள் விளக்குப் போல் விளங்க ஆவின் தெண்மணி ஒலிக்க, கோவலர் புல்லாங்குழல் ஊத மாலை வந்தது' என்பதை,

'பல்கதிர் மண்டிலம் பகல் செய்து ஆற்றி
சேய்உயர் பெரு வரைச் சென்று அவண் மறைய
பறவை பார்ப்பு வயின் அடைய, புறவில்
மா எருத்து இரலை மடப்பிணை தழுவ
முல்லை முகை வாய் திறப்ப பல்வயின்
தோன்றி தோன்றுபு புதல் விளக்கு உறாஅ
மதர்வை நல் ஆன்மாசு இல்தெண்மணி
கொடுங் கோற் கோவலர் குழலோடு ஒன்றி' (நற்: 69: 1-8)

எனக் கூறி, "என் அழகெல்லாம் உண்ட பசலை நெற்றியில் படர,"[65] "தன் கையில் வாளைக் கொண்டதாக மகளிரின் உயிரை உடலினின்றும் பிரித்து வாங்குவது போல"[66] "அருள் இல்"[67] மாலைக் காலம் வந்தது எனப் புலம்பி, அது தன் வேதனையை மிகுவிக்கின்றது. "இதனை அறியாது பலரும் மாலைக் காலம் என்று மயங்கிக் கூறுகின்றனர்."[68] 'இம் மாலைக் காலம் தலைவர் சென்ற நாட்டில் இல்லை போலும்' என்பதை,

'இல்லை கொல் வாழி தோழி நத்துறந்து
அரும் பொருட் கூட்டம் வேண்டிப்
பிரிந்து உறை காதலர் சென்ற நாட்டே' (நற்: 343: 8-10)

எனத் தலைவி வருந்துகின்றாள்.

மற்றொரு தலைவி, "இத்தகைய மாலைக் காலம் அவர் சென்ற நாட்டில் தோன்றினால் அவர் வினையை எவ்வாறு நிறைவேற்றுவார்"[69] எனத் தலைவனுக்காக இரங்கிய நிலையும் காணப்படுகிறது.

**4. 6. பிரிவிடைத் தலைவன் குறித்த பொழுது கண்டு ஆற்றாது கூறல்.**

தலைவி பொழுது கண்டு ஆற்றாது உரைப்பதாக "இருபத்து நான்கு பாடல்கள்"(70) அமைந்துள. பொழில் விளையாடியும், புதுப் பூக்கொய்தும் அருவி ஆடியும் பெரிதும் இன்பம் நுகர்தற்குச் சிறந்த இளவேனிற் பருவத்துக் காதலர் பிரிந்துறைவது பெரும் துன்பமாகலின், தலைவன் தலைவியை விட்டு, 'குயில் கூவும் கோங்கு மரங்கள் தளிர்க்க, எருதுகள் நீரைப்பருகி நுண்தாது மேலே படிய மணல் மேட்டில் உறங்கும் இளவேனிற் பருவத்தை',

'கோங்கும் கொய் குறை உற்றன குயிலும்
தேம்பாய் மா அத்து . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . .
"மதவுடை நாக்கொடு அசைவீடப் பருகி
குறுங்காற் காஞ்சிக் கோதை மெல் இணர்ப்
பொன் தகை நுண் தாது உறைப்ப' (அகம்: 341: 2-3, 8-1)

எனக் கூறித் தலைவன் பிரிந்தமைக்குக் காரணம் "அன்பின்மையே"(71) எனக் கூறுவள். மேலும், "வேம்பு பழுக்கும் முதுவேனிற் பருவத்தில் வருவேன் என்று போனவன் வரவில்லை."(72) மற்றும் நொச்சியைக் காட்டி அதில் உள்ள முல்லைக் கொடி மலரும் கார் காலத்தில் மீள்வேன் எனக் கூறியதனை,

'தாழ்வின் நொச்சி சூழ்வன மலரும்
மௌவல் மாச்சினை காட்டி
அவ் அளவு என்றார் ஆண்டுச் செய்பொருளே'(அகம்: 23: 11-13)

எனக் கூறி மீள்வேன் என்றவன் மீளவில்லை. இப்பொழுது "தலைவன் சொன்ன காலமெல்லாம் நீங்கி ஊர் நனி மன்று தோறும் இயம்ப மாரியோடு மாலை வந்தது."(73) இதனுடன் "வாடையும்"(74) வந்து துன்பம் செய்கிறது. இவற்றையெல்லாம் கடந்த நிலையில் "உழுந்தின் முதிர் காயை மானினிங் கவர்ந்துண்டற்குக் காரணமான பனிக் காலத்திலும் தலைவியின் துயரத்தை அறியவில்லை. "அறிந்தாலும் மென்மை இல்லாமையால் உலகத்து இயல்பை நினைக்கவில்லை

அல்லது "அவர் குறித்த காலம் கடந்து விட்டது என யாம் மயங்கி விட்டோமோ என்பதை

'மருள் உற்றனம் கொல்' (ஐங்: 340: 4)

எனத் தலைவி வருந்துகிறாள். பிரிவிடைத் தலைவி "தலைவன் இப்போது வருவராயின் நல்லது."(77) எதனாலெனின் "அரக்குடன் சேர்ந்த கல்லைப் போல யாம் உன்னைப் பிரியேன்"என்பதை,

'கல் போல் பிரியலம் என்ற சொல்தாம்

மறந்தனர் கொல்லோ'(அகம்: 1: 6-7)

எனக் கூறியதையும் "மறக்க முடியாத நினைவுகளை நினைந்து வருந்த அவள் அழகானது பசலையில் அழியவும்,"(78) "வாடையால்,"(79) மூங்கில் தோளில் அணியப்பட்ட அணிகலன்கள் கழன்று "வீழவும்,"(80) "நோய் மிக,"(81) 'கூந்தல் பாயலில் துயிலும் தலைவரை தைவரற்கு உரிய காலத்தில் கூந்தலை மட்டும் தைவருகின்றேன்' என்பதை,

'வருங் குரற் கூந்தல் தைவருவேனே'(குறுந்: 192: -6)

என்பள். இதனால் அவன் பிரிவதற்கு "உடன்பட்ட கண்கள் இப்பொழுது அழுவது நாணமற்றது." இதனை,

'நாண் இல மன்ற எம் கண்ணே . . . . .

. . . . . . . . . . . . . . . . . .

. . . . . பிரிந்திசினோர்க்கு அழுலே'(குறுந்: 35: 1,5)

என இவ்வடிகளில் விளக்குவள். காரணம், "பிரிந்தவர் மறவாதிருப்பின் வந்திருப்பர்."(82) "பறவை தன் கூட்டை விட்டு அகன்றது போல என் உயிர் உடம்பை விட்டுப் போகக் கூடிய துன்பமாக அமைந்துள்ளது."(83) ஆதலின் "தலைவனுடைய தண்ணளியும், நயப்பும் கிடைக்கப் பெறாவிடினும், கிடைக்கப் பெற்றது போல் அவனைக் காணுந்தோறும் இனிமையுறுவேன்."(84) இவ்வாறெல்லாம் கூறுவதன் வழி, பொழுது செய்யும் துன்பம் நினைந்து தலைவி வருந்திக் கூறியதனை அறியமுடிகிறது.

**5. பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறல்**

இத்துறையில் "இருபத்து ஒன்று"[85] செய்யுள் அமைத்துக் கொள்ளப் பெற்றன. ஆற்றேன் எனக் கூறுவதற்கும் ஆற்றாமைக்கும் காரணம் இப்பகுதியில் விளக்கப் பெறுகிறது.

**5. 1. ஆற்றேன் எனல்**

தோழி, தலைவியை ஆற்றியிருக்க வேண்டும்; ஏன் இவ்வளவு துன்பம் அடைகின்றாய்? என வினவத் தலைவி, "நம் தலைவன் இழிந்த"[86] பொருள் ஈட்டச் செல்வேன் எனப் பல முறை கூறினார். அது பொய் என்று கருதி யானும் செல்வீர் என்றேன். அவர் மெய்யாகச் சென்றுவிட்டார். இப்பொழுது என் கண்ணீர் நிறைந்து, என் மார்பு குளமாயிற்று. இதனை,

'சேறும் சேறும் என்றலின் பண்டைத் தம்
மாயச் செவாச் செத்து மருங்கு அற்று
மன்னிக் கழிக என்றேனே அன்னோ
. . . . .   . . . . .   . . . . .   . . . . .
ஆசு ஆகு எந்தை யாண்டு உளன் கொல்லோ
. . . . .   . . . . .   . . . . .   . . . . .
பெருங் குளம் ஆயிற்று என் இடைமுலை நிறைந்தே'

(குறுந்: 325)

எனும் அடிகளின் வழி உணர்த்துவள். "என் உடம்பானது முசுண்டை என்பவனின் வேம்பி என்ற ஊரைப் போன்று ஆகி ,"[87] "கூதிர் காலத்தில் தனிமைத் துன்பத்தை அனுபவிக்கும் கொடுமைக்கும் ஆட்பட்டுள்ளேன்."[88] இதனால் உறக்கம் நீங்குவதற்குக் காரணம் ஆகி 'பாலை நிலத்தில் மனிதர் நீங்கிச் சென்ற வீட்டில் அணிலாடு முற்றத்தைப் போல பொலிவிழந்து வருந்துகின்றேன்' என்பதனை,

'மக்கள் போகிய அணில் ஆடு முன்றிற்
புலப்பில் போலப் புல்லென்று
அலப்பென் தோழி அவர் அகன்ற ஞான்றே'(குறுந்: 41: 4-6)

என்பள். மற்றும், "நம் உயிர்க்கு உயிராய் அமைந்த தலைவர் பிரிந்ததால் கொற்றவையைப் பரவுதல் முதலிய செயல்களால் பயன் ஒன்றுமில்லை."[89] அதனால் "பசுவின் வரவினை நோக்கிக் கன்றுகள் தலை தூக்கிப் பார்த்து வருந்துவது போன்று யான் வருந்துகின்றேன்."[90] தலைவனை நினைந்தால் உள்ளம் வெந்து நிற்கிறது; நினையாமல் இருத்தல் என் ஆற்றலுக்கு உட்பட்டதன்று. காமநோயின் வருத்தமானது வானத்தைத் தொடும் அளவினதாக இருப்பதை,

'வான் தோய்வற்றே காமம்

சான்றோர் அல்லர் யாம் மரீஇயோரே' (குறுந்: 102: 3-4)

எனக் குறிப்பள். ஆயின் "தலைவன் எம்முன் காட்டை அடைந்தாராயின் முயக்கத்தை அவரும் பெறுவர். என் கண்களும் துயிலினைப் பெறும்"[91] எனக் கூறுவள்.

## 5. 2. ஆற்றாமைக்குக் காரணம் தெரிந்தோதியது

தோழி நான் "என் நோயைப் பொறுத்து ஒருவாறு ஆற்றுவேன்."[92] இருப்பின் 'காட்டைக் கடந்து சென்ற நெறியின் தீமையை எண்ணும் போதும்,' "கான்யாற்று நீரை உண்ணும் பொருட்டு எம்முடன் வரவல்லாயோ"[93] எனக் கூறுமிடத்தும் குன்ற நாடனைக் கண்ட என் கண்கள் என்வரை நிற்றலின்றித் தலைவன்பால் தமக்குரிய உரிமையால் தாமாகவே அழுவதனை,

'யாம் எம் காமம் தாங்கவும் தாம்தம்

கெழுதகைமையின் அழுதன தோழி

. . . . .  . . . . . . . . . .  . . . . .

குன்ற நாடற் கண்ட எம் கண்ணே' (குறுந்: 241: 1-2,7)

என்றும், "என் அழகு வீணாகும்படி பசலை உண்டாக,"[94] "வளையல் நெகிழவிட்ட தோள்களே தவறுடையன"[95] என்றும் ஆற்றாமைக்குக் காரணங்களைத் தலைவி எடுத்தோதுவள்.

### 5.3. புலந்து மறுப்பேன் எனல்

தலைவன் பிரிந்து தனித்து உறையுமிடத்து உயிரினங்கள் துணையோடு மகிழ்ந்திருப்பதை அறிந்தும் இவளைப் பிரியின் இவள் நிலை என்னவாகும் என்று கருதாது, தலைவன் பிரிந்தான். "பிரிந்தவன் மீண்டும் வந்தால் அலங்கரித்த எம் கூந்தலை விடுக, எம்மைத் தொடுதல் ஒழிக" என்பதனை,

'பொம்மல் ஓதியும் புனையல்

எம்முந் தொடாஅல் என்கு வெம்மன்னே'(குறுந்: 191: 6-7)

என்று புலந்து கூறி மறுப்பேன் என மொழிபள்.

### 5. 4. முடிந்த வரை ஆற்றியிருக்க முயல்வேன்

தோழி "தாம் கூறிய சூள் பழுதாகும் என்று கூட அஞ்சாது ஊரெங்கும் பறையறைந்தாற் போன்று பழியுண்டாகப் பிரிந்து சென்று விட்டார்."[96] எனவே குன்றிடை பொருந்திய வழியில் தலைவர் சென்ற நாட்டுக்குச் சென்றால் என்ன? என்பதை,

'குன்று விலங்கு இயவின் அவர் சென்ற நாட்டே'(குறுந்: 309: 17) எனக் கூறுவள்.

### 5. 5. ஆற்றுவேன் எனல்

தலைவன் பிரிவை ஒருவாறு ஆற்றுவேன். எவ்வாறெனில் தலைவன் பிரிந்து உறையுமிடத்து தம் பிள்ளைகளோடு குருவிகள் மாலைப் பொழுதில் சேர்ந்திருப்பதைக் கண்டு, தாமும் தம் மகவொடும், தலைவியொடும் சேர்ந்துறைதல் வேண்டும்"[97] என்ற எண்ணத்தாலும் சந்திரன் தோன்றிக் கார்த்திகையைச் சேரும் நள்ளிரவில் நம்முடன் விழாவினைக் கொண்டாடத் தலைவன் வருவான் என்பதிலும் ,

' . . . . .  . . . . .  . . . . மதிநிறைந்து
அறுமீன் சேறும் அகல் இருள் நடுநாள்
மறுகு விளக்குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவு உடன் அயர வருகதில் அம்ம'(அகம். 141: 7-11)

என்ற நம்பிக்கையிலும் "என் உள்ளம் அவன் கேண்மையில் பற்றுடைத்தாகலின்"[98] அவன் செய்த தண்ணளியை நினைந்து நான் ஆற்றியிருப்பேன் என்று கூறுகிற நிலையில் ஆற்றுவள் என்ற தலைவியின் உறுதி வெளிப்படக் காணலாம்.

### 6. பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கூறல்

பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கூறல் எனும் இத்துறையுள் "முப்பத்தாறு செய்யுட்கள்"[99] அமைக்கப் பெற்றுள."களவின்கண் தோழி ஆற்றுவிக்கும் போது பொதுவாகத் தலைவன் வரைவான் என்றும், கற்பில் ஆற்றுவிக்கும் போது தலைவன் விரைவில் வருவான் என்றும் ஆற்றுவிக்கும் போக்குக் காணப் பெறுகிறது. இன்பம் வரும் போது துணை வாய்த்தால் அந்த இன்பம் இருமடங்காகும். துன்பம் வரும் போது துணை வாய்த்தால் அத்துன்பம் பாதியாய்க் குறையும்."[100] ஆற்றுதலே அறிவுடைமை என வற்புறுத்திய தோழிக்குத் தலைவி, தலைவர் இனியவர்; நமக்கு நல்லவற்றையே கூறினாலும் "திதியன் வாள் போன்று கூர்மையுடைய,"[101] பாலை வழியைக் கடந்து சென்றதனை,

' . . . . . . . . . . . . . . . திதியன்

வேளிரொடு பொரீஇய கழித்த

வாள் வாய் அன்ன வறுஞ்சுரம் இறந்தே'(அகம்: 331: 12-14)

எனக் கூறுவள். ருமலும், அவர் ஈட்டக் கருதியது பொருளையே;"[102] இதனால் தலைவர் மாவின் தளிர் போன்ற பாவையையும் எம்மையும் "நினையாமல்"[103] "என் நலனை உண்டு பிரிந்தவர்."[104] "பெண் யானை யாமரத்தின் பசை காணாது பிளிரும் நிலை கண்டும்,"[105] "இளவேனிற் பருவத்தில் குயில் கூவுதல் கேட்டும்"[106] வாராதவர் "கார் காலத்தில் மீள்வேன் என்று கூறிய கூற்றும் பொய்த்தமையால்"[107] யான் "கூத்தர் ஆடிப் பின் நீங்கி விட்ட மன்றத்தைப் போல் துன்பம் அடைந்தேன்"என்பள். இதனை,

'பல் ஊர் பெயர்வனர் ஆடி ஒல்லென
தலைப் புணர்த்து அசைத்த பல் தொகைக் கலப்பையர்
இரும்பேர் ஒக்கல் கோடியர் இறந்த
புன்தலை மன்றம் காணின் வழிநாள்
அழுங்கல் மூதூர்க்கு இன்னாதாகும்'(அகம்: 301: 21-25)

என்று மொழிந்து மேலும், "கரிகால் வளவன் மகள் ஆதிமந்தியைப் போல் வருந்தியிருக்க"(109) "வாடைக் காற்றினால் தொழுவில் உச்சியில் கட்டப்பட்ட பசு போன்று" "துன்பத்தையும் பெற்று" வாழ்வதனை,

'இரைக்கும் வாடை இருள் கூர் பொழுதில்
துளியுடைத் தொழுவின் துணிதல் அற்றத்து
உச்சிக் கட்டிய கூழை ஆவின்
நிலை என' (நற்: 109: 6-9)

என வினவி, அத்தோடு "மாலைக் காலமும் வருத்தம் செய்கிறது"(110) என மொழிவள்.

இவையெல்லாம் மெல்ல நீந்துவோமாயின் "இரவென்னும் வெள்ளமோ கடலினும் பெரிதாகி என்னை வருத்துகிறது."(111) இதனால் நான் வலியிழந்து வருந்த "நீ காமத்தின் இயல்பறியாது என்னைக் கடிவது முறையன்று" என்பதை,

'காமம் தாங்குமதி என்போர் தாம் அஃது
அறியார் கொல்லோ' (குறுந்: 290: 1-2)

எனத் தலைவன் பிரிவை ஆற்றியிரு எனக்கூறிய தோழியிடம் "எருமையின் கழுத்து மணி ஒலிக்கின்ற இரவுக்காலத்திலும் அவன் வரவில்லை."(112) ஆதலின் அவன் "அன்பில்லாதவன்;"(113) "குடியோம்பிக் கொள்ளாக் கொடுமையன்;"(114) அவனுடைய செயலால், யான் "பாறையின் மேல் மோதிச் சிதறும் சிறிய துளியைப் போல மெல்ல இல்லாமல் ஆவேன்," என்பதனை

'யாம் எம் காதலர்க் காணேம் ஆயின்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
கல் பொரு சிறு நுரை போல

மெல்ல மெல்ல இல்லாகுதுமே' (குறுந்: 290: 3-6)

எனக் கூறுவாள். அதனால் "நம் தலைவர் நாம் இல்லையாயினும் பொருள் ஈட்டுக என்று வெறுத்துப் பேசாதே; என் மேனி அழகு கெடுவதை நோக்கி வருந்தாதே."(115) இதனைப் போக்க வழியொன்று உளது; யாதெனின் நம் துன்ப மிகுதியை அவர்க்கு உரைத்தும் அவர் வாராராயின் அவர் தம் வருகையை உணர்த்த ஒரு தூது அனுப்ப நினைத்தலை,

'சென்ற தேஎத்துச் செய்வினை முற்றி

மறுதரல் உள்ளத்தர் எனினும்

குறுகு பெரு நசையொடு தூது வரப்பெறினே' (அகம்: 333: 20-22)

எனக் கூறி, இதனால் நம் பசலை மறையும் என்பள்.

## 6.அ.ஆற்றாமைக்குக் காரணம் வேறு எனல்

தோழி, தலைவியிடம் நீ இவ்வாறு ஆற்றாமல் இருப்பது ஏன் என வினவியமைக்குத் தலைவி, "பிரிந்த தலைவர் என்னை நினைந்து வருவார் என்று கூறிய சொல்லை ஏற்று ஆற்றுவேன்."(116) ஆயின் காட்டு மல்லிகையுடன் முல்லைப் பூக்களையும் அப்புறப்படுத்தி என் கூந்தல் பாயலில் தலைவன் உறங்கியதை,

'தேம் பாய் முல்லையொடு ஞாங்கர்ப் போக்கி

தண் நறுங் கதுப்பில் புணர்ந்தோர்' (அகம்: 391: 5-6)

என்பள். ஆயின், என்றும் முலையிடத்துத் துய்த்து அதனை வெறுத்தவரும்,"(117) "போர்க்களம் போல் காணப்பெறும் கரந்தை வீரர்களின் நடுகற்களும், பேய்த்தேரும், மின்மினிப் பூச்சி போலும் பருக்கைக் கற்களும், யாழ்க் கொம்பை ஒடித்து வீழ்த்தியது போல் கொன்றைக் காய்களும்"(118) உடைய "பாலை வழியை எந்த ஊறுமின்றிக் கடந்தனரோ?"(119) என்று யான் ஆற்றாது இருக்க, "அவரால் புனையப்பட்ட முச்சியைக் காணுந்தோறும் முன்பு உள்ள என் பழைய அழகு நினைக்கப்பட்டு"(120) "கண்கள் துயிலாது கண்ணீர் சிந்துகின்றது.(121) "இச்செயல் பலர் அறியும்படி அம்பலாகி அமைந்து

விடின்,"[122] என் "நலன் அழியினும்,"[123] "சாதல் நேரினும் அஞ்சேன் ஆயின்,"[124] "நான் இறந்த பிறகு பிறப்பு வேறொன்றாகி என்னைப் பெரிதும் வாட்டும் என்பதனால் ஆற்றாளாவதை,

'. . . . .   . . . . .   யானே ஈங்கோ
சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவின்
பிறப்புப் பிறிது ஆகுவது ஆயின்
மறக்குவேன் கொல் என் காதலன் எனவே' (நற்: 397: 7-10)

எனக் கூறுவள். இருப்பின், "தலைவன் காவிரிப்பூம்பட்டினத்துப் பெருஞ்செல்வம் போன்று பெற்று,"[125] "நோய் இல்லாதவராய்த் திரும்பி வரவேண்டும்"[126] எனும் உணர்வும் உணர்த்தப் பெறுகிறது.

### 7. தலைவி பருவங்கண்டு அழிதல்

தலைவி பருவங்கண்டு அழிதல் எனும் இத்துறை மேல் "நாற்பத்தாறு"[127] பாக்கள் தலைவி கூற்றில் உள. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்று ஆறு பருவங்கள் இருப்பினும் காரும் இளவேனிலுமே தலைவன்மார் வீடு திரும்புவர் என்று தலைவிமார் வரவு பார்த்திருக்கும் பருவங்களாகும். இவற்றில், "பிரிவைத் தலைவனுக்கு உரித்தாக்கும் போது காட்டும் கோடைக் காலம் பின்னணியாகக் காட்டப்படுகிறது. அதைத் தலைவிக்கு உரித்தாக்கும் போது நடுங்கும் கூதிர் காலமோ, கொட்டும் மழைக்காலமோ, இன்ப இளவேனிலோ பின்னணியாகக் கூறப்படுகிறது."[128] பாலைத் திணைப் பாக்களை இளவேனிற் காலம் புனைவது போல முல்லைத் திணைப் பாக்களைக் கார்காலம் புனைந்துரைக்கின்றது. தலைவன் மேற்கொண்ட வினையை முடித்து வீடு திரும்புகின்றான் என்பது பற்றிய முல்லைப் பாடல்களில் உள்ள செய்திகளைப் பின் வரும் உட்தலைப்புக்களின் வழிக் காணலாம்.

### 7.1. கார்ப்பருவம் கண்டு அழிதல்

மேகம் கடலில் நீரை முகந்து "மலைகளில் முகிலினைத் தவழச் செய்து பெரிய மழையைப் பொழிந்தது; இடியைப் பலமுறை

இடித்தது."[129] இத்தகைய மழைப் பொழிவானது, "ஆண் யானைகளை நெடுமான் அஞ்சி தன் புகழ் விளங்கத் தேர்களோடு சேர்த்து பரிசிலர்க்குக் கொடுக்கின்ற நாளோலக்கம் போல்" இருந்தமையை,

'கடும்பகட்டு யானை நெடுமான் அஞ்சி
ஈர நெஞ்சமொடு இசைசேண் விளங்கத்
தேர் வீசு இருக்கை போல
மாரி இரீஇ மான்றன்றால் மழையே' (நற்: 381: 7-10)

என விளக்குவள். இதனால், "பள்ளங்கள் தோறும் நீர் நிறைந்து தேரைகள் ஒலி எழுப்பின."[130] அவைகள் "அணிகலன்களைத் தொங்க விட்டாற் போல் அழகுடன் கொன்றைக் காட்சி கொடுத்தன."[131] நிலப் பகுதியில் "தோன்றிச் செடிகள் விளக்கைப் போன்று மலர்ந்திருந்தன."[132] முல்லைக் கொடிகளில் "முல்லை அரும்புகள் மலர்ந்து முல்லை நிலங்கள் அழகு பெற்றன."[133] இம் முல்லைப் பூக்களின் அரும்பு "பற்களைப் போல்"[134] காட்சி தருகின்றது. மற்றும் "இம்முல்லைக் கொடிகள் செம் முல்லைக் கொடிகளைப் பற்றுக் கோடாகத் தழுவிக் கொண்டு நிலா போன்ற வெண்மையான அரும்புகளை"[135] உடையதாயின.

உழவர்கள் "தன் வட்டிலில் பூவால் நிரம்பும்படிப் பல மலர்கள் மலரத் தொடங்கி,"[136] "பிடவின் மணத்தை வாடைக் காற்று தூற்றும்"[137] நிலை உருவானது.

"கொன்றை மரம் குருந்த மரத்தொடு சேர்ந்து சுழலும் தன்மையால்,"[138] "கொன்றைக் காய்கள் பழுத்து உதிரும் அளவிற்கு இடையறாது பெருங் காற்றோடு மழை பொழிந்தமையால் பசுமையும் ஒளியும் மழுங்கிக் "[139] காட்சி தருகிறது.

"களை எடுக்கும் உழவர் நிலை இரலை மானின் கொம்பு போன்றும்,"[140] "மயில்கள் குருந்த மரத்தில் அமர்ந்து கிளியை ஓட்டும் மகளிர் போல் ஒலி எழுப்பும்"[141] தன்மையும் உடையதாயிற்று.

வன்மையுடைய "பரலில் நீரைப் பருகி, தன் காதல் துணையோடு இரலை மான் துள்ளி ஆடும்"[142] பாங்கும் கார்காலத்தின் புனைவை எடுத்து இயம்புகின்றது. இவ்வகைப் பாடல்களில் காரும் போரும் இணைந்து வருதலைக் காணமுடிகின்றது. "வினை முற்றிய தலைமகன் என்ற தொடருக்குப் பொருள் ஈட்டும் வினையை முடித்தவன் என்றோ போர் செய்யும் வினையை முடித்தவன் என்றோ, பொருள் கொள்ளலாம்."[143] ஏனெனின்,

"பண்டைத் தமிழ் அரசர்கள் கார்காலத்திற்குள் திறை கொடுத்தோ, திறை வாங்கியோ போரைச் சந்து செய்து கொள்வர்; அல்லது போரை நிறுத்தி வைப்பர். ஆவணி தொடங்கி ஓயாப் பெரு மழைக் காலத்தில் போரிட இயலாது; நாற்படையும் வலியொடு இயங்கமாட்டா; ஆதலின் இரு நில மன்னர்களும் காரின் தொடக்கத்துப் போரை நிறுத்தி விடுவது முறையும் அறமும் ஆயிற்று."[144]

போர் நின்றவுடன் "வேந்தரும் மற்றவரும் தத்தம் வீடு நோக்கி மீளுதல் வழக்கம்; தலைவர் திரும்பி வருவர்"[145] என்று தலைவியின் எதிர்பார்ப்பும், கார்காலத்து வருவேன் என்று தலைவன் கூறிய கூற்றைச் சொல்லிக் கூதிரிலாவது வரமாட்டானா எனப் புலம்பி, யானே காமத்தீயினால் 'கரையை மோதி ஓடி வருகின்ற கான்யாற்றின் கரையில் வேர்கள் அலசப்பட்டுக் காற்றால் அலையும் மாமரத்தின் தளிர் போல நடுங்கும் நெஞ்சுடன்' வாடுவதனை,

'கரை பொருது இழிதரும் கான்யாற்று இகுகரை
வேர் கிளர் மராஅத்து அம் தளிர் போல
நடுங்கல் ஆன நெஞ்சமொடு' (நற்: 381: 3-5)

எனும் அடிகளின் வழி மொழிவள். மற்றும் நான் படும் துன்பநிலையைக் கண்டு வைத்தும், "தலைவனை அழைத்து வராத மேகமே, நீ எனக்கு நல்லவை அல்ல."[146] அவன் வரவு குறித்த என் "கண்கள் உறக்கத்தைத் துறந்து"[147] நீண்ட விழிகளில் நீர் உகுக்கத் தொடங்கின[148] என்பள்.

தலைவன் வருவான் என எதிர்பார்த்து என் மேனியானது பீர்க்கம் பூ போல் பசலை பாய்ந்தன. இதனை,

‘பகை வெங் காதலர் திறைதரு முயற்சி

மெல் தோள் ஆய்கவின் மறைய

பொன் புனை பீரத்து அலர்செய் தன்றே’ (ஐங்: 452: 3-5)

என உரைப்பள். மற்றும் தன் “தோள்கள் மெலிந்து பேரழகினை இழந்து விட்டது.”(149) இதற்கு உறுதுணையாக “மாலைக் காலமும் வந்து வருந்தச் செய்கிறது.”(150) அது மட்டுமன்று; “துணையைப் பிரிந்திருப்போருக்கு விடியற் காலமும், பகற் காலமும் யாமமும் மாலைக் காலமாகும்”(151) இவைகள் ஆறாத் துன்பத்தைத் தருகின்றன.

நாட்டிற்கு நாடு பருவம் வேறுபடுவது போல தலைவன் நாட்டில் இன்னும் கார்காலம் வரவில்லையோ என்பதனை,

‘இலங்குவளை நெகிழ்த்த கலங்குஅஞர் எள்ளி

நகுவது போல மின்னி

ஆர்ப்பது போலும் இக்கார்ப் பெயற்குரலே’ (நற்: 214: 10-12)

எனக் கூறுவள். ஆதலின் “அவர்பாற் சென்று அவர் கூறிய பருவம் வந்துவிட்டமையையும், அதனால் யான் உறும் வருத்தத்தையும் அறிவிப்பாராயின் நன்று.”(152) இல்லையெனில் யான் உயிர் வாழ்வதற்கு இயலாதவளாய் ஆகிவிடுவேன்.”(153) இதனை,

‘உய்யேன் போல்வல் தோழியானே’ (குறுந்: 108: 5)

எனத் தலைவி தனிமையை நினைத்துப் புலம்பும் இப்பருவம் துன்பத்தைத் தூபமிட்டாற் போல் பெருக்குகின்றது எனச் செப்புவள்.

### 7.2. கூதிர்ப் பருவம் கண்டு அழிதல்

தலைவி கூதிர்ப் பருவம் கண்டு அழிவதாக “ஐந்து”(154) பாக்கள் அமைந்துள.

தலைவன் வினைமுடியாமையின் மன்னனுக்குத் துணையாக நின்று ‘கார்காலம் மறைந்து கூதிர்காலம் வந்தும் வரவில்லை’ என்று தலைவி ஏங்கித் தவிக்கின்றாள். பகுத்தறிவு இல்லாப் பறவையும் பிரிவறியாத இப்பருவத்தினை,

‘குருகினம் நரலும் பிரிவருங் காலை’ (ஐங்: 457: 3)

என்பள். "அணிகலன்களை அணிந்த பெண்கள் போலக் கொன்றைக் காடு அழகு பெறப் பூத்துள்ளது. மழையின் வரவை எதிர்நோக்கி ஏறுழ் மரத்தின் மலர்கள் பரந்து கிடக்கின்றன."(155) "வாடைக் காற்றானது வாழையின் அடிப்பகுதி அசையும்படி பெரிதும் வீசுகின்றது."(156) "இவற்றையெல்லாம் தலைவன் அறியவில்லையோ; அறிந்திருப்பின் திரும்பி விடுவார்."(157)

"தலைவன் வாராமைக்குக் காரணம், வினை நீட்டித்தலேயன்றி, அவர் அன்பின்மை அன்று; இருப்பின் அவரை நினைத்தவுடன் என் நெஞ்சம் உருகுகின்றது."(158)

பிரிவின் ஆற்றாமையாலே வருந்தும் நம்மை 'இவ்வாடை மேலும் இறந்தபாடு செய்யும் இன்னாமை செய்வதனால் தலைவி எத்தன்மையானாளோ என்று நினைத்துக் கவலையுறாத தலைவர் வந்தாலும் வராவிட்டாலும் நமக்கு எத்தகைய உறவினர் ஆவர்.' அவர் வருவதற்குள் நாம் இறந்து படுவோம். இதனை,

'வாரார் ஆயினும் வரினும் அவர் நமக்கு
யார் ஆகியரோ தோழி . . . .     . . . . .
. . . .  . . . .   . . . .  . . . .   . . . .
இன்னாது எறிதரும் வாடையொடு
என் ஆயினள் கொல் என்னாதோரே' (குறுந்: 110: 1-2, 7-8)

எனக் கூதிர்ப் பருவம் கண்டு தலைவி வருந்திக் கூறுகின்றாள்.

### 7.3. இளவேனிற் பருவங் கண்டு அழிதல்

தலைவி கூற்றில் இளவேனில் பருவம் வந்தும் தலைவன் வரவில்லை என்ற வருத்தமும் அப்பருவப் புனைவும் "பதினான்கு"(159) பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

தலைவன் குறித்த இளவேனிற் பருவத்தில் திரும்பி வருவதாகச் சொல்லிச் சென்றான். அவன் கூறிச் சென்ற இளவேனிற் பருவத்தில்,

"குயில் பேடு தனது இனிய குரலாலே தன் காதல் துணையை அழைக்கிறது."(160) "குராமரம் ஈன்ற நறுமலர் பேதை மகளிர் மகவாகக் கொண்டு விளையாடுகின்றனர்."(161) "காற்றால் வீழ்தல் இல்லாத

கோங்கு மரம் அரும்பி நிற்கிறது. "[162] "செம்முருகு, சணா மரங்களின் பூங்கொத்தில் உள்ள மதுவை வண்டுகள் சிந்துமாறு உண்டு இசைபாடுகின்றன."[163]

"பாதிரி மரங்கள் நன்கு மலர்ந்து மணம் வீசுகின்றன."[164] "நெற்பொறி போன்ற பூக்களை உடைய புன்க மரம் இளந்தளிரை உடையதாக"[165] விளங்குகிறது. புனலிக் கொடி நிலமகள் கூந்தலுக்கு மலர்சூட்டி அணி செய்வதனை,

'புதுப்பூ அதிரல் தாஅய்க்

கதுப்புஅறல் அணியுங் காமர் பொழுதே' (ஐங்: 345: 2-3)

எனக் கூறுவள். "மராமரம் இலையுதிர்த்துத் தன் கிளைகள் அனைத்திலும் நிரம்ப மலரும் இயல்புடையது."[166] "மாமரத்தின் கிளைகள் மறைந்து போகும்படித் தீப் போன்று ஒளி வீசும் தளிர்களைத் தோற்றுவித்துளது."[167] "வேம்புகள் மலர்ந்து அவை சூடப்படாமல் ஒழிந்து கிடக்கின்றன."[168] இவை யாவும் தலைவிக்கு இளவேனிற் பருவம் வந்ததை நினைவூட்டுகின்றன. ஆயின் தலைவன் இன்னும் வரவில்லை. யான் எங்ஙனம் ஆற்றுவேன்? என்று தலைவி கூறிப் புலம்புகின்றாள்.

மேற்குறித்த இளவேனில் வருகையைக் காட்டிலும் தலைவி கொடுமையாக எண்ணுவது 'பூ விற்கும் உழவன் மகள் வட்டிலில் மலர்களை ஏந்தி வந்து கூவுவது' என்பதனை,

'பித்திகை விரவுமலர் கொள்ளீரோ என

வண்டு சூழ் வட்டியள் திரிதரும்

தண்டலை உழவர் தனி மடமகளே' (நற்: 97: 7-9)

என்று வெந்த புண்ணில் வேல் பாய்ந்தது போன்று உளது என மொழிகின்றாள்.

### 8. பருவங் கண்டு ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கூறல்

தலைவன் யான் இன்ன பருவத்தில் மீண்டு வருவேன்; ஆற்றியிரு எனக் கற்பித்த சொற்படி தலைவி ஆற்றியிருந்தாள். தலைவன் குறித்த பருவம் வந்தது; ஆயின் தலைவன் வரவில்லை. அதுகாறும் அரிதின்

ஆற்றியிருந்த தலைவி இனி ஆற்றாள் எனத் தோழி கவல்வதைக் குறிப்பால் அறிந்து தலைவி கூறுவதாக "ஒன்பது பாடல்கள்"[169] அமைந்துள.

தலைவியின் நிலை கண்டு கவன்ற தோழியை நோக்கித் தலைவி, 'தலைவரோ பொருள் ஈட்டலைக் கருதிப் பிரிந்து போயினர். அவரை நினைந்து நினைந்து நான் வருந்தி நின்றேன். அவ்வமயம் மழையானது எனக்கு இரங்காது என் உயிர் குறித்து மின்னி நின்றது.' இச்செயலைத் தலைவி,

'அன்னள் அளியள் என்னாது மாமழை
இன்னும் பெய்யும் முழங்கி
மின்னும் தோழி என் இன்உயிர் குறித்தே' (குறுந்: 216: 5-7)

எனக்கூறி, ஆயின் "இவ்வூர் பெரிதும் இரங்கி அவரைப் பழி தூற்றுகின்றது."[170] இத்தகைய செயல்கள் கண்டு யான் எங்ஙனம் ஆற்றுவேன்? என்பள் தலைவி.

கார்காலமோ போலிக் கார்காலமாக இருக்கிறது. "பிச்சி அரும்புகள் தாம் சிவக்க வேண்டிய காலத்துக்கு முன்பு சிவந்து காட்சி தருகின்றன."[171] இருப்பின் யான் மயங்க மாட்டேன். ஆயின் வினைவயிற் சென்ற தலைவர் மழை ஏற்படுத்தும் இடிகுரல் கேட்டு வினை முடிக்காமல் மீள்வாரோ எனும் அச்சத்தினை,

'பெருந் தண் மாரிப் பேதைப் பித்திகத்து
அரும்பே முன்னும் மிகச் சிவந்தனவே
யானே மருள்வென் தோழி பானாள்
இன்னும் தமியர் கேட்பின் பெயர்த்தும்
என் ஆகுவர் கொல் பிரிந்திசினோரே
கருவி மாமழைச் சிலை தரும் குரலே' (குறுந்: 94)

என வருந்துகின்றேன் எனத் தலைவி மொழிதலில் தலைவனுக்காக இரங்கியதும் உணர்த்தப் பெறுகிறது.

"கொன்றை பூத்து இது கார்காலம் எனக் கூறினும் யான் அதனை நம்பேன். அவர் பொய் கூறுவார் அல்லர்."[172] ஏனெனின்

அவர் சென்ற நாட்டிலும் கொன்றை மலர்கள் நமது பசப்பினை அவர்க்கு நினைவூட்டும் தன்மையை,

'சென்ற நாட்ட கொன்றைஅம் பசுவீ

நம் போல் பசக்கும் காலை' (குறுந்: 183: 1-2)

என உணர்த்துவள். ஆதலின், நம் அன்பு நிலை தெரிந்து விரைந்து வராத தலைவருக்காக, கடவுள் வழிபாடு, நிமித்தம் பார்த்தல் போன்றவை செய்து என்ன பயன் என்பதை,

'விர்முகை அடுக்கத்து விறல் கெழு சூலிக்குக்

கடனும் பூணாம் கைந்நூல் யாவாம்

புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம்' (குறுந்: 218: 1-3)

எனும் அடிகளில் உணர்த்துவள். இருப்பின், "பெண்மானைப் பிரிந்த ஆண்மானையும் அவர் ஆண்டுக் காண்பர். ஆதலால் நம்மை நினைத்து விரைவில் மீண்டு வருவார். நீ கவலற்க."[173] தலைவனின் பிரிவு நோயை ஒருவாறு ஆற்றுவேன். ஆயின் "உன்நிலை எனக்கு ஆற்றாத துன்பம் தருகின்றது."[174] இருப்பின், பெரியோர்கள் தம் நெஞ்சத்தில் நினைத்த ஆண்மைச் செயலை மீறிச் செல்லுதல் தவறென்று எண்ணி முன்னர்த் துணியாத என் நெஞ்சம் பின்னர்த் துணிந்து தறுகண்மையால் உயிரோடு வாழ்வதனை,

'. . . . . . . . . . பெரியோர் நெஞ்சத்துக்

கண்ணிய ஆண்மை கடவது அன்றுஎன

வலியா நெஞ்சம் வலிப்ப

வாழ்வேன் தோழி . . . . . . . . .' (குறுந்: 341: 4-7)

என மொழிகின்றாள்.

9. பருவங்கண்டு அழிந்த தலைவியை வற்புறுத்தும் தோழிக்குக் கூறல்

பருவ வரவின் கண் ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தும் துறையாக "ஒன்பது பாடல்கள்"[175] அமைந்துள.

பிரிவிடை வேறுபட்ட தலைவி வற்புறுத்தும் தோழியிடம் பருவம் காட்டி "தோழி இது பருவமன்று, வம்பு என்கின்றாய். இல்லை இது கால மாரியே,"[176] "விசும்பில் முகில்கள் சூழ் கொண்டு, மின்னி மழை பெய்யும்" சூழலை,

'சேயுயர் விசும்பின் நீர் உறு கமஞ்சூல்
தண்குரல் எழிலி ஒண்சுடர் இமைப்ப
பெயல் தாழ்பு' (குறுந்: 314: 1-3)

எனப் பருவம் வந்தமையை உணர்த்துவர்.

"நீர் பெருக்கெடுத்து ஓடி, கூதிர்ப் பருவம் வந்தது. இடையர் பசுக் கூட்டத்துடன் மீண்டு வந்தனர்."[177] "ஆண் மான்கள் பிணைகளைத் தழுவிக் கொண்டு ஒடுங்குகின்றன. களிற்று யானைகள் பிடி தழுவி மலையிடத்தை எய்தின."[178] "காமநோயை விடுவிக்கும் மாலைப் பொழுதும் வந்தது."[179] "முல்லை மலர்கள் மலர்ந்து இடைமகன் தலையில் சூடுவதற்கு ஏதுவாயிற்று."[180] "வேங்கை மரத்தின் முதல் மலரும் தோன்றி விட்டது."[181] முன்னர்த் தம்முடைய கூந்தலைக் கையால் கோதி, நாம் வருந்தும் போது கண்ணீரைத் துடைக்கும் அன்புடைய நம் தலைவன் வரவில்லை என்பதை,

'வார் உறு வணர் கதுப்பு உளரி புறஞ்சேர்பு
அழா அல் என்று நம் அழுத கண் துடைப்பார்'(குறுந்: 82: 1-3)

என்று நம் தலைவர் கூதிர் காலத்தும் வராமல் மன்னர் பாசறையில் தங்கியமையால் வாடையால் யான் துன்புறுகின்றேன் என்பள். இந்நிலையை,

'இந்நிலை களைய வருகுவர் கொல் என
ஆனாது எறிதரும் வாடையோடு'(அகநா: 294: 14-15)

என்பள். மற்றும் "இதோ வருகின்றார் என்று நமக்கு அறிவிக்கும் தூதரே இன்னும் வந்திலாமை"[182] கண்டு யான் எங்ஙனம் ஆற்றுவேன்? என்பள்.

### 10. கற்பில் வன்புறை

கற்பில் வன்புறை குறித்த தலைவி கூற்றுப் பாடல்கள் "ஒன்பது"[183] ஆகும். இவற்றில் வினைவயிற் பிரிந்த தலைவனை நினைந்தும் பரத்தையிற் பிரிந்த தலைவனை நினைந்தும் வன்புறை எதிரழிந்து தலைவி மொழிகின்றாள்.

அ. வினைவயிற் எழுந்த வன்புறை

தலைவன் நாடு காவல் தொழிலை விடுத்துத் தன் வினை ஒன்றையே கருதிச் செல்வதனை,

'செந்நீர்ப் பொது வினைச் செம்மல் மூதூர்த்

தமது செய் வாழ்க்கையின் இனியது உண்டோ?'(நற்: 130: 4-8)

என மனம் கொண்டு, "நிலையற்ற பொருளை வேண்டி"[184] வேற்று நாட்டில் உளர். அவர் என்னை நினைத்திருப்பின் எனக்குப் புரையேறும் அன்றோ; ஆதலின் அவரோ நினையாதவர் ஆனார். இதனை,

'உள்ளார் கொல்லோ தோழி

நில்லாப் பொருட் பிணிப் பிரிந்திசினோரே'(நற்: 241: 11,12)

எனச் செப்பி, அத்தகையர் "இளவேனிற் பருவம் வந்தும் வந்திலர்."[185] நான் இப்பொழுது "பனி, குளிர் இவற்றால் வருத்தம் அடைந்துளேன்."[186] பனை மரத்தில் வாழும் நாரை துணையைப் பிரிந்த போது நரலும். அது கேட்டு நான் சேற்றுக் குழம்பு போல என் மேனியில் பசலை ஊர, தளராத உடலைப் பெற்று உயிரோடு உள்ளேன்."[187] ஏனெனில் அவர் என் மீது காட்டிய அருளின் காரணமாக என்பள். இருப்பின் தாம் கூறிச் சென்ற பருவம் வந்தும் தலைவர் வந்திலர் என்பதை,

'. . . . . . . . . . . . . . . . ஈண்டு இவர்

சொல்லிய பருவமோ இதுவே . . . . . .' (குறுந்: 285: 3-4)

எனக் கூறுவள். மேலும், தலைவனை நினையாது இருத்தல் அரிது ஆதலின் ஆற்றாமையை நீக்கலும் அரிது ஆகியதை,

'. . . . . . . . . . . கடற் சேர்ப்பனை

உள்ளேன் தோழி படீஇயர் என் கண்ணே'(குறுந்: 243: 4-5)

என மொழிவள்.

ஆ. பரத்தையால் எழுந்த வன்புறை

தலைவனின் பரத்தமை ஒழுக்கம் காரணமாகத் தலைவி "தலைவன் பற்பலர் மாட்டும் துய்க்கச் செல்லுதல் போல என் மாட்டும் வந்தான்; விரும்பினோர்க்கு உதவாத அவனது மார்பை யான்

விரும்பவில்லை. அதனால் யான் வருத்தமும் அடையவில்லை. ” இதனை,

‘பயந்து எழு பருவரல் தீர

நயந்தோர்க்கு உதவா நார் இல் மார்பே’(நற்: 225: 8-9)

என்று வன்மையாகக் கூறுகின்றாள்.

**11. பிரிவிடை வற்புறுத்தும் பாணர்க்குக் கூறல்**

தலைவனைப் பிரிந்து தலைவி ஆற்றாது வருந்த, பாணன் ஆற்றியிருந்திடுக என்று வற்புறுத்தும் துறையில் அமைந்த பாடல்கள் நான்காகும்.”(188)

தலைவன் குறித்துச் சென்ற கார்ப்பருவம் வந்தும் தலைவன் வாராமையால் நான் வருந்தவில்லை. இடையர்கள் முல்லை மலர்களை மாலையாகத் தொடுக்கும், உயிர்களிடத்தும் அன்பு செய்தல் இல்லாத இம்மாலைப் பொழுது தலைவன் சென்றுறைந்த நாட்டில் இல்லையோ என்பதை,

‘அன்புஇல் மாலையும் உடைத்தோ

வன்புறைப் பாண அவர் சென்ற நாடே’(ஐங்: 476: 4-5)

என வருந்துகின்றாள். ஆதலின் “என் கையில் அணிந்த தொடலைக் குறுந்தொடி கழன்று விழும்படி செல்வதும், மாவடு போன்ற தம் அழகினை இழந்த கண்களையும் நோக்கி இரங்கும் இப் பாண் மகன் மாறுபட்ட பேரன்பை உடையவனாக”(189) விளங்குகின்றான். ஆகையின் உலகம் புகழும் நம் தலைவனிடம் செல்லும் பாணன் நம் இன்னா நிலையை அவர்க்கு உணர்த்துவான் என்பதை,

‘இன்னா அரும்படர் எம்வயின் செய்த

பொய்வலாளர் போலக்

கைவல் பாண எம் மறவாதீமே’(ஐங்: 473: 3-5)

எனக் கூறி, அது மட்டுமன்று; குற்றமற்ற எனது ஒளி நுதல் பண்டு போல் திகழும்படி, போர் மேற் சென்றுள்ள நம் தலைவனை நான் விரைந்து சென்று இப்பொழுதே அழைத்து வருவேன் எனக் கூறும் பாண் மகனது பண்பு மிகவும் சிறப்பிற்குரியதை,

‘சென்றவர்த் தருகுவல் என்னும்

